"ஸ்ரீ சங்கர க்ருபா அநுபந்தம்"

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥

# श्रीजगद्गुरुग्रन्थमाला-६





# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா

## 6

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு.

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

# श्रीजगद्गुरुग्रन्थमाला—६



# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா—6

(ஸ்தோத்திரம்)

ஸ்ரீ வாணி விலாஸ் பிரஸ்
ஸ்ரீரங்கம்

1962



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

# பதிப்புரை

ஸ்ரீ ஜகத்குரு சிருங்ககிரி ஸ்ரீ சாரதா பீடாதிபதிகளின் பரமாநுக்ரஹத்தால் ஸ்ரீ ஜகத்குரு கிரந்தமாலாவின் ஆருவது பாகம் இப்பொழுது வெளிவந்துள்ளது.

அத்வைத ஸித்தாந்தத்தை யாவரும் புரிந்து ஸ்வாநுபவம் பெற பாஷ்யங்களையும் பிரகரணங்களையும் இயற்றிய பகவத் பாதர்கள் அந்நிலையை அடையமுடியாதவர்களும் கிரமமாக சிரேயஸ்ஸை அடைய எல்லா தேவதா மூர்த்திகள் பேரிலும் ஸ்தோத்திரங்களை அருளியிருக்கிறார்கள். எல்லா தேவதா மூர்த்திகளும் ஒரே பரப்ரஹ்மத்தின் உருவம் என்பதுதான் ஸித்தாந்தம். எந்த தேவதையை வழிபட்டாலும் அவர் அநுக்ரஹத்தால் முடிவில் அடையும் ஸ்தானம் முக்தி என்ற பரமானந்த நிலையே. அவரவர் ருசிக்குத் தக்கபடி அந்தந்த தேவதையை வழிபட்டு அருளைப்பெற இந்த ஸ்தோத்திரங்கள் மிகவும் உபயோகமாக இருக்கும். பாராயணம் செய்வதற்கு ஏற்ற முறையில் லலிதமான பதங்களுடன் அமைந்துள்ள இந்த ஸ்தோத்திரங்களில் அந்தந்த தேவதைகளின் விசேஷ மஹிமைகளும் பல உயரிய கருத்துக்களும் நன்கு காட்டப் பட்டிருக்கின்றன. முக்கியமாக ஒவ்வொரு மூர்த்தியையும் நிர்விசேஷ பரப்ரஹ்மமாக வர்ணித்து பிரகரணங்களில் கூறப் பட்ட வேதாந்த தத்துவங்களும் ஆங்காங்கு காட்டப் படுகின்றன.

இந்த ஆருவது பாகத்தில் எட்டு ஸ்தோத்திரங்கள் உள்ளன. அவற்றில் கணேச பஞ்சரத்னம், கணேச புஜங்கம் என்ற இரு கணபதி ஸ்தோத்திரங்களும் ஸுப்ரஹ்மண்ய புஜங்க ஸ்தோத்திரமும் ஐந்து சிவ ஸ்தோத்திரங்களும் அடங்கியுள்ளன. சிவ ஸ்தோத்திரங்களில் ஸ்ரீ சிவ பஞ்சாக்ஷர மந்திரத்தைக் காட்டும் இரு ஸ்தோத்திரங்களும் சிவனும்

சக்தியும் இணைந்த அர்த்தநாரீசுவர ஸ்தோத்திரமும் உள்ளன. இந்த ஸ்தோத்திரங்களில் பொதிந்துள்ள கருத்துக்களைத் தெரிந்து பக்தியுடன் பாராயணம் செய்வதால் ஸ்ரீ ஆசார்ய அநுக்ரஹத்துடன் எல்லா அபீஷ்டங்களையும் பெறலாம். மற்ற ஸ்தோத்திரங்களும் முறையே அடுத்த பாகங்களில் வெளிவரும்.

இந்தப் புத்தகத்திற்குப் பொருளுதவி செய்த மேல்மங்கலம் இஞ்ஜினீயர் ஸ்ரீ வெங்கடராம அய்யர் அவர்களுக்கு எங்கள் ஸமிதியின் நன்றி உரித்தாகுக.

K. V. சுப்பரத்னம் அய்யர்,
பொதுக்காரியதரிசி,
அகில பாரத் சங்கர் ஸேவா ஸமிதி.


விஷயாநுக்ரமணிகை



॥ श्रीगणेशाय नमः ॥

# ॥ श्रीगणेशपञ्चरत्नम् ॥

# ஸ்ரீ கணேச பஞ்சரத்னம்

[ஸ்ரீ சங்கரபகவத்பாதர் அருளிய கணேச பஞ்சரத்னம் என்னும் இந்த ஸ்தோத்திரம் ஐந்துசுலோகங்கள் கொண்டது. ஆறாவது சுலோகத்தில் இதைப்படிப்பதால் ஏற்படும் பலன்களைக் காட்டுகிறார். விநாயகருடைய பெருமைகளை விளக்கும் இந்த ஸ்தோத்திரம் அழகிய விருத்தத்தில் அமைந்திருப்பதால் யாவருக்கும் படிப்பதில் உத்ஸாஹத்தைத் தரக்கூடியது. '**एकं सत विप्रा बहुधा वदन्ति**' ஒரே ப்ரஹ்மதத்வம் பல தேவதா மூர்த்திகளாக விளங்குகிறது. பெயரும் உருவமும் வெவ்வேறாக இருந்தாலும் தத்வம் ஒன்றுதான். இதுதான் உபநிஷத்தில் கூறப்பட்ட அத்வைத ஸித்தாந்தம் இதை அனுஸரித்து ஸ்ரீபகவத்பாதர் தம்முடைய ஒவ்வொரு ஸ்தோத்திரத்திலும் அந்தந்த தேவதா மூர்த்தியை ஸகல ஜகத்காரணமான பரமாத்ம ஸ்வரூபமாகவே வர்ணிக்கிறார்]

मुदा करात्तमोदकं सदा विमुक्तिसाधकं
कलाधरावतंसकं विलासिलोकरक्षकम् ।
अनायकैकनायकं विनाशितेभदैत्यकं
नताशुभाशुनाशकं नमामि तं विनायकम् ॥ १ ॥

முதா கராத்தமோதகம் ஸதா விமுக்தி ஸாதகம்
கலாதராவதம்ஸகம் விலாஸி லோக ரக்ஷகம் ।
அநாயகைக நாயகம் விநாஶிதேப தைத்யகம்
நதாஶுபாஶுநாஶகம் நமாமி தம் விநாயகம் ॥

मुदा-ஸந்தோஷத்துடன் करात्तमोदकं-கையில் கொழுக்கட்டையை வைத்துக் கொண்டிருப்பவரும் सदा-எப்பொழுதும் विमुक्तिसाधकं-முக்திக்கு ஸாதகமாயிருப்பவரும் कलाधरावतंसकम्-சந்திரனை சிரஸில் அலங்காரமாகக்கொண்டவரும் विलासिलोकरक्षकम्-நாகலோகத்தைக் காப்பாற்றுபவரும் अनायकं-(தனக்குமேல்) நாயகர் இல்லாதவரும் एकनायकं-(தானே உலகிற்கு) ஒரே நாயகராக இருப்பவரும் विनाशितेभदैत्यकम्-கஜாஸுரனைக் கொன்றவரும் नताशुभाशुनाशकं-வணங்கியவர்களின் தீமைகளை விரைவில் அழிப்பவருமான तं-அந்த विनायकं-விநாயகரை नमामि-வணங்குகிறேன்.

கையில் கொழுக்கட்டையுடன் சிரஸில் சந்திரனுடன் ஆனந்தமாக இருக்கும் கணேசமூர்த்தியை தியானிக்கிறார். அவர் ஆனந்தமாக இருப்பதால் நமக்கும் பரமானந்தமான முக்தியைத் தருகிறார். இதுமட்டும் அல்ல. அவரை வணங்கினால், நமக்கு ஏற்படும் எல்லாத் துன்பங்களையும் விலக்கி நன்மையைத் தருவார். உலகுக்குத் தீங்குசெய்த கஜாஸுரனைக் கொன்று காப்பாற்றியவர். அவரே ஜகத் காரணமான பரமாத்மா. அவருக்கு மேற்பட்டவர் ஒருவரும் இல்லை. ஸர்ப்பங்களைக் காப்பாற்றுவதுடன் அவைகளினின்று நம்மையும் காப்பாற்றுபவர். இந்த விநாயகரை வணங்குகிறேன். (1)

नतेतरातिभीकरं नवोदितार्कभास्वरं
नमत्सुरारिनिर्जरं नताधिकापदुद्धरम् ।
सुरेश्वरं निधीश्वरं गजेश्वरं गणेश्वरं
महेश्वरं समाश्रये परात्परं निरन्तरम् ॥ २ ॥

நதேதராதி பீகரம் நவோதிதார்க பாஸ்வரம்
நமத்ஸுராரி நிர்ஜரம் நதாதிகாபதுத்தரம் ।
ஸுரேச்வரம் நிதீச்வரம் கஜேச்வரம் கணேச்வரம்
மஹேச்வரம் ஸமாச்ரயே பராத்பரம் நிரந்தரம் ॥

**नतेतरातिभीकरं**-வணங்காதவர்களுக்கு மிகுந்த பயத்தைச் செய்கிறவரும் **नवोदितार्क**-புதிதாக உதயமாகும் சூரியன் போல் **भास्वरं**-ஒளி பொருந்தியவரும் **नमत्सुरारिनिर्जरं**-வணங்கும் அஸுரர்களையும் தேவதைகளையும் உடையவரும் **नताधिकापदुद्धरं**-வணங்குபவர்களின் அதிகமான துன்பங்களையும் நீக்குபவரும் **सुरेश्वरं**-தேவர்களுக்குத் தலைவரும் **निधीश्वरं**-நிதிகளுக்கு யஜமானரும் **गजेश्वरं**-யானைகளுக்கு ஈசுவரனும் **महेश्वरं**-மஹேசுவரனும் **परात्परं**-உயர்ந்தவர்களுக்கும் உயர்ந்தவருமான **गणेश्वरं**-கணபதியை **निरन्तरं**-இடைவிடாமல் **समाश्रये**-ஆச்ரயிக்கிறேன்.

உதயசூரியனைப்போல ஒளியுடன் விளங்குபவர். தேவர்களும் அஸுரர்களும் தங்கள் காரியம் இடையூறின்றி நிறைவேற இவரை வணங்குகின்றனர். இவரை வணங்காதவர் மிகுந்த பயத்தால் துன்புறுவர். வணங்குபவர்களுக்கு எவ்வித ஆபத்துக்களும் விலகும். பூதகணங்களின் பாதை இருக்காது. தேவர்களின் அருளும் எல்லா ஐசுவர்யங்களும் கிடைக்கும். எல்லாவற்றிற்கும் மேற்பட்ட ஈசுவரன் இவர். (2)

**समस्तलोकशंकरं निरस्तदैत्यकुञ्जरं**
**दरेतरोदरं वरं वरेभवक्त्रमक्षरम् ।**
**कृपाकरं क्षमाकरं मुदाकरं यशस्करं**
**मनस्करं नमस्कृतां नमस्करोमि भास्वरम् ॥ ३ ॥**

ஸமஸ்த லோக ஶங்கரம் நிரஸ்த தைத்ய குஞ்ஜரம்
தரேதரோதரம் வரம் வரேப வக்த்ர மக்ஷரம் ।
க்ருபாகரம் க்ஷமாகரம் முதாகரம் யஶஸ்கரம்
மநஸ்கரம் நமஸ்க்ருதாம் நமஸ்கரோமி பாஸ்வரம் ॥

**समस्तलोकशंकरं**-எல்லா உலகங்களுக்கும் க்ஷேமத்தைக் கொடுப்பவரும் **निरस्तदैत्यकुञ्जरं**-கஜாஸுரனைக் கொன்றவரும் **दरेतरोदरं**-பெரும் வயிறு உள்ளவரும் **वरं**-சிறந்தவரும் **अक्षरं**-

அழிவற்றவரும் **नमस्कृतां**-வணங்குபவர்களுக்கு **कृपाकरं**-தயை புரிபவரும் **क्षमाकरं**-பொறுத்துக்கொள்பவரும் **मुदाकरं**-ஸந்தோஷத்தைச் செய்பவரும் **यशस्करं**-புகழைக் கொடுப்பவரும் **मनस्करं**-நல்மனதைச் செய்பவரும் **भास्वरं** — ஒளி பொருந்தியவரும் **वरेभवक्त्रं**-சிறந்த யானைமுகம் கொண்ட கணபதியை **नमस्करोमि**-வணங்குகிறேன்.

யானை முகமும் பெரும் வயிறும் கொண்ட கணேசரை வணங்குபவர்களுக்கு மனம் நிர்மலமாவதோடு புகழும் ஸந்தோஷமும் உண்டாகும். இரக்கம் காட்டி செய்த குற்றங்களைப் பொறுத்துக்கொள்வார். கஜாஸுரனைத் தொலைத்து உலகிற்கு நன்மை செய்தவர். (3)

अकिंचनार्तिमार्जनं चिरन्तनोक्तिभाजनं
पुरारिपूर्वनन्दनं सुरारिगर्वचर्वणम् ।
प्रपञ्चनाशभीषणं धनञ्जयादिभूषणं
कपोलदानवारणं भजे पुराणवारणम् ॥ ४ ॥

அகிஞ்சநார்த்தி மார்ஜநம் சிரந்தனோக்தி பாஜநம்
புராரி பூர்வநந்தனம் ஸுராரிகர்வ சர்வணம் ।
ப்ரபஞ்ச நாசபீஷணம் தநஞ்ஜயாதி பூஷணம்
கபோல தாந வாரணம் பஜே புராணவாரணம் ॥

**अकिंचनार्तिमार्जनं**-ஏழைகளின் துன்பங்களைத் துடைப்பவரும் **चिरन्तनोक्तिभाजनं**-பழமைச் சொல்லான வேதத்தை இருப்பிடமாகக் கொண்டவரும் **पुरारिपूर्वनन्दनं**-த்ரிபுரர்களை அழித்த பரமசிவனுடைய மூத்த புதல்வரும் **सुरारिगर्वचर्वणं**-அஸுரர்களின் செருக்கைத் தொலைப்பவரும் **प्रपञ्चनाशभीषणं**-உலகு அழியும்பொழுது (பிரளயத்தில்) பயங்கரமாக இருப்பவரும் **धनञ्जयादिभूषणं**-தனஞ்ஜயன் முதலான ஸர்ப்பங்களை அணிகளாகக் கொண்டவரும் **कपोलदानवारिणं**-கன்னத்தில் மதஜலப்பெருக்கை உடையவரும் **पुराणवारणं**-பழமையான யானை உருவம் கொண்ட கணபதியை **भजे**-ஸேவிக்கிறேன்.

ஏழைகளுக்கு எல்லா ஐசுவர்யங்களையும் கொடுத்துத் துன்பங்களைப்போக்குபவர். ஈசுவரனுடைய மூத்த புதல்வர். ஸ்கந்தருக்கு அண்ணு. பாம்புகளை அணிகளாகக்கொண்டு கன்னங்களில் மதஜலம் பெருக நிற்கும் கணபதி அசுரர்களுக்குத் தோல்வியைக்கொடுத்து அவர்களுடைய கர்வத்தை அடக்குபவர். பிரளய காலத்தில் பயங்கர உருவத்துடன் பிரபஞ்சத்தை அழிக்கும் அனுதியான இவருடைய மஹிமையை மிகப்பழமையான வேதங்களில் தான் காணமுடியும். (4)

नितान्तकान्तदन्तकान्तिमन्तकान्तकात्मजं
अचिन्त्यरूपमन्तहीनमन्तरायकृन्तनम् ।
हृदन्तरे निरन्तरं वसन्तमेव योगिनां
तमेकदन्तमेव तं विचिन्तयामि सन्ततम् ॥ ५ ॥

நிதாந்த காந்த தந்த காந்திம் அந்தகாந்தகாத்மஜம்
அசிந்த்யரூப மந்தஹீந மந்தராயக்ருந்தநம் ।
ஹ்ருதந்தரே நிரந்தரம் வஸந்தமேவ யோகிநாம்
தமேகதந்தமேவ தம் விசிந்தயாமி ஸந்ததம் ॥

**नितान्तकान्त**–மிகவும் அழகிய **दन्तकान्ति**–பற்களின் ஒளியுள்ளவரும் **अन्तकान्तकात्मजं** — யமனுக்கும் யமனுன சிவனுடைய பிள்ளையும் **अचिन्त्यरूपं**–ஊஹிக்கமுடியாத ஸ்வரூபம் உள்ளவரும் **अन्तहीनं**–அழிவற்றவரும் **अन्तराय-कृन्तनं**–இடையூறுகளைப் போக்குபவரும் **योगिनां**-யோகிகளின் **हृदन्तरे एव**–ஹ்ருதய மத்தியிலேயே **निरन्तरं**–இடைவிடாமல் **वसन्तं**–வஸிக்கின்றவருமான **तं**–அந்த **एकदन्तमेव**–ஒரு கொம்புள்ள கணேசரையே **सन्ततं**–எப்பொழுதும் **विचिन्त-यामि**–தியானிக்கிறேன்.

ஒற்றைக்கொம்பரான கணேசரின் பற்கள் அழகும் ஒளியும் பொருந்தியவை. அவருக்கு அழிவு கிடையாது. நம் இடையூறுகளைப் போக்குவார். இவர் தந்தை யமனைக்

காலால் உதைத்தவர். இவரை அண்டினால் மிருத்யு பயம் விலகும். மனத்தை அடக்காதவர் இவர் தத்வத்தை அறிய முடியாது. வெளி விஷயங்களில் போகவொட்டாமல் மனதைத் தடுத்து தியானிப்பவர்களின் ஹிருதயத்தில் எப்பொழுதும் வாஸம்செய்வார். (5)

महागणेशपञ्चरत्नमादरेण योऽन्वहं
प्रजल्पति प्रभातके हृदि स्मरन्गणेश्वरम् ।
अरोगतामदोषतां सुसाहितीं सुपुत्रतां
समाहितायुरष्टभूतिमभ्युपैति सोऽचिरात् ॥ ६ ॥

மஹாகணேஶ பஞ்சரத்நமாதரேண யோऽந்வஹம்
ப்ரஜல்பதி ப்ரபாதகே ஹ்ருதி ஸ்மரன் கணேஶ்வரம் ।
அரோகதாமதோஷதாம் ஸுஸாஹிதீம் ஸுபுத்ரதாம்
ஸமாஹிதாயுரஷ்டபூதிமப்யுபைதி ஸோऽசிராத் ॥

**यः**—எவன் **अन्वहं**—தினந்தோறும் **प्रभातके**—காலையில் **हृदि**—மனத்தில் **गणेश्वरं**—கணபதியை **स्मरन्**— நினைத்துக் கொண்டு **आदरेण**—பக்தியுடன் **महागणेशपंचरत्नं** — கணேச பஞ்சரத்னத்தை **प्रजल्पति**—சொல்கிறானோ **सः**—அவன் **अरोगतां**—ஆரோக்யத்தையும் **अदोषतां**—குற்றமில்லாத் தன்மையையும் **सुसाहितीं**—நல்லகவித்திறனையும் **सुपुत्रतां** — நல்ல தனயர்களையும் **समाहितायुः**—நிறைந்த ஆயுளையும் **अष्टभूतिं** — அஷ்டைசுவர்யங்களையும் **अचिरात्** — விரைவில் **अभ्युपैति**—அடைவான்.

ஒவ்வொரு நாளும் காலையில் கணபதியை தியானித்துக் கொண்டு பக்தியுடன் இந்த ஸ்தோத்ரத்தைப் பாராயணம் செய்பவர்களுக்கு பிணியும் தோஷங்களும் விலகி நல்ல கவித்திறன், நல்ல பிள்ளைகள், நீண்ட ஆயுள், அஷ்டைசுவர்யங்கள் இவைகள் எல்லாம் விரைவில் கிடைக்கும். (6)

॥ श्रीः ॥

# ॥ श्रीगणेशभुजङ्गम् ॥

# ஸ்ரீ கணேச புஜங்கம்

[ஸ்ரீ சங்கரபகவத்பாதர் அருளிய கணேசபுஜங்க ஸ்தோத்திரம் ஒன்பது சுலோகங்கள் கொண்டது. 'புஜங்கம்' என்னும் விருத்தத்தில் அமைந்திருப்பதால் இப்பெயர் ஏற்பட்டிருக்கிறது. சிவந்த ஒளியுடன் கூடி நர்த்தனம்செய்யும், நடராஜகுமாரனை ந்ருத்தகணபதியை இங்கு வர்ணிக்கிறார். பிறகு யோகித்யேயமான கணேச ஸ்வரூபத்தைக் காட்டி அவரையே நிர்குண ஸச்சிதானந்த ஸ்வரூபமாகவும், உலகைப் படைத்துக்—காத்து—அழிக்கும் காரண வஸ்துவாகவும் காட்டுகிறார். இந்த ஸ்தோத்திரத்தைப் படிப்பதால் முக்யமாக வாக்ஸித்தி ஏற்படும் என்பதை கடைசி சுலோகத்தில் கூறுகிறார்.]

रणत्क्षुद्रघण्टानिनादाभिरामं
चलत्ताण्डवोद्दण्डवत्पद्मतालम् ।
लसत्तुन्दिलाङ्गोपरिव्यालहारं
गणाधीशमीशानसूनुं तमीडे ॥ १ ॥

ரணத்க்ஷுத்ர கண்டா நிநாதாபிராமம்
சலத்தாண்டவோத்தண்டவத்பத்மதாளம்
லஸத் துந்திலாங்கோபரிவ்யாளஹாரம்
கணாதீஶ மீஶான ஸூனும் தமீடே.

**रणत्क्षुद्रघण्टानिनादाभिरामं**—ஒலியிடுகின்ற சிறுமணிகளின் இனிய ஸ்வரங்களால் மிகுந்த மகிழ்ச்சியை உண்டுபண்ணுகின்றவரும் (வசீகரமான தோற்றத்தைப் பெற்றவரும்) **चलत्ताण्डवोद्दण्डवत्पद्मतालम्** – அசைகின்ற நடன சமயத்தில் உயர்த்திய தண்டத்துடன்கூடிய தாமரைகளின் தாளத்தையுடையவரும் **लसत्तुन्दिलाङ्गोपरिव्यालहारं**—மிளிர்கின்ற பருத்த

உடலின்மேல் படிந்துள்ள பாம்புகளாகிய மாலையை யுடைய வரும் **ईशानसूनुं** — சிவபெருமானின் திருக்குமாரருமான **तं गणाधीशं** அக்கணேசப் பெருமானை **ईडे** துதிக்கின்றேன்.

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யரான ஸ்ரீ ஜகத்குரு சங்கராசார்ய ஸ்வாமிகள் இடையூறுகளனைத்தையும் நீக்கி சகல மனோரதங்களையும் நிறைவேற்றும் வல்லமையுடைய விநாயகக் கடவுளை இவ்வாறுகப் போற்றுகின்றார். சர்வேச்வரனுடைய திருக்குமாரன் ஆனந்ததாண்டவம் புரிகின்றார். நடனம் செய்கின்றவனுக்குத் தக்க பக்க வாத்யங்கள் இன்றியமையாதவை. ஆகவே அது சமயம் அவர் அணிந்துள்ள சிறு மணிகள் இனிய ஒலியை எழுப்புகின்றன. அவர் கையிலுள்ள தண்டுடன் கூடிய தாம்ரை இங்குமங்கும் அசைந்து தாளம் போடுகின்றன. நடனமாடுபவன் தன்னை நன்கு அலங்கரித்துக்கொண்டு மேடையில் காட்சியளிப்பான். அதேபோல சிவபெருமானின் திருமகனும் தன் பருத்த உடலை ஸர்பஹாரத்தால் ஒளி மிளிரச் செய்து கொண்டு இன்னிசை முழங்க ஆனந்த நடனமாடுவது குறிப்பிடத்தக்கது. கணேச்வரனை இங்கு ஈசானஸூனு என்று கூறுவது மிகவும் பொருத்தமானது. "ஆத்மா வை புத்ரநாமாஸி" என்று மறைகள் கூறுகின்றன. மகன் தந்தையின் குணங்களைப் பெறுதல் இயற்கையே. நடனக் கலைக்கு குரு சிவபெருமான். அக்கலையைத் தனயனும் பெற்றுச் சீருடன் விளங்குவது இங்கு ஈசானஸூனு என்பதால் காட்டப்படுகின்றது. ஈசபுத்திரரின் ஆனந்தநிலை இங்கு நன்கு சித்தரிக்கப்பட்டுள்ளது. அந்நிலையில் அவனை வழிபடுவதால் சகல சித்திகளும் கிடைக்குமென்பது திண்ணம்.

ध्वनिध्वंसवीणालयोल्लासिवक्त्रं
स्फुरच्छुण्डदण्डोल्लसद्बीजपूरम् ।
गलद्दर्पसौगन्ध्यलोलालिमालं
गणाधीशमीशानसूनुं तमीडे ॥ २ ॥

த்வனி த்வம்ஸ வீணு லயோல்லாஸி வக்த்ரம்
ஸ்புரச்சுண்ட தண்டோல்லஸத் பீஜபுரம் ।
கலத்தர்ப்ப ஸௌகந்த்ய லோலாலிமாலம்
கணுதீசமீசானஸூனும் தமீடே ॥

ध्वनि – தன்னுடைய இனிய ஒலியால் ध्वंस – மறைந்த वीणालय-வீணையின் லயத்திஞல் उल्लासि-விளங்குகின்ற–वक्त्रं -முகத்தையுடையவரும் स्फुरत्-அசைகின்ற शुण्डदण्ड-துதிக்கையில் उल्लसत् – அழகாகத் திகழ்கின்ற बीजपूरम्-மாதுளம்பழத்தையுடையவரும் गलद्दर्पसौगन्ध्य लोलालिमालं-பெருகுகின்ற மதஜலத்தின் வாசனையால் சஞ்சலமான வண்டின வரிசையையுடையவரும் गणाधीशं கணங்களுக்கு அதிபருமான तं ईशानसूनुं ஈச புத்திரனை ईडे போற்றுகிறேன்.

கணேசன் நடனமாடும் சமயத்தில் இனியகானம் செய்கின்ருர். அக்கானத்தின் மதுரத்வனியால் வீணையின் நாதம் கூடத் தோற்கடிக்கப்படுகின்றது. அப்பொழுது அவரது முகம் மிகவும் பொலிவுபெற்றுப் பார்ப்பவர் மனதைக் கவர்கின்றது. மேலும் அவர் தன் கையில் இனிய மாதுளம் பழத்தையும் வைத்துக்கொண்டு காட்சியளிக்கின்ருர். ஆடலும் பாடலும் அவருக்கு அளவுகடந்த மதத்தையுண்டு பண்ணுகின்றன. ஆதலால் அவருடைய மத்தகத்தில் மதப்பெருக்குண்டாகி எங்கும் இனிய நறுமணத்தைப் பரப்பு கின்றது. அதனுல் வண்டினம் மற்ற மலர்களைத் தேடித் திரிவதை விடுத்து இவரது முகத்தைச் சுற்றி வட்டமிடு கின்றது. இவ்வாறு அவருடைய முகத்தைச்சுற்றித் திரியும் வண்டுகளின் வரிசை அவருக்கு அளிக்கப்பெற்ற மலர் மாலை போல் விளங்குகின்றது. அப்படிப்பட்ட கரிமுகத்தோனை யான் போற்றுகின்றேன். (2)

प्रकाशज्जपारक्तरत्नप्रसून-
प्रवालप्रभातारुणज्योतिरेकम् ।

प्रलम्बोदरं वक्रतुण्डैकदन्तं
गणाधीशमीशानसूनुं तमीडे ॥ ३ ॥

ப்ரகாசஜ் ஜபா ரக்த ரத்னப்ரஸூன
ப்ரவாள ப்ரபாதாருண ஜ்யோதிரேகம் ।
ப்ரலம்போதரம் வக்ரதுண்டைகதந்தம்
கணாதீஶ மீஶான ஸூனும் தமீடே ॥

**प्रकाशत्**–மிளிரும் **जपा**–செம்பருத்தி மலர்போல **रक्त**–சிவந்த **रत्नप्रसून**–இரத்தினம் புஷ்பம் **प्रवाल**–துளிர் **प्रभातारुण**–காலைக்கதிரவன் இவைகளைப்போன்ற **ज्योतिः**–ஒளியையுடையவரும் **एकम्**–இரண்டற்றவரும் **प्रलम्बोदरम्**–பெரிய வயிற்றையுடையவரும் **वक्रतुण्डम्**–வளைந்த முகத்தையுடையவரும் **एकदन्तं**–ஒரு தந்தமுடையவரும் **गणाधीशं**–கணதிபதியுமான **तं** **ईशानसूनुम्**–அந்த ஈச புத்திரனை **ईडे**–போற்றுகின்றேன்.

கணபதியின் தோற்றம் மிகப் பொலிவு பெற்று விளங்குகின்றது. செம்பருத்திப்பூ, சிவந்த ரத்னம், துளிர், அருணன் இவைகளைப்போல் சிவந்திருக்கின்றது. இருப்பினும் ஒப்பற்றது. அத்விதீயமானது. அவரது வயிறு பருமனாகத் தோன்றுவதால் அவருக்குத் தொந்தி விநாயகர் என்ற பெயரும் வழங்கலாயிற்று. நீண்ட துதிக்கையை உடையவராக இருப்பதால் அவரது முகம் சிறிது கோணலாக இருக்கின்றது. அவ்விநாயகக் கடவுளை நான் போற்றுகிறேன்.

विचित्रस्फुरद्रत्नमालाकिरीटं
किरीटोल्लसच्चन्द्ररेखाविभूषम् ।
विभूषैकभूषं भवध्वंसहेतुं
गणाधीशमीशानसूनुं तमीडे ॥ ४ ॥

விசித்ர ஸ்புரத் ரத்னமாலா கிரீடம்
கிரீடோல்லஸத் சந்த்ரரேகா விபூஷம் ।

விபூஷைகபூஷம் பவத்வம்ஸஹேதும்
கணாதீஶமீஶான ஸூனும் தமீடே ॥

**विचित्र** - பலவர்ணங்களுடன் **स्फुरत्** - பிரகாசிக்கின்ற **रत्नमाला** - ரத்னங்களின் வரிசைகளையுடைய **किरीटम्** - கிரீடத்துடன் கூடியவரும் **किरीट** - கிரீடத்தில் **उल्लसत्** - விளங்குகின்ற **चन्द्ररेखा** - சந்திரகலையாகிய **विभूषम्** - சிறந்த அணிகலத்தையுடையவரும் **विभूषैकभूषम्** - அணிகலனுக்கு அணிகலனைத் திகழ்கின்றவரும் **भव** - பிறவியை **ध्वंस** - நாசம் செய்வதற்கு **हेतुं** - காரணமானவரும் **गणाधीशं** - கணங்களுக்கதிபருமான **तं** - அந்த **ईशानसूनुं** - சிவபெருமானின் திருக்குமாரனை **ईडे** - போற்றுகின்றேன்.

சிவபெருமானின் திருக்குமாரன் சிறந்த அணிகலங்களுடன் காட்சியளிக்கின்றான். அவனுடைய தலையில் நவரத்னங்கள் பதிக்கப்பெற்ற கிரீடம் பொலிவு பெற்று விளங்குகின்றது. சந்திரகலை கிரீடத்தின் மேலிருந்துகொண்டு மிகுந்த ஒளியைப் பரப்புகின்றது. ஆயினும் இவ்வணிகள் சிவகுமாரனின் சிரசில் விளங்குவதால் சிறந்த காந்தியைப் பெறுகின்றன. ஆதலால் அணிகளுக்கே அணிகளாகத் திகழ்கிறான் இக்குமாரன். உலகிலோ எனில் அணிகளால் ஆடவன் அழகு பெறுகின்றான். இவ்விதம் காட்சியளிக்கும் ஈச புத்ரனைப்போற்றுவதால் பிறவி என்னும் பிணி நாசமடைவது திண்ணம். இவ்வாறு மோக்ஷ சாம்ராஜ்யத்தை யளிக்கும் இக்கணபதியை யாம் தொழுவோமாக. (4)

उदञ्चद्भुजावल्लरीदृश्यमूलो-
च्चलद्भ्रूलताविभ्रमभ्राजदक्षम् ।
मरुत्सुन्दरीचामरैः सेव्यमानं
गणाधीशमीशानसूनुं तमीडे ॥ ५ ॥

உதஞ்சத் புஜா வல்லரீ த்ருச்ய மூலோச்
சலத் ப்ரூலதா விப்ரம ப்ராஜதக்ஷம் ।

மருத்ஸுந்தரீ சாமரை: ஸேவ்யமானம்
கணாதீஸமீஸானஸூனும் தமீடே ॥

**उदञ्चत्** - உயரக்கிளம்புகின்ற **भुजावल्लरी** - புஜங்களாகிய கொடிகளின் **दृश्य** - காட்சியினால் **मूलोच्चलत्** - வேரிலிருந்து அசைகின்ற **भ्रूलताविभ्रम** - புருவங்களாகிய கொடிகளின் சுழலில் **भ्राजदक्षम्** - விளங்குகின்ற கண்களை உடையவரும் **मरुत्सुन्दरी** - தேவகன்னியர்களால் **चामरैः** - சாமரங்களால் **सेव्यमानं** - ஸேவிக்கப்படுகின்றவரும் **गणाधीशं** - கணங்களுக்கு அதிபருமான **तं ईशानसूनुं** - அந்த ஈசபுத்திரனை **ईडे** - போற்றுகின்றேன்.

தாண்டவமூர்த்தியான கணேசன் தனது கொடி போன்ற கைகளை உயர்த்திக்கொண்டு காட்சியளிக்கின்றார். அம்மூர்த்தியின் தோற்றத்தைத்தானே கண்டு களித்து இன்பமடையும்பொழுது அவரது புருவங்கள் கொடிபோற் சுழலுகின்றன. அவைகளின் நடுவில் மருளும் அவரது கண்கள் மிகுந்த ஒளியுடன் விளங்குகின்றன. அப்பொழுது தேவஸ்திரீகள் சாமரம் வீசித்தேவகுமாரனுக்குப் பணிவிடை புரிகின்றனர். இவ்வாறு காட்சி தரும் கணாதிபதியை யான் போற்றுகின்றேன். (5)

**स्फुरन्निष्ठुरालोलपिङ्गाक्षितारं**
**कृपाकोमलोदारलीलावतारम् ।**
**कलाबिन्दुगं गीयते योगिवर्यै-**
**र्गणाधीशमीशानसूनुं तमीडे ॥ ६ ॥**

ஸ்புரந்நிஷ்டுராலோல பிங்காக்ஷிதாரம்
க்ருபாகோமலோதாரலீலாவதாரம் ।
கலாபிந்துகம் கீயதே யோகிவர்யை:
கணாதீஸமீஸாநஸூனும் தமீடே ॥

**स्फुरन्**–துடிக்கின்ற **निष्ठुर**–க்ரூரமாயும் **आलोल**–சஞ்சலமாயும் உள்ள **पिङ्गाक्षि**–சிவந்த கண்களின் **तारम्**–கருவிழிகளை

யுடையவரும் कृपा–கருணையால் कोमल–அழகியதும் उदार–சிறந்ததுமான लीलावतारम्–விளையாட்டவதாரங்களையுடைய வரும் कलाबिन्दुगं–பிந்து, கலை இவைகளால் அறியப்படும் ஜோதிஸ்வரூபமாக योगिवर्यैः – சிறந்த யோகிகளால் गीयते–துதிக்கப்படுகின்றார். तं–அந்த गणाधीशं–கணபதியான ईशानसूनुं — சிவபெருமானின் திருக்குமாரனை ईडे — போற்று கின்றேன்.

பிரணவத்திலுள்ள பிந்து, கலை இவைகளில் ஜோதிரூப மாய் விளங்குகின்றான். அவரது தேஜோமயமான ரூபத்தை அறிந்த யோகிகள்அவரைப் போற்றுகின்றனர். அங்ஙனம் யோகிகளால் மிகவும் சிரமப்பட்டுக் காணப்படும் கரி முகத்தோன் பலவிதமான லீலாவதாரங்களையெடுத்து பக்தர்களைக் காப்பாற்றுகின்றார். அரக்கர்களை அழிக்கக் கருதி உக்ரமான ரூபத்துடன் தோன்றும்பொழுது அவரது கண்கள் கருணையற்றவைகளாகக் காணப்படுகின்றன. அவைகள் சிவந்து துடிக்கின்றன. கருவிழிகளும் மிகவும் சுழல்கின்றன. இவ்வாறு தோன்றினும் அவரது அவதாரம் அவருக்குப் பக்தர்கள்பாலுள்ள ஒப்பற்ற கருணையையே காட்டுகின்றது. அப்படிப்பட்ட உக்ர விநாயகமூர்த்தியைப் போற்றுவதால் இன்னல்களனைத்தும் இழிவுறும் என்பது திண்ணம். (6)

यमेकाक्षरं निर्मलं निर्विकल्पं
गुणातीतमानन्दमाकारशून्यम् ।
परं पारमोंकारमाम्नायगर्भं
वदन्ति प्रगल्भं पुराणं तमीडे ॥ ७ ॥

யமேகாக்ஷரம் நிர்மலம் நிர்விகல்பம்
குணாதீதமானந்தமாகாரசூன்யம் ।
பரம் பாரமோங்காரமாம்னாயகர்ப்பம்
வதந்தி ப்ரகல்பம் புராணம் தமீடே ॥

**यं**–எவரை **एकाक्षरं**–ஒன்றாயும் அழிவற்றதாயும் **निर्मलं**–மாசற்றதாயும் **निर्विकल्पं** — சந்தேகமற்றதாயும் **गुणातीतं**—ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களுக்கும் அப்பால் உள்ளதாயும் **आनन्दं**–ஆனந்தரூபியாயும் **आकारशून्यं**–உருவம் அற்றதாயும் **परं पारं**–மற்றொரு கரையாகவும் **ओंकारं** பிரணவ ரூபமாயும் **आम्नायगर्भं**–வேதங்களைத் தன்னுள்கொண்டதாயும் **प्रगल्भं** — ஸாமர்த்யம் உள்ளதாயும் **पुराणं** – பழமைவாய்ந்ததாயும் **वदन्ति**–கூறுகின்றனரோ **तं**-அந்த கணபதியை **ईडे**–போற்றுகிறேன்.

இதுகாறும் கணேசனின் ஸகுணஸ்வரூபம் வர்ணிக்கப் பட்டது. ஸகுணமூர்த்தியை உபாஸிப்பவன் ஞானத்தைப் பெறுகின்றான். அதையடைவதற்கு இடையூறாகக் காணப் படுவது அஞ்ஞானமே. அதை அகற்ற இறைவன் அருள் தேவை. அவர் அருளால் அஞ்ஞானமென்ற இருள் நீங்கிய வுடன் ஞானச்சுடரே நம் கண்முன் காட்சியளிக்கின்றது. அப்பொழுது நாம் இறைவனின் உண்மையான ரூபத்தை உணர்கின்றோம். அதுதான் **एकमेव अद्वितीयम्** என்று ச்ருதி களால் வர்ணிக்கப்பட்டுள்ளது. அப்பரம்பொருள் மாசற்றது. மாறுபாடற்றது. முக்குணங்களுக்கும் உட் படாதது. உருவம் அற்றது. ஆனந்தஸ்வரூபமானது. வேதங்களுக்கெல்லாம் இதுவே மூலபூதமானது. ஓம் என்னும் பிரணவம் இதையே குறிக்கின்றது. இதை வழி படுவதால் நாம் தத்வஞானத்தைப் பெற்று நிரதிசயமான ஆனந்தத்தைப் பெறலாம். ஆதலால் நாம் இந்த ஓங்கார கணபதியைப் போற்றுவோமாக. (7)

**चिदानन्दसान्द्राय शान्ताय तुभ्यं**
**नमो विश्वकर्त्रे च हर्त्रे च तुभ्यम् ।**
**नमोऽनन्तलीलाय कैवल्यभासे**
**नमो विश्वबीज प्रसीदेशसूनो ॥ ८ ॥**

சிதானந்தஸாந்த்ராய ஶாந்தாய துப்யம்
நமோ விஶ்வகர்த்ரே ச ஹர்த்ரே ச துப்யம் ।
நமோ அனந்தலீலாய கைவல்யபாஸே
நமோ விஶ்வபீஜ ப்ரஸீதேஶஸூநோ ॥

**चिदानन्दसान्द्राय**-ஞானனந்த ஸ்வரூபியாயும் **शान्ताय**-அமைதி நிறைந்தவராயும் உள்ள **तुभ्यं**-உமக்கு **नमः**-வணக்கம். **विश्वकर्त्रे च**-உலகைப்படைப்பவராயும் **हर्त्रे च**-அழிப்பவராயுமுள்ள **तुभ्यं**-உமக்கு **नमः**-வணக்கம். **अनन्तलीलाय**-எல்லையற்ற திருவிளையாடல்களையுடையவரும் **कैवल्यभासे**-(உண்மையில்) தாம் ஒருவராகவே விளங்குபவருமான உமக்கு **नमः**-வணக்கம். **विश्वबीज**-உலகின் காரணமான **ईशानसूनो**-பரமேச்வரனின் திருக்குமாரா **प्रसीद**-பிரசன்னமடைவாயாக.

கடவுளை வழிபடும் முறையை நன்கு அறிந்து வழிபடுதலே சிறந்த வழிபாடு. அவரைப் போற்ற விரும்பும் ஒவ்வொருவனும் அவர்தான் உலகத்தைச் சிருஷ்டிப்பவன், காப்பவன், அழிப்பவன் என்று அறியவேண்டும். அவரன்றி அணுவும் அசையாதெனக் கூறுவர் சான்றோர். அவர்தான் ஞானனந்த ஸ்வரூபி, சாந்தர், மோக்ஷத்தைத் தருபவர். ஆகையால் அப்படிப்பட்டவருக்கு நாம் வணக்கம் செலுத்துவது அவச்யம். அவரது அனுக்ரஹத்தை யாம் வேண்டுவோமாக. (8)

इमं सुस्तवं प्रातरुत्थाय भक्त्या
पठेद्यस्तु मर्त्यो लभेत्सर्वकामान् ।
गणेशप्रसादेन सिध्यन्ति वाचो
गणेशे विभौ दुर्लभं किं प्रसन्ने ॥ ९ ॥

இமம் ஸுஸ்தவம் ப்ராதருத்தாய பக்த்யா
படேத் யஸ்து மர்த்யோ லபேத் ஸர்வகாமான் ।
கணேஶப்ரஸாதேன ஸித்யந்தி வாச:
கணேஶே விபௌ துர்லபம் கிம் ப்ரஸன்னே ॥

**इमं**-இந்த **सुस्तवं**-நல்ல தோத்திரத்தை **प्रातः**-காலையில் **उत्थाय**-எழுந்து **भक्त्या**-பக்தியுடன் **यः**-எந்த **मर्त्यः तु**-மனிதன் **पठेत्**—படிப்பானோ அவன் **सर्वकामान्** — எல்லா விருப்பங்களை யும் **लभेत्**-அடைவான். **गणेशप्रसादेन**-கணேசருடைய அருளால் **वाचः**-வாக்குகள் **सिध्यन्ति**-பலிக்கின்றன. **विभौ**-எங்கும் நிலவியவரும் ஸர்வவல்லமையுள்ளவருமான **गणेशे प्रसन्ने**-கணேசன் அருள்புரியும்பொழுது **दुर्लभं किम्**-கிடைப் பதற்கரிது யாது?

ஒவ்வொரு மனிதனும் அதிகாலையில் எழுந்து மிகுந்த பக்தியுடன் இந்தத் துதிப் பாடலைப் படிக்கவேண்டும். அவ்வாறு செய்யும் மானிடன் கணபதியின் அருளால் விரும்பிய பொருள்களனைத்தையும் அடைகிறான். அவனுடைய சொல் பலிக்கின்றது. ஏனெனில் கணபதியின் அருளிருக்கும்பொழுது அடையமுடியாதது ஒன்றுமே இல்லை.

**ஸ்ரீ கணேச புஜங்கம் முற்றும்.**



|| श्रीः ||

# || श्रीसुब्रह्मण्यभुजङ्गम् ||

# ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய புஜங்கம்

[முப்பத்து மூன்று சுலோகங்கள் கொண்ட இந்த ஸுப்ரஹ்மண்ய ஸ்தோத்திரமும் புஜங்க விருத்தத்தில் அமைந்துள்ளது. பலச்ருதியாக உள்ள கடைசி சுலோகத்தில் 'भुजङ्गाख्यवृत्तेन क्लृप्तं स्तवं' என்று ஆசார்யாளே இவ் விஷயத்தைக் குறிப்பிடுகிறார். இது ஒன்றுதான் ஸ்ரீ பகவத் பாதாள் அருளிய ஸுப்ரஹ்மண்ய ஸ்தோத்திரம் என்று தெரிகிறது. ஸ்ரீ சங்கரபகவத்பாதர் விஜய யாத்திரைக் கிரமத்தில் திருச்செந்தூருக்கு விஜயம்செய்து செந்திலாண்டவனைத் தர்சித்த ஸமயம் இந்த ஸ்தோத்திரத்தை இயற்றியதாகத் தெரிகிறது. அவ்வூரில் தனிச் சிறப்புப் பெற்றுள்ள ஸமுத்ரதீரம், கந்தமாதனகிரி, இலை விபூதி இவைகளை இங்கு குறிப்பிடுகிறார். ஸ்கந்தமூர்த்தியின் அவயவங்களைத் தனித் தனியாகச் சிறந்த முறையில் துதித்து, அவருடைய முழு உருவத்தையும், பிறகு ஸோமாஸ்கந்தமூர்த்தியையும் வர்ணிக்கிறார். நம் ஒவ்வொரு அவயவமும் பரிவாரங்களும் அவரிடம் ஈடுபடவேண்டிய விதத்தைக் காட்டிக் கடைசியாக ஸ்தோத்திரத்தின் பயனைக் கூறி முடிக்கிறார்.]

(அ) முதலில் இடையூறு நீங்க கணேசனைத் துதிக்கிறார் :—

सदा बालरूपापि विघ्नाद्रिहन्त्री
महादन्तिवक्त्रापि पञ्चास्यमान्या ।
विधीन्द्रादिमृग्या गणेशाभिधा मे
विधत्तां श्रियं कापि कल्याणमूर्तिः ॥ १ ॥

ஸதா பாலரூபாபி விக்நாத்ரி ஹந்த்ரீ
மஹா தந்திவக்த்ராபி பஞ்சாஸ்யமான்யா ।
விதீந்த்ராதிம்ருக்யா கணேசாபிதா மே
விதத்தாம் ச்ரியம் காபி கல்யாணமூர்த்தி: ॥

**सदा**-எப்பொழுதும் **बालरूपापि**-குழந்தையின் வடிவத்தை உடையதாயிருப்பினும் **विघ्नाद्रिहन्त्री**-இடையூறுகளாகிய மலைகளைப் பிளக்கும் தன்மை வாய்ந்ததும் **महा**-பெரிய **दन्ति**-யானையின் **वक्त्रा अपि**-முகத்தையுடையதாயினும் **पञ्चास्य**-சிம்மத்தினால் (பரமேச்வரனால்) **मान्या**-போற்றத்தக்கதாயும் **विधि**-பிரம்மா **इन्द्रादि**-இந்திரன் முதலியவர்களால் **मृग्या**-தேடத்தக்கதுமான **गणेशाभिधा**-கணேசன் என்ற பெயர் கொண்ட **कापि**-ஓர் **कल्याणमूर्तिः**-அற்புத மங்களமூர்த்தியானது **मे**-எனக்கு **श्रियं**-ஐசுவர்யத்தை **विधत्ताम्**-வழங்கட்டும்.

விநாயகப்பெருமான் குழந்தை உருவத்துடன் இங்கு தோன்றுகின்றார். பாலனாயிருப்பினும் அவர் அபால ஸத்வமுடையவர். அதாவது குழந்தைபோல் தோன்றினும் அவர் மிகுந்த வலிமை வாய்ந்தவர். மலைபோன்ற இடையூறுகளையும் உடைத்தெறியும் ஆற்றல் பெற்றவர். யானைமுகத்தையுடையவர் இவ்வாறு இருப்பினும் சிம்மத்தினால் போற்றப்பட்டவர். யானைக்கும் சிம்மத்திற்கும் இயற்கையிலேயே பகை ஏற்பட்டிருக்கின்றது. ஆதலால் சிம்மம் எப்படி இவரைப் போற்றமுடியும்? இங்கு சிம்மம் யானையைப் போற்றுதல் பொருத்தமற்றது என்று தோன்றுகின்றது. ஆனால் இவற்றின் உண்மையான உரையை அறியும்பொழுது இவ்வாறு கூறுவதில் மிகப் பொருத்தம் உள்ளதை நன்கு காணலாம். பஞ்சாஸ்ய என்னும் சொல் பரமேச்வரனைக் குறிக்கின்றது. அதனால் இவர் தன் தந்தையாகிய பரமேச்வரனாலேயே போற்றப்படுகின்றவர் என்ற பொருள் விளங்குகின்றது. விநாயகமூர்த்தி ஸகல விதமான இடையூறுகளையும் அகற்றும் வன்மை உள்ளவராதலால் பிரம்மாதி தேவதைகளும் இவரைத் தேடி வழிபடுகின்றனர். மிகுந்த அத்புதமான தோற்றத்தைப் பெற்ற விநாயகக் கடவுள் நமது இடையூறுகளைப் போக்கி ஸகல ஐச்வர்யங்களையும் வழங்குவாராக. (1)

न जानामि पद्यं न जानामि गद्यं
न जानामि शब्दं न जानामि चार्थम् ।
चिदेका षडास्या हृदि द्योतते मे
मुखान्निःसरन्ते गिरश्चापि चित्रम् ॥ २ ॥

ந ஜாநாமி பத்யம் ந ஜாநாமி கத்யம்
ந ஜாநாமி ஶப்தம் ந ஜாநாமி சார்த்தம் ।
சிதேகா ஷடாஸ்யா ஹ்ருதி த்யோததே மே
முகாந்நிஸ்ஸரந்தே கிரஶ்சாபி சித்ரம் ॥

**पद्यं**- சுலோகத்தை **न जानामि**- யான் அறியேன் **गद्यं**- உரை நடையையும் **न जानामि**-யான் அறியேன் **शब्दं**- சொல்லையும் **न जानामि**-அறியேன் **अर्थं च**-பொருளையும் **न जानामि**-அறியேன் **मे**-என்னுடைய **हृदि**-மனதில் **षडास्या**- ஆறு முகங்களையுடைய **एका**-ஓர் **चित्**-ஞான ஒளி **द्योतते**- விளங்குகின்றது **मुखात्**-(என்னுடைய) முகத்திலிருந்து **गिरश्चापि**-வார்த்தைகளும் **चित्रं**-அழகாக **निस्सरन्ते**-பெருக் கெடுத்து வருகின்றன.

ஆறுமுகக்கடவுள் ஞானஸ்வரூபி. அவனை வழிபடு கின்றவனுக்கு புலமை இல்லாவிடினும் பக்திப் பெருக்கால் அவனுக்கு ஸ்துதிசெய்யும் சக்தி ஏற்பட்டு விடுகின்றது என்பது இதனால் நன்கு விளங்குகின்றது. ஸ்ரீ சங்கர பகவத்பாதர் எல்லாமறிந்தவர். அப்படியிருப்பினும் தமக்கு யாதும் தெரியாதென அவர் கூறுவது அவருடைய அடக்கத்தையே விளக்குகின்றது. மேலும் பக்திப்பெருக் கால் முருகனை த்யானம் செய்யும்பொழுது ஆறுமுகங்களுடன் கூடிய அக்கடவுள் ஜ்யோதி ஸ்வரூபமாக அவருக்குக் காட்சியளிக்கின்றார். அவருடைய கருணைகடாக்ஷத்தால் சிறந்த பாக்கள் அவர் முகத்திலிருந்து கிளம்புகின்றன. இதனால் இவைகள் அருட்பாக்கள் என்பது நன்கு புலனு கின்றது. இவைகளைப்பாடுவதால் சகல ஸித்திகளும்

ஏற்படும் என்று சொல்லவாவேண்டும். இந்த ஸ்தோத்திரம் சொல்பவர்களும் மிகுந்த ஒளி பொருந்திய ஆறுமுகக்கடவுளை மனதில் தியானிக்க வேண்டும். (2)

मयूराधिरूढं महावाक्यगूढं
मनोहारिदेहं महच्चित्तगेहम् ।
महीदेवदेवं महावेदभावं
महादेवबालं भजे लोकपालम् ॥ ३ ॥

மயூராதிரூடம் மஹாவாக்ய கூடம்
மநோஹாரிதேஹம் மஹச்சித்தகேஹம் ।
மஹீதேவதேவம் மஹாவேதபாவம்
மஹாதேவபாலம் பஜே லோகபாலம் ॥

**मयूराधिरूढं**-மயில் வாஹனத்தில் அமர்ந்திருப்பவனும் **महावाक्य**-தத்வமஸி, முதலிய மஹாவாக்யங்களில் **गूढं**-பொதிந்திருப்பவரும் **मनोहारि**-மனதைக்கவரும் **देहं**-உடலை உடையவரும் **महच्चित्त**-பெரியோர்களின் மனதை **गेहं**-வீடாகக்கொண்டவரும் **महीदेव**-அந்தணர்களின் **देवं**-கடவுளாயும் **महावेदभावं**-பெருமை வாய்ந்த மறை நூல்களின் கருத்தாகத்தோன்றுகின்றவரும் **लोकपालं**-உலகங்களைக் காக்கின்றவருமான **महादेव**-பரமேச்வரனுடைய **बालं**-குழந்தையான ஷண்முகனை **भजे**-ஸேவிக்கின்றேன்.

இங்கு சொற்றொடர்கள் மிகவும் விசித்ரமாக அமைந்திருப்பதைக் காணலாம். ஞானனந்த ஸ்வரூபியான ஆறுமுகன் ஸகுணனுயும் நிர்குணனுயும் ஒரேகாலத்தில் விளங்குகின்றான். அவன் தனக்கே உரிய அழகிய மயில் வாஹனத்தில் அமர்ந்திருக்கின்றான். ஆனால் அவனுடைய உண்மையை 'தத்வமஸி' முதலிய மஹாவாக்யங்கள்தான் விளக்க வல்லமையுடையதாக இருக்கின்றன. அவனுடைய அழகிய தோற்றம் பார்ப்பவர்களின் மனதைக் கவர்கின்றது. இருப்பினும் அவன் அணுவினும் நுண்ணிய

சான்றோர்களின் இருதய கமலத்தில் பதுங்கிக்கிடக்கின்றான். அவன் உலகில் போற்றப்படும் அந்தணர்களின் ஆராத்ய தெய்வமாகத் திகழ்கின்றான். அதனால் வேதங்களின் உட்கருத்தாக உரைபவனும் அவனே. மஹாதேவனின் சிறு குமாரனாய் இருந்தபோதிலும் அவன் அரக்கர்களை அழித்து உலகை உய்வித்தான். அவ்வுத்தமபுத்திரனைப் போற்றுவோமாக. (3)

(அ) கடற்கரையில் வஸிக்கும் பெருமையை இரண்டு சுலோகங்களில் கூறுகிறார்:—

यदा संनिधानं गता मानवा मे
भवांभोधिपारं गतास्ते तदैव ।
इति व्यञ्जयन्सिन्धुतीरे य आस्ते
तमीडे पवित्रं पराशक्तिपुत्रम् ॥ ४ ॥

யதா ஸந்நிதானம் கதா மானவா மே
பவாம்போதிபாரம் கதாஸ்தே ததைவ ।
இதி வ்யஞ்ஜயன் ஸிந்துதீரே ய ஆஸ்தே
தமீடே பவித்ரம் பராசக்தி புத்ரம் ॥

यदा-எப்பொழுது मानवाः-மனிதர்கள் मे-என்னுடைய सन्निधानं-ஸந்நிதியை गताः-அடைந்தார்களோ तदा एव-அப்பொழுதே ते-அவர்கள் भवाम्भोधि-உலக வாழ்க்கையாகிய கடலின் पारं-கரையை गताः-அடைந்தவர்களாகின்றனர் इति-என்று व्यञ्जयन्-மறைமுகமாக வெளிப்படுத்திக்கொண்டு यः-எவர் सिन्धुतीरे-சமுத்திரத்தின் கரையில் आस्ते-இருக்கின்றாரோ तं-அப்படிப்பட்ட पवित्रं-உலகைப் பரிசுத்தம் செய்கின்ற पराशक्तिपुत्रं-பராசக்தியின் புதல்வரான ஸுப்ரமண்யனை ईडे-போற்றுகிறேன்.

சாதாரணமாக ஆற்றின்கரையில் ஓடக்காரர்கள் உட்கார்ந்திருப்பார்கள். அவர்கள் ஆற்றைக்கடக்க விரும்புகின்றவர்களைத் தமது ஓடங்களில் ஏற்றிச்சென்று அக்கரை

சேர்ப்பார்கள். அதேபோல் ஸுப்ரஹ்மண்யர் பெரிய ஸமுத்ரக்கரையில் அமர்ந்திருக்கிறார். இன்றும் திருச்செந்தூர் என்ற புண்ய க்ஷேத்ரத்தில் சமுத்திரக்கரையில் முருகனுடைய கோயில் அமைந்திருப்பதைக் காணலாம். இந்த பூவுலக வாழ்க்கையென்பது ஓர் மஹா ஸமுத்ரம். இதில் அகப்பட்டவன் கரையேறுவது அஸாத்யம். ஆனால் இப்பிறவிக்கடலைக் கடக்கச் செய்வதற்காக ஓர் ஓடக்காரன் கரைமீது அமர்ந்திருக்கிறான். அவனே ஞான ஸ்வரூபி. ஞானமென்ற ஓடத்தால் தன்னை அண்டியவர்களை அவர் கரையேற்றிவிடுகின்றார். இதை வெளிப்படுத்தவே அவன் அவ்வாறு காத்துக்கொண்டிருக்கிறான். இவனுக்கு ஏது இவ்வளவு சக்தி என்பதை ‘பராசக்தி புத்ரம்’ என்ற சொல் விளக்குகின்றது. பராசக்தியின் புத்ரனல்லவா அவன். தாயிடம் பெற்ற ஒப்பற்ற சக்தியே அவனுக்கு அவ்வளவு வல்லமையை ஊட்டுகின்றது. ஆதலால் அவன் உலகின்கண் உரையும் அறியாமையை அகற்றி அனைவரையும் அக்கரை சேர்க்கின்றான். அவனை நாம் போற்றுவோமாக. (4)

**यथाब्धेस्तरङ्गा लयं यान्ति तुङ्गा-**
**स्तथैवापदः संनिधौ सेवतां मे ।**
**इतीवोर्मिपङ्क्तीर्नृणां दर्शयन्तं**
**सदा भावये हृत्सरोजे गुहं तम् ॥ ५ ॥**

யதாப்தேஸ்தரங்கா: லயம் யாந்தி துங்கா:
தத்தைவாபத: ஸந்நிதௌ ஸேவதாம் மே ।
இதீவோர்மிபங்க்தீர் ந்ருணாம் தர்சயந்தம்
ஸதா பாவயே ஹ்ருத்ஸரோஜே குகம் தம் ॥

**यथा**–எவ்விதம் **अब्धेः**–ஸமுத்திரத்தினுடைய **तुङ्गाः**–உயரமான **तरङ्गाः**–அலைகள் **लयं यान्ति**–மறைந்துபோகின்றனவோ **तथा एव**–அவ்விதமே **मे**–என்னுடைய **संनिधौ**–ஸந்நிதியில் **सेवतां**–ஸேவிக்கின்றவர்களுடைய **आपदः**–ஆபத்துக்களும்

நீங்கிவிடுகின்றன **इतीव**—என்பதுபோல **नृणां**—மனிதர்களுக்கு **ऊर्मिपङ्क्तीः**—அலைகளின் வரிசைகளை **दर्शयन्तं**—காட்டுகின்றவ ரான **तं गुहं**—அந்த குகப்பெருமானை **सदा**—எப்பொழுதும் **हृत्सरोजे**—எனது இருதயகமலத்தில் **भावये**—த்யானம் செய்கிறேன்.

குஹன் ஸமுத்ரக்கரையில் அமர்ந்திருக்கின்றார் என்று ஏற்கனவே கூறப்பட்டுள்ளது. அவ்வாறு அவர் அமர்ந்திருப் பதற்கு மற்றோர் காரணமும் இங்கு காட்டப்படுகின்றது. ஸமுத்திரத்தில் பயங்கரமான அலைகள் வரிசைவரிசையாகக் கிளம்புகின்றன. ஆனால் அவைகள் ஸமுத்திரத்திலேயே மறைந்துவிடுகின்றன. அதுபோல ஸம்ஸாரமாகிய கடலில் தத்தளிக்கும் ஒவ்வொருவனுக்கும் ஆபத்துக்கள் ஏற்பட்டுக் கொண்டே இருக்கின்றன. ஆனால் பகவானை ஸேவிக் கின்றவன் அந்த ஆபத்துக்களினின்றும் விடுபடுகிறான். அந்த ஆபத்துக்கள் அலைபோல் தோன்றி உடனே மறைந்து விடுகின்றன என்பதைக் கடவுள் இந்த அலைகளின் உதாரணத்தைக்கொண்டு நன்கு விளக்குகின்றார். அப்படிப் பட்ட குஹப்பெருமானைப் போற்றவேண்டும். (5)

(அ) இரு சுலோகங்களால் கந்தமாதன கிரியை வர்ணிக்கிறார் :—

गिरौ मन्निवासे नरा येऽधिरूढा-
स्तदा पर्वते राजते तेऽधिरूढाः ।
इतीव ब्रुवन्गन्धशैलाधिरूढः
स देवो मुदे मे सदा षण्मुखोऽस्तु ॥ ६ ॥

கிரௌ மந்நிவாஸே நரா யேऽதிரூடா:
ததா பர்வதே ராஜதே தேऽதிரூடா: ।
இதீவ ப்ருவன் கந்த சைலாதிரூட:
ஸ தேவோ முதே மே ஸதா ஷண்முகோऽஸ்து ॥

**ये नराः**—எந்த மனிதர்கள் **मन्निवासे**—என்னுடைய இருப்பிடமாகிய **गिरौ**-மலையில் **अधिरूढाः**—ஏறியிருக்கின்றார்களோ **ते**—அவர்கள் **तदा**-அப்பொழுது **राजते पर्वते**—வெள்ளி மலையில் **अधिरूढाः** ஏறியவர்களாக ஆகிறார்கள் **इति**—என்று **ब्रुवन् इव**—சொல்கின்றவர்போல **गन्धशैलाधिरूढः**—கந்தமாதன மலையின் மீது ஏறியுள்ள **सः**-அந்த **षण्मुखः देवः**-ஆறுமுகமுள்ள கடவுள் **मे**—எனக்கு **सदा**—எப்பொழுதும் **मुदे**—சந்தோஷத்திற்காக **अस्तु**—இருக்கட்டும்.

ஆறுமுகன் குன்றுதோறும் குடியிருப்பதை அனைவரும் அறிவர். அதுபோலவே இங்கு அவர் கந்தமாதனம் என்ற மலைமீது அமர்ந்துள்ளார். அவ்வாறு அவர் வீற்றிருக்கும் மலை மீது எவன் ஏறுகின்றானோ அவன் சகல பாபங்களும் நீங்கப்பெற்றுக் கைலயங்கிரியை அடைவான் என்பதைக் காட்டவே அவர் அங்கு அமர்ந்துள்ளார் போலும். ஆகவே சிவபெருமானின் ஸந்நிதியையடைந்து கைவல்ய சுகத்தைப் பெற விரும்புகின்றவன் ஆறுமுகன் வீற்றிருக்கும் மலைமீது ஏறி அவனைப் போற்றவேண்டும். அவனது அருள்பெற்றால் தான் ஸுகமாக வாழலாம். ஆதலால் அம்முருகனை வழிபட்டு ஸுகத்தையடைவோமாக. (6)

**महांभोधितीरे महापापचोरे**
**मुनीन्द्रानुकूले सुगन्धाख्यशैले ।**
**गुहायां वसन्तं स्वभासा लसन्तं**
**जनार्तिं हरन्तं श्रयामो गुहं तम् ॥ ७ ॥**

மஹாம்போதிதீரே மஹாபாபசோரே.
முனீந்த்ரானுகூலே ஸுகந்தாக்ய சைலே ।
குஹாயாம் வஸந்தம் ஸ்வபாஸா லஸந்தம்
ஜநார்த்திம் ஹரந்தம் ச்ரயாமோ குஹம் தம் ॥

**महापापचोरे**—கொடிய பாபங்களை அபஹரிக்கின்ற **महाम्भोधि**—பெரிய சமுத்திரத்தினுடைய **तीरे**—கரையில்

**मुनीन्द्रानुकूले**–சிறந்த முனிவர்களுக்கு நன்மை பயக்கும் **सुगन्धाख्यशैले**–சுகந்தம் என்ற பெயர்கொண்ட கந்தமாதன கிரியில் **गुहायां**-குகையில் **वसन्तं**–வசிக்கின்றவரும் **स्वभासा**-தன்னுடைய காந்தியினுல் **लसन्तं**-விளங்குகின்றவரும் **जनार्तिं**-ஜனங்களுடைய துன்பங்களை **हरन्तं**–போக்குகின்றவருமான **तं गुहम्**–அந்த குஹப்பெருமானை **श्रयामः**–சரணமடைகின்ருேம்.

தெற்குத் திக்கிலுள்ள சமுத்திரம் மிகப் பெருமை வாய்ந்தது. அங்கு ஸ்நாநம் செய்கின்றவர்கள் பாபம் நீங்கப்பெற்றவர்களாய் புனிதமாகின்றனர். ஆங்கு கந்த மாதனகிரி என்று பிரசித்திபெற்ற ஓர் மலை விளங்குகின்றது. அதில் முனீஸ்வரர்கள் வாஸம்செய்து வருகின்றனர். அம்மலைக் குஹையில் குஹன் வாஸம் செய்துகொண்டிருக்கின்ருர். அவரது தேகத்தின் காந்தியால் அம்மலை முழுவதும் தேஜோமயமாய் ஜ்வலிக்கின்றது. அக்குமரன் தன்னை அண்டிய பக்தர்களின் துன்பங்களனைத்தையும் களைந்து மோக்ஷ ஸாம்ராஜ்யத்தைத் தருகின்ருர். அப்படிப்பட்ட குஹப்பெருமானை நாம் சரண்புக வேண்டும். (7)

(அ) குஹன் மஞ்சத்தில் அமர்ந்திருப்பதைக் கூறுகிருர் :—

लसत्स्वर्णगेहे नृणां कामदोहे
सुमस्तोमसंछन्नमाणिक्यमञ्चे ।
समुद्यत्सहस्रार्कतुल्यप्रकाशं
सदा भावये कार्तिकेयं सुरेशम् ॥ ८ ॥

லஸத் ஸ்வர்ணகேஹே ந்ருணாம் காமதோஹே
ஸுமஸ்தோம ஸஞ்சந்ந மாணிக்ய மஞ்சே
ஸமுத்யத்ஸஹஸ்ரார்க்கதுல்யப்ரகாஶம்
ஸதா பாவயே கார்த்திகேயம் ஸுரேஶம் ||

**लसत्**-பிரகாசிக்கின்ற **स्वर्णगेहे**-பொன்மயமான குஹை வீட்டில் **नृणां**-மனிதர்களின் **कामदोहे**-அபீஷ்டங்களை நிறை வேற்றுகின்றதும் **सुमस्तोम**-பூங்கொத்துகளால் **सञ्छन्न**-மறைக் கப்பட்ட **माणिक्यमञ्चे**-ரத்ன மயமான கட்டிலில் **समुद्यत्**-உதிக்கின்ற **सहस्रार्क**-ஆயிரக்கணக்கான சூரியர்களுக்கு **तुल्य**-ஒப்பான **प्रकाशं**-காந்தியையுடையவரும் **सुरेशं**-தேவர் களுக்கு அதிபதியுமான **कार्तिकेयं**-கிருத்திகா தேவதைகளால் போஷிக்கப்பட்ட குகப்பெருமானை **सदा**-எப்பொழுதும் **भावये**-த்யானம் செய்கிறேன்.

முருகக்கடவுள் கிருத்திகை தேவதைகளால் பாலூட்டி வளர்க்கப்பட்டவர். கிருத்திகைகள் அறுவராவர். அவர்களனைவரையும் மகிழ்விக்க எண்ணிய எம்பெருமான் ஆறுமுகங்களை எடுத்துக்கொண்டமையால் அவருக்கு ஆறுமுகன் என்ற பெயர் வழங்கலாயிற்று. கிருத்திகா தேவதைகள் அவரை வளர்த்ததால் அவர் கார்த்திகேயன் என்று பிரசித்திபெற்ருர். அவரது தேஹகாந்தி ஆயிரக் கணக்கான உதய சூர்யர்களையும் தோற்கச்செய்தது. இவர் பிறந்த உடனேயே தேவஸேனைகளின் தலைவனுக ஆகி அரக்கர் குழாத்தை அழித்தொழித்தார். அவர் வசிக்கும் குஹை பொன்மயமான ஒளிபெற்று மானிடர்களின் சகல மனேபீஷ்டங்களையும் நிறைவேற்றும் வல்லமை வாய்ந்து விளங்குகின்றது. அதுபோலவே அவர் வீற்றிருக்கும் ரத்னங்களிழைத்த மஞ்சமும் மாட்சிபெற்றுள்ளது. அவரது குஹையும் மஞ்சமுமே பக்தர்களின் எண்ணங்களை நிறை வேற்றுமாயின் அம் முருகக்கடவுள் தன்னையண்டியவரின் கோரிக்கைகளைப் பூர்த்திசெய்வார் என்பதைச் சொல்லவா வேண்டும்? (8)

(அ) திருப்பாதத்தை வர்ணிக்கிருர் :—

**रणद्धंसके मञ्जुलेऽत्यन्तशोणे**

**मनोहारिलावण्यपीयूषपूर्णे ।**

मनःषट्पदो मे भवक्लेशतप्तः
सदा मोदतां स्कन्द ते पादपद्मे ॥ ९ ॥

ரணத்தம்ஸகே மஞ்ஜுளேऽத்யந்தஶோணே
மநோஹாரி லாவண்ய பீயூஷபூர்ணே ।
மநஷ்ஷட்பதோ மே பவக்லேஶதப்த:
ஸதா மோததாம் ஸ்கந்த தே பாதபத்மே ॥

**स्कन्द**-ஏ முருகக்கடவுளே, **रणत्**-ஒலிக்கின்ற **हंसके**-பாத ஸரங்களையுடையதும் (அன்னங்களையுடையதும்) **मञ्जुले**-மென்மையானதும் **अत्यन्तशोणे**-மிகவும் சிவந்ததும் **मनोहारि**-மனதைக் கவர்கின்ற **लावण्यपीयूष**-அழகு என்ற அமுதம் **पूर्णे**-நிறைந்ததுமான **ते**-உன்னுடைய **पादपद्मे**-பாதமாகிய தாமரையில் **भवक्लेश**-உலக வாழ்க்கையின் துன்பங்களால் **तप्तः**-பரிதவிக்கின்ற **मे**-என்னுடைய **मनषट्पदः**-மனமென்ற வண்டானது **सदा**-எப்பொழுதும் **मोदताम्**-மகிழ்ச்சியடையட்டும்.

சூரியனுடைய தாபத்தால் துன்பமடையும் வண்டு தன்னுடைய துன்பம் நீங்க தாமரை மலரை நாடிச்செல்கின்றது. அப்பொற்றாமரையில் அன்னங்கள் பல அமர்ந்து இன்னிசைகளை எழுப்பிக்கொண்டிருக்கின்றன. அம்மலர் மிகவும் மென்மைவாய்ந்ததாயும் தேனைச் சொரிவதாயும் இருப்பதால் அவ்வண்டு அதையண்டி தன்னைமறந்து மட்டற்ற மகிழ்ச்சி பெறுகின்றது. அதேபோல ஸ்கந்தரின் திருவடித் தாமரையும் பக்தர்களுக்கு ஆனந்தத்தைத் தரவல்லது. அவரது திருவடியில் திகழும் பாதஸரங்கள் இன்னிய ஓசைகளையெழுப்புகின்றன. அவரது திருவடி மிகவும் மென்மைவாய்ந்ததாயும் சிவந்த தன்மை பெற்றதாயும் விளங்குகின்றது. அழகெனும் அமுதம் ஆங்கு பெருக்கெடுத்து ஓடுகின்றது. அவ்வாறு பார்ப்போர் மனதைப் பரவசமாக்கும் ஸ்கந்தரின் திருவடித் தாமரைகளை

ஸம்ஸாரமென்னும் துன்பத்தில் வாடும் என் மனம் பற்றிக் கொள்ளட்டும். அவ்வாறு முருகக்கடவுளின் பாத கமலங்களை த்யானிப்பவர்கள் சகல துன்பங்களும் நீங்கப் பெற்று ஸுகத்தையடைகின்றனர் என்பது இதனுல் புலனுகின்றது. (9)

(அ) ஸ்கந்தனது கடியை (இடுப்பை)த் துதிக்கிருர்:-

सुवर्णाभदिव्याम्बरैर्भासमानां
क्वणत्किङ्किणीमेखलाशोभमानाम् ।
लसद्धेमपट्टेन विद्योतमानां
कटिं भावये स्कन्द ते दीप्यमानाम् ॥ १० ॥

ஸுவர்ணுபதிவ்யாம்பரைர்பாஸமாநாம்
க்வணத்கிங்கிணீமேகலாஶோபமாநாம் ।
லஸத்ஹேமபட்டேன வித்யோதமாநாம்
கடிம் பாவயே ஸ்கந்த தே தீப்யமாநாம் ॥

**स्कन्द**—ஏ கந்த ஸ்வாமியே **सुवर्णाभ**-பொன்னைப்போல் அழகிய **दिव्याम्बरैः** — உயர்ந்த ஆடைகளால் **भासमानां**— பிரகாசிக்கின்றதும் **क्वणत्** — ஒலிக்கின்ற **किङ्किणी** — சிறிய மணிகளையுடைய **मेखला** — ஒட்டியாணத்தால் **शोभमानां** — அழகுவாய்ந்ததும் **लसद्** - காந்தி வீசும் **हेमपट्टेन**-தங்கப் பட்டத்தால் **विद्योतमानां** - மின்னுகின்றதும் **दीप्यमानां** - இயற்கையாகவே ஒளி வீசுகின்றதுமான **ते**-உன்னுடைய **कटिं**-இடையை **भावये**-த்யானம் செய்கிறேன்.

கந்தனின் இடை இயற்கையிலேயே மிகுந்த காந்தியை உடையது. மேலும் அது சிறந்த பொன்னின் நிறத்தையுடைய ஆடைகளால் அலங்கரிக்கப்பெற்று விளங்குகின்றது. அதற்குமேல் விளங்கும் ஒட்டியாணத்திலுள்ள சிறிய மணிகள் இன்னிசைகளையெழுப்புகின்றன. அவ்விடையைச்

சுற்றிக் கட்டப்பட்டிருக்கும் தங்கப் பட்டமும் அதன் ஒளியைப் பன்மடங்காகப் பெருக்குகின்றது. இவ்வளவு தேஜோமயமான அவ்விடையை யான் என் மனதில் த்யானம் செய்கின்றேன். ஒளியின் முன் இருள் நிற்காது அல்லவா. ஆகையால் கந்தஸ்வாமியின் ஒளிபொருந்திய இடை நம் மனதில் நிற்குமாகில் நம்முள் நிலவும் இருள் நீங்கப்பெறும். (10)

(அ) மார்பை வணங்குகிறார் :—

पुलिन्देशकन्याघनाभोगतुङ्ग-
स्तनालिङ्गनासक्तकाश्मीररागम् ।
नमस्याम्यहं तारकारे तवोरः
स्वभक्तावने सर्वदा सानुरागम् ॥ ११ ॥

புலிந்தேசகன்யாகனுபோகதுங்க-
ஸ்தநாலிங்கனுஸக்தகாச்மீரராகம் ।
நமஸ்யாம்யஹம் தாரகாரே தவோர:
ஸ்வபக்தாவனே ஸர்வதா ஸாநுராகம் ॥

**तारकारे!** தாரகன் என்ற அரக்கனை அழித்தவனே! **पुलिन्देश** - வேடர்களின் அரசனுடைய **कन्या**-பெண்ணான வள்ளியினுடைய **घनाभोगतुङ्ग**-கனமானவைகளும், விரிந்தவைகளும், உயர்ந்தவைகளுமான **स्तनालिगन**-கொங்கைகளைத் தழுவியதால் **आसक्त**-ஒட்டிக்கொண்டுள்ள **काश्मीर-राग**-குங்குமத்தின் நிறத்தையுடையதும் **स्वभक्त**-தன்னுடைய பக்தர்களை **अवने**-காப்பாற்றுவதில் **सर्वदा**-எப்பொழுதும் **सानुरागं**-ஆவல் கொண்டதுமான **तव**-உன்னுடைய **उरः**-மார்பை **अहं**-நான் **नमस्यामि**-வணங்குகிறேன்.

முருகன் தன் பராக்ரமத்தால் தாரகனை வதம் செய்து தேவர்களைக் காத்து அருள்புரிந்தார். அவர் தனது பத்னி

யாகிய வள்ளியை ஆலிங்கனம் செய்வதால் அவரது மார்பு குங்குமத்தின் அடையாளத்தைப் பெற்று விளங்கலாயிற்று. அவ்வாறு அவரது மார்பில் தோன்றும் ராகம் அதாவது சிவப்பு நிறம் தன்னையண்டிய பக்தகோடிகளை அவர் எப்பொழுதும் காப்பாற்றுவதற்குத் தயாராக இருப்பதைக் காண்பிப்பதுபோல் தோற்றமளிக்கின்றது. அவ்வித மார்பை வணங்குவதால் நமக்கு நேரும் ஆபத்துக்கள் அனைத்தும் அழிந்துவிடும். மேலும் அவர் தேவியின் ஸம்பந்தத்துடன் விளங்குவதால் பக்தர்கள் எவ்விதமான குற்றம் செய்யினும் அம் முருகக்கடவுள் அவர்களைக் காக்க சித்தமாக இருக்கிறார் என்பது தெளிவாகத் தோற்றுகின்றது.

(அ) கைகளைத் துதிக்கிறார் :—

विधौ क्लृप्तदण्डान्स्वलीलाधृताण्डा-
न्निरस्तेभशुण्डान्द्विषत्कालदण्डान् ।
हतेन्द्रारिषण्डाञ्जगत्त्राणशौण्डा-
न्सदा ते प्रचण्डाञ्श्रये बाहुदण्डान् ॥ १२ ॥

விதௌ க்லுப்ததண்டாந் ஸ்வலீலாத்ருதாண்டாந்
நிரஸ்தேபஶுண்டாந் த்விஷத்காலதண்டாந் ।
ஹதேந்த்ராரிஷண்டாந் ஜகத்த்ராணஶௌண்டாந்
ஸதா தே ப்ரசண்டாந் ஶ்ரயே பாஹுதண்டான் ॥

विधौ - பிரம்மதேவனிடத்தில் क्लृप्तदण्डान् — செய்யப்பட்ட தண்டனையை உடையவைகளும் स्वलीला-தன்னுடைய திருவிளையாட்டினால் धृताण्डान्-எல்லா அண்டங்களையும் தாங்கியவைகளும் निरस्त-போக்கப்பட்ட इभशुण्डान् யானையின் துதிக்கைகளையுடையவைகளும் द्विषत्-பகைவர்களுக்கு कालदण्डान् - யம தண்டமாக இருப்பவைகளும் हत-கொல்லப்பட்ட इन्द्रारिषण्डान् - இந்திரனுடைய பகைவர்களின் கூட்டங்களையுடையவைகளும் जगत् - உலகத்தை

**त्राण**-காப்பதில் **शौण्डान्**-வல்லமையுடையவைகளாயும் இருக்கின்ற **ते**-உன்னுடைய **प्रचण्डान्**-பெரிய **बाहुदण्डान्**-புஜங்களை **सदा**-எப்பொழுதும் **श्रये**-அடைகின்றேன்.

முருகனின் பன்னிரு கைகளும் மிகுந்த பலம் வாய்ந்தன. அவைகள் விளையாட்டாகவே எல்லா அண்டங்களையும் காக்கின்றன. பிரம்மதேவனைக் கூடத் தண்டிக்கும் சக்தி பெற்றன. யானையின் வடிவு பெற்ற அரக்கனின் துதிக்கைகளை அறுத்தெறிந்தன. பகைவர்களைத் தண்டிக்கும் யம தண்டமும் இவையே. இந்திரனுடைய சத்ருக்களை அழித்து அவனைக் காத்ததும் இவையே. இவ்வாறு வலிமை பெற்ற ஆறுமுகனின் புஜங்களைப் போற்றுகிறேன்.

முன் ஒரு காலத்தில் முருகக்கடவுள் பிரம்மதேவனிடம் பிரணவத்தின் பொருளைக் கேட்டார். பிரஹ்மாவுக்குச் சரியான பதில் சொல்லத்தெரியவில்லை. ஆதலால் முருகக் கடவுள் பிரம்மதேவனைச் சிறையில் அடைத்தார். மேலும் முருகனுக்கும் தாரகன் என்ற அரக்கனுக்கும் போர் மூண்டபொழுது தாரகன் யானை முகத்துடன் தோன்றி அவரை எதிர்த்தான். முருகன் தன் கைகளால் அவனது துதிக்கைகளை வெட்டி வீழ்த்தினார் என்ற வரலாறுகள் இங்கு குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

இதனால் முருகனின் புஜங்களை பஜிப்பவர்களுக்கு சத்ரு நாசமும், இஷ்டசித்தியும் ப்ரம்ம ஞானமும் உண்டாகும் என்று தெரிகிறது. (12)

(அ) முருகனுடைய முகமண்டலங்களை இரு சுலோகங்களால் துதிக்கிறார்:—

सदा शारदाः षण्मृगाङ्का यदि स्युः
समुद्यन्त एव स्थिताश्चेत्समन्तात् ।
सदा पूर्णबिम्बाः कलङ्कैश्च हीना-
स्तदा त्वन्मुखानां ब्रुवे स्कन्द साम्यम् ॥ १३ ॥

ஸதா ஶாரதாஷ்ஷண்ம்ருகாங்கா யதி ஸ்யு:
ஸமுத்யந்த ஏவ ஸ்த்திதாஶ்சேத் ஸமந்தாத் ।
ஸதா பூர்ணபிம்பா: கலங்கைஶ்ச ஹீநாஸ்
ததா த்வன்முகாநாம் ப்ருவே ஸ்கந்த ஸாம்யம் ॥

**स्कन्द**–ஸ்கந்த ஸ்வாமியே, **शारदाः**-சரத்காலத்திலுள்ள **षण्मृगाङ्काः**–ஆறு சந்திரர்கள் **सदा**–எப்பொழுதும் **यदि स्युः**–இருப்பார்களேயானால், (அவர்கள் எப்பொழுதும்) **समन्तात्**–சுற்றிலும் **समुद्यन्त एव**–உதயமாகிக்கொண்டே **स्थिताश्चेत्**–இருப்பார்களேயானால் **सदा**–எப்பொழுதும் **पूर्णबिम्बाः**-எல்லாக் கலைகளுடன் நிறைந்தவர்களாயும் **कलङ्कैः हीनाश्च**–களங்கம் அற்றவர்களாயும் இருந்தால் **तदा**–அப்பொழுது (அவைகளை) **त्वन्मुखानां**–உன் முகங்களுக்கு **साम्यं**–ஒப்பானவையாக **ब्रुवे**–சொல்வேன்.

உலகில் அழகிய முகத்தை மதிவதனம் என்று கூறுவார்கள். ஆனால் முருகனுடைய முகங்களுக்கோ நிகர் கிடையாது. ஏனெனில் அவைகள் ஆறும் எப்பொழுதும் பொலிவு பெற்று விளங்குகின்றன. சந்திரனோ எனில் ஒன்றே ஒன்று. அவனும் எப்பொழுதும் பூர்ணகலைகளுடன் விளங்குவதில்லை. மேலும் அவனிடம் களங்கம் குடி கொண்டிருக்கின்றது. சரத்காலத்தில் உதய ஸமயத்தில் தான் அவன் மிகவும் அழகாகத்தோன்றுகின்றான். மற்ற காலங்களில் அவ்வளவு அழகு அவனுக்குக் கிடையாது. முருகனுடைய ஆறுமுகங்களுக்கும் உவமை கூற ஆறுமதிகள் தேவை. அவைகள் எப்பொழுதும் பூர்ணமாயும் மாசற்ற தாயும் பொலிவு பெற்றதாயும் இருத்தல் வேண்டும். அப்பொழுதுதான் அவைகள் ஆறுமுகங்களுக்கு ஒப்பாகும். சந்திரனைப்பார்ப்பதால் தாபம் நீங்குகின்றது. ஆனந்தம் உண்டாகின்றது. அதுபோல் இம்முகங்களை த்யானம் செய்வதாலும் தர்சனம் பண்ணுவதாலும் தாபங்கள் நீங்கி மகிழ்ச்சி ஏற்படும் என்பது தெளிவாகக் காட்டப்படுகின்றது.

स्फुरन्मन्दहासैः सहंसानि चञ्च-
त्कटाक्षावलीभृङ्गसङ्घोज्ज्वलानि ।
सुधास्यन्दिबिम्बाधराणीशसूनो
तवालोकये षण्मुखाम्भोरुहाणि ॥ १४ ॥

ஸ்புரந்மந்தஹாஸை: ஸஹம்ஸாநி சஞ்சத்
கடாக்ஷாவலீப்ருங்கஸங்கோஜ்வலாநி ।
ஸுதாஸ்யந்திபிம்பாதராணீசஸூநோ
தவாலோகயே ஷண்முகாம்போருஹாணி ॥

**ईशसूनो**–ஈச்வரனுடைய புத்திரனை முருகக்கடவுளே! **स्फुरन्मन्दहासैः**–விளங்குகின்ற புன்சிரிப்புகளால் **सहंसानि**–ஹம்ஸங்களுடன் கூடியவைகளும் **चञ्चत्**–அசைகின்ற **कटाक्षावली**–கடைக்கண்களின் வரிசைகளாகிய **भृङ्ग-संघोज्ज्वलानि**–வண்டுக் கூட்டங்களால் மிகுந்த ஒளிபொருந்தியவைகளும் **सुधास्यन्दि**–அமுதத்தைப் பெருக்குகின்ற **बिम्बाधराणि**–கோவைப்பழங்களைப்போன்ற உதடுகளை உடையவைகளும் ஆகிய **तव**–உம்முடைய **षण्मुखाम्भोरुहाणि**–ஆறுமுகங்களாகிய தாமரைகளை **आलोकये**–பார்க்கிறேன்.

ஈச புத்திரனுடைய ஆறு முகங்களே மலர்ந்த செந்தாமரைகள். அவருடைய முகங்களில் தவழும் புன்சிரிப்புகளே தாமரைகளில் விளையாடும் அன்னங்கள். அவைகளின் கடாக்ஷங்களே தாமரைகளில் சஞ்சரிக்கும் வண்டுகளின் வரிசைகள். கோவைப் பழங்களைப் போன்ற உதடுகளிலிருந்து சிந்தும் உமிழ்நீர்களே அமுதம் போன்ற தேன் சொட்டுகள். அம்மாதிரியான முகங்களைத் தரிசனம் செய்வதால் அமுதலாபம் ஏற்படும். இங்கு முருகக் கடவுளின் அழகிய ஆறு முகங்களையும் உருவகப்படுத்தி தாமரைகளாக வர்ணித்திருப்பது குறிப்பிடத்தக்கது. (14)

(அ) கடாக்ஷத்தை வர்ணிக்கிறார் :—

**विशालेषु कर्णान्तदीर्घेष्वजस्रं**
**दयास्यन्दिषु द्वादशस्वीक्षणेषु ।**
**मयीषत्कटाक्षः सकृत्पातितश्चे-**
**द्भवेत्ते दयाशील का नाम हानिः ॥ १५ ॥**

*விஶாலேஷு கர்ணாந்ததீர்க்கேஷ்வஜஸ்ரம்*
*தயாஸ்யந்திஷு த்வாதஶஸ்வீக்ஷணேஷு ।*
*மயீஷத் கடாக்ஷ: ஸக்ருத் பாதிதஶ்சேத்*
*பவேத் தே தயாசீல கா நாம ஹாநி: ॥*

**दयाशील**—கருணை காட்டும் தன்மை வாய்ந்தவரே! **विशालेषु**—அகன்றவைகளும் **कर्णान्तदीर्घेषु**—காதுவரை நீண்டவைகளும் **अजस्रं**-இடைவிடாமல் **दयास्यन्दिषु**—தயவைப் பெருக்குகின்றவைகளுமான **द्वादशसु ईक्षणेषु**—உம்முடைய பன்னிரு கண்களிலும் விளங்கும் **कटाक्षः**-கடைக்கண் பார்வை **मयि**—என்னிடத்தில் **सकृत्**—ஒரு தடவை **ईषत्**—கொஞ்சம் **पातितः चेत्**—விழும்படி செய்யப்படுமாகில் **ते**—உமக்கு **का नाम हानिः**—என்ன குறைதான் **भवेत्**—ஏற்படும்?

முருகனுடைய பன்னிரு கண்களும் மிகுந்த அழகு வாய்ந்தவை. அவைகள் அகன்றனவாயும் காதுவரை நீண்டனவாயும் விளங்குகின்றன. அக்கண்களின் சிறிதளவு பார்வை விழுந்தாலும் மிகுந்த நன்மையே உண்டாகும். ஏனெனில் முருகன் தயாமூர்த்தி. பக்தர்களின் துயரை நீக்கும் தன்மை வாய்ந்தவன். அவனது கடைக்கண் பார்வைகளோ எப்பொழுதும் அமுதத்தைப் பெருக்குகின்றன. அவ்வாறான கடைக்கண்களைப் பக்தர்கள்பால் செலுத்துவதால் அவனுக்கு யாதொரு நஷ்டமும் கிடையாது. பக்தர்களுக்கும் மிகுந்த லாபம் ஏற்படுகிறது. (15)

(அ) ஸ்கந்தருடைய சிரஸை வணங்குகிறார்:—

सुताङ्गोद्भवो मेऽसि जीवेति षड्धा
जपन्मन्त्रमीशो मुदा जिघ्रते यान् ।
जगद्भारभृद्भ्यो जगन्नाथ तेभ्यः
किरीटोज्ज्वलेभ्यो नमो मस्तकेभ्यः ॥ १६ ॥

ஸுதாங்கோத்பவோ மேऽஸி ஜீவேதி ஷட்தா
ஜபந்மந்த்ரமீசோ முதா ஜிக்ரதே யாந் ।
ஜகத்பாரப்ருத்ப்யோ ஜகந்நாத தேப்ய:
கிரீடோஜ்வலேப்யோ நமோ மஸ்தகேப்ய: ॥

**सुत**—ஏ குழந்தாய் **मे**-என்னுடைய **अङ्गोद्भवः**—அங்கத்திலிருந்து உண்டானவனாக **असि**—இருக்கின்றாய் **जीव**—நீடூழி வாழ்வாயாக **इति**-என்ற **मन्त्रं**-மந்திரத்தை **षड्धा**—ஆறு தடவை **जपन्**—ஜபித்துக்கொண்டு **ईशः**—உலகைக் காக்கும் சிவபெருமான் **यान्** எந்த சிரசுகளை **मुदा**—மகிழ்ச்சியுடன் **जिघ्रते**-முகர்கின்றாரோ **जगन्नाथ**—உலகைக் காக்கும் முருகப் பெருமானே **तेभ्यः**—அந்த **जगद्भार**—உலகங்களின் பாரத்தை **भृद्भ्यः**—தாங்குகின்றவைகளும் **किरीटोज्ज्वलेभ्यः**—கிரீடங்களால் ஜ்வலிக்கின்றவைகளுமான **मस्तकेभ्यः**—மத்தகங்களுக்கு **नमः**—வணக்கம்.

புத்ரன் தந்தையின் அங்கங்களிலிருந்து உண்டாகின்றான் என்று **अङ्गादङ्गात् सम्भवसि** முதலான மந்திரங்கள் கூறுகின்றன. குழந்தை பிறந்தவுடன் தகப்பனார் தன் மகன் நீடூழி வாழ்வதற்காகச் சில மந்திரங்களைச் சொல்லி உச்சிமுகர்ந்து களிப்பெய்துகின்றார். அதுபோலவே உலகத்திற்கு வழிகாட்டியான சிவபெருமானும் தன் புத்ரனை ஆறுமுகன் நீண்டகாலம் வாழவேண்டுமென்று ஆசி கூறுகின்றார். தன் மகனின் ஒவ்வொரு சிரஸையும் முகரும்பொழுதும் அவர் மந்திரத்தை ஒருதடவை உச்சரிக்கின்றார். இவ்வாறு

ஆறு தடவை மந்திரம் ஓதி ஆறு சிரஸ்ஸுகளையும் முகர்ந்து அளவற்ற மகிழ்ச்சி பெறுகின்றார். ஈசன் உலகைக் காக்கும் வல்லமை வாய்ந்தவன். அதுபோலவே ஈசபுத்திரனும் ஜகத்தை ரக்ஷிக்கின்றான். **आत्मा वै पुत्रनामासि** என்று மறைகள் பறைசாற்றவில்லையா? குமரனும் ஈசனும் ஒன்று அல்லவா? ஆதலால் உலகின் பாரத்தை உத்தம புத்திரனை குமரன் தனது ஆறு சிரஸுகளாலும் தாங்குகின்றான். அவனுடைய சிரஸுகளில் ரத்னங்கள் பதிப்பிக்கப்பட்ட மகுடங்கள் விளங்குகின்றன. அவனுடைய சிரஸுகளை வணங்கினால் நம்மைக் காக்கும் பொறுப்பையும் அவனே ஏற்றுக்கொள்வான் (16)

(அ) அங்கங்களை தனித் தனியாக வர்ணித்துவிட்டு முழு உருவத்தையும் தியானிக்கிறார்:—

**स्फुरद्रत्नकेयूरहाराभिराम-**
**श्चलत्कुण्डलश्रीलसद्गण्डभागः ।**
**कटौ पीतवासाः करे चारुशक्तिः**
**पुरस्तान्ममास्तां पुरारेस्तनूजः ॥ १७ ॥**

ஸ்புரத்ரத்நகேயூரஹாராபிராம-
ஶ்சலத்குண்டலஶ்ரீலஸத்கண்டபாக: ।
கடௌ பீதவாஸா: கரே சாருஶக்தி:
புரஸ்தாந்மமாஸ்தாம் புராரேஸ்தநூஜ: ॥

**स्फुरत्**-ஜ்வலிக்கின்ற **रत्न**-ரத்னங்கள் பதித்த **केयूर**-தோள்வளை **हार**-முத்துமாலை இவைகளால் **अभिरामः**-மனதைக் கவருகின்றவரும் **चलत्**-அசைகின்ற **कुण्डलश्री**-குண்டலங்களின் அழகினால் **लसत्**-விளங்குகின்ற **गण्डभागः**-கன்னப் பிரதேசங்களை உடையவரும் **कटौ**-இடுப்பில் **पीतवासाः**-பொன்னிறமான ஆடையை உடையவரும் **करे**-கையில் **चारुशक्तिः**-அழகிய சக்தி என்ற ஆயுதத்தைத் தாங்கியவரு

மான **पुरारेः**—த்ரிபுரர்களை அழித்த சிவபெருமானின் **तनूजः**-குமாரன் **मम**—என்னுடைய **पुरस्तात्** -முன்னிலையில் **आस्ताम्** —இருக்கட்டும்.

முன் சுலோகங்கள் பாதத்திலிருந்து ஆரம்பித்து சிரஸு வரையில் திருமுருகனின் திருஉருவத்தை வர்ணித்தன. இங்கு அவரது பீஷணமாயும் ரமணீயமாயுமுள்ள வடிவம் சித்தரித்துக்காட்டப்பட்டுள்ளது. முருகன் ஜ்வலிக்கின்ற ரத்னங்கள் பதித்த தோள்வளைகளையணிந்துகொண்டிருக்கின்றார். நல்ல முத்துமாலைகள் அவரது மேனியை வசீகரமுள்ளதாகச் செய்கின்றன. அவரது காதுகளில் விளங்கும் குண்டலங்களின் ஒளி கன்னங்களில் பரவி அவரது முகத்தை மிகவும் பொலிவு பெறச்செய்கின்றன. அவருடைய இடையைப் பொன்னிறமுடைய ஆடை அலங்கரிக்கின்றது. இவ்வாறு குமரக்கடவுளின் திருஉருவம் பக்தர்களைப் பரவசப் படுத்துகின்றதாக விளங்குகின்றது. ஆயினும் அவரது கரத்தில் தோன்றும் சக்தி என்ற ஆயுதம் மிகுந்த அச்சத்தை உண்டுபண்ணுகின்றது. இவ்வாறான மூர்த்தியை த்யானிப்பதால் ஸகல சத்ரு பயமும் நீங்கி நன்மை பெறலாம். (17)

(அ) தாய் தந்தையருடன் சேர்ந்திருக்கும் (ஸோமாஸ்கந்தமூர்த்தி) குழந்தையாக வர்ணிக்கிறார்:—

**इहायाहि वत्सेति हस्तान्प्रसार्या-**
**ह्वयत्यादराच्छंकरे मातुरङ्कात् ।**
**समुत्पत्य तातं श्रयन्तं कुमारं**
**हराश्लिष्टगात्रं भजे बालमूर्तिम् ॥ १८ ॥**

இஹாயாஹி வத்ஸேதி ஹஸ்தாந் ப்ரஸார்யா
ஹ்வயத்யாதராத் ஶங்கரே மாதுரங்காத் ।
ஸமுத்பத்ய தாதம் ஶ்ரயந்தம் குமாரம்
ஹராஶ்லிஷ்டகாத்ரம் பஜே பாலமூர்த்திம் ॥

वत्स-குழந்தாய்! इह-இங்கு आयाहि-வா इति-என்று हस्तान्-கைகளை प्रसार्य-நீட்டி शङ्करे आदरात् आह्वयति-சிவபெருமான் ஆவலுடன் அழைக்கும்பொழுது मातुः-தாயினுடைய अङ्कात्-மடியிலிருந்து समुत्पत्य-தாவி तातं-தந்தையை श्रयन्तं-அடைகின்றவரும் हराश्लिष्टगात्रं-பரமேச்வரனால் அணைத்துக்கொள்ளப்பட்ட தேஹத்தையுடையவரும் बालमूर्तिं-குழந்தை வடிவமுள்ளவருமான कुमारं-குமரக் கடவுளை भजे-துதிக்கின்றேன்.

குமரக்கடவுள் குழந்தையின் வடிவத்துடன் கூடியவராய்த் தன் பெற்றோர்களான பார்வதீ பரமேச்வரர்களின் மனதுகளை மகிழ்விக்கின்றார். தனது தாயின் மடியில் விளையாடும் பாலனைத் தந்தை அன்புடன் "இங்கு வா" என அழைக்க அதுவும் அகமகிழ்வுடன் தாவித் தந்தையை அடைகின்றது. குழந்தையும் தெய்வமும் கொண்டாடுமிடத்தென்பர் சான்றோர். இங்கு குழந்தை ரூபத்துடன் விளையாடும் இத்தெய்வம் தன்னைக் கொண்டாடும் பெற்றோர் மனதைக் கவர்வதில் என்ன ஆச்சர்யம்? குழந்தை ரூபத்துடன் விளங்கும் குமரக்கடவுள் தன்னிடம் வந்தவுடன் தந்தையாகிய சிவபெருமானும் அவரை இறுகத்தழுவி மகிழ்ச்சி பெறுகின்றார். பிள்ளையின் ஸ்பரிசத்தைக்காட்டிலும் அதிக ஸுகத்தைத்தருவது இவ்வுலகில் வேறு ஒன்றுமே இல்லை. இவ்வாறு உலகத்தின் தாய் தந்தையரான பார்வதீ பரமேச்வரர்களுக்கே ஆனந்தத்தைத் தரும் அக்குழந்தைக் கடவுளை நாம் பேணுவோமாகில் அளவற்ற ஸுகத்தைப் பெறலாம். அன்புடன் அழைத்த தந்தையிடம் தாவிவந்தது போல நாமும் பக்தியுடன் அழைத்தால் நம்மிடமும் வந்து ஆனந்தம் தருவான். (18)

(அ) குமரனின் நாமாக்களைச்சொல்லி அவர் பெருமைகளைக் காட்டுகிறார்:—

कुमारेशसूनो गुह स्कन्द सेना-
पते शक्तिपाणे मयूराधिरूढ ।
पुलिन्दात्मजाकान्त भक्तार्तिहारिन्
प्रभो तारकारे सदा रक्ष मां त्वम् ॥ १९ ॥

குமாரேசஸூநோ குஹ ஸ்கந்த ஸேநா-
பதே ஶக்திபாணே மயூராதிரூட ।
புலிந்தாத்மஜாகாந்த பக்தார்த்திஹாரிந்
ப்ரபோ தாரகாரே ஸதா ரக்ஷ மாம் த்வம் ॥

**कुमार**–குமரா ! **ईशसूनो**–பரமேச்வரருடைய புதல்வனே **गुह**–குஹனே ! **स्कन्द**–ஸ்கந்தனே ! **सेनापते**–சேனைத்தலைவா ! **शक्तिपाणे**–சக்தி என்ற ஆயுதந்தாங்கியவனே ! **मयूराधिरूढ**–மயில்மீது ஏறியவனே ! **पुलिन्दात्मजाकान्त**–வேடுவ குமாரியின் காதலனே ! **भक्तार्ति**–பக்தர்களின் துன்பங்களை **हारिन्**–போக்குகின்றவனே ! **प्रभो**–வல்லவனே **तारकारे**–தாரகனை ஸம்ஹரித்தவனே **त्वं**–நீ **मां**–என்னை **सदा**–எப்பொழுதும் **रक्ष**–காப்பாற்று.

குமரக்கடவுள் அன்புடன் அழைப்பவர்களிடம் விரைந்து சென்று பரிவுகாட்டுகிறார். ஆதலால் ஸ்ரீ பகவத்பாதர் அவர்களும் அவரைப்பல பெயர்களால் அழைத்துத்தன்னைக் காக்கும்படி வேண்டுகின்றார். இங்கு குமார ஈசஸூநோ என்று முருகன் கூறப்பட்டிருக்கின்றான். **कारणगुणाः कार्ये संक्रामन्ति** என்ற ஓர் ந்யாயமுண்டு. அதாவது காரணத்தின் குணமானது கார்யத்தையும் அடையும். அதுபோலவே காரணமாகிய ஈச்வரனிடம் தோன்றிய குமரக்கடவுள் அவனுடைய குணமாகிய காக்கும் சக்தியையும் பெற்று விளங்குகின்றார். குஹ, ஸ்கந்த, ஸேநாபதே என்ற சொற்கள் அவருடைய சக்திகளைக்காட்டுகின்றன. அவர் தேவர்களின் சேனைக்குத் தலைமை தாங்கும் சக்தி

வாய்ந்தவர். அவரது சக்தியைத் தாங்கும் வல்லமை பெற்றவர் யாருமிலர். அவரைக்காண்பதும் அரிது. அவர் தன்னுடைய கையில் சக்தியை ஏந்தி மயில்மீது அமர்ந்து பக்தர்களைப் பலவித ஆபத்துக்களிலிருந்தும் காக்கக்கர்த்துக் கொண்டிருக்கிறார். தேவர்களை ரக்ஷிப்பதற்காகத் தாரகன் என்ற அரக்கனையும் அழித்திருக்கின்றார். வள்ளிதேவியின் ரமணனான முருகப்பெருமான் நம்மைக் காப்பாராக. (19)

(அ) மூன்று சுலோகங்களால் அந்த்யகாலத்தில் தர்சனம் கொடுத்துக் காக்கவேண்டுகிறார் :—

प्रशान्तेन्द्रिये नष्टसंज्ञे विचेष्टे
कफोद्गारिवक्त्रे भयोत्कम्पिगात्रे ।
प्रयाणोन्मुखे मय्यनाथे तदानीं
द्रुतं मे दयालो भवाग्रे गुह त्वम् ॥ २० ॥

ப்ரஶாந்தேந்த்ரியே நஷ்டஸம்க்ஞே விசேஷ்டே
கபோத்காரிவக்த்ரே பயோத்கம்பிகாத்ரே ।
ப்ரயாணோந்முகே மய்யநாதே ததாநீம்
த்ருதம் மே தயாளோ பவாக்ரே குஹ த்வம் ॥

**दयालो**–தயவு காட்டும் தன்மை வாய்ந்தவனே **गुह**–குஹனே **प्रशान्तेन्द्रिये**–ஐம்புலன்களும் ஒடுங்கியவனாயும் **नष्टसंज्ञे**–நினைவிழந்தவனாயும் **विचेष्टे**–அசைவற்றவனாயும் **कफोद्गारिवक्त्रे**–வாயிலிருந்து கபத்தைக் கக்கிக்கொண்டிருக்கின்றவனாயும் **भयोत्कम्पिगात्रे**–பயத்தால் நடுங்குகின்ற உடலை உடையவனாயும் **अनाथे मयि**–காப்பவனற்றவனும்ஆன நான் **प्रयाणोन्मुखे**–இவ்வுலகிலிருந்து புறப்படத்தயாராக இருக்கும் பொழுது **तदानीं**–அச்சமயத்தில் **त्वं**–நீ **द्रुतं**–விரைவாக **मे**–என் **अग्रे**–முன்னிலையில் **भव**–இருப்பாயாக.

முன் ச்லோகத்தில் ஆபத்து நேரிடும்பொழுது திருமுருகன் தன்னைக்காக்கவேண்டுமென்று ஸ்ரீ பகவத்பாதர்

அவர்கள் பிரார்த்தனை செய்தார். இங்கு அந்த ஆபத்து எத்தகையது என்பதை அவர் நன்கு காட்டுகின்றார். ஒருவனுக்கு மரணம் சம்பவிக்கும்பொழுது அவனை யார் காக்கமுடியும்? **कः कं शक्तो रक्षितुं मृत्युकाले?** அப்பொழுது அவனது ஐம்புலன்களும் ஒடுங்கிவிடுகின்றன. பிரக்ஞை போய்விடுகின்றது. ஆதலால் அவன் எதையும் அறிந்து கொள்ளமுடியாத நிலையை அடைகிறான். அவன் எங்கும் அசையமுடியாமல் வீழ்ந்து கிடக்கிறான். அவனுடைய முக்கிலிருந்து கபம் பெருகிக்கொண்டிருக்கின்றது. உடல் நடுங்குகின்றது. இவ்வாறாக அவன் நாதனின்றி அல்லல் படும்பொழுது முருகக்கடவுள்தான் அவனைக்காக்க இயலும். ஆதலால் யான் அந்நிலையையடையும்பொழுது முருகப் பெருமான் என்னைக்காக்க என் கண்முன் விரைவில் எழுந்தருள வேண்டும் என்று இரைஞ்சுகின்றார் ஸ்ரீபகவத்பாத ஸ்வாமிகள். ஆதலால் நாமும் முருகனைத் துதித்தால் நமக்கு இவ்வாறான யமபாதை ஏற்படாது என்பது விளங்குகின்றது. (20)

**कृतान्तस्य दूतेषु चण्डेषु कोपा-**
**दह च्छिन्धि भिन्द्धीति मां तर्जयत्सु ।**
**मयूरं समारुह्य मा भैरिति त्वं**
**पुरः शक्तिपाणिर्ममायाहि शीघ्रम् ॥ २१ ॥**

க்ருதாந்தஸ்ய தூதேஷு சண்டேஷு கோபாத்
தஹ ச்சிந்தி பிந்தீதி மாம் தர்ஜயத்ஸு ।
மயூரம் ஸமாருஹ்ய மா பைரிதி த்வம்
புரஶ்ஶக்திபாணிர் மமாயாஹி ஶீக்ரம் ॥

**चण्डेषु**-கொடியவர்களான **कृतान्तस्य**-யமனுடைய **दूतेषु**-தூதர்கள் **कोपात्**-கோபத்தினால் **दह**-கொளுத்து **छिन्धि**-வெட்டு **भिन्धि**-பிள **इति**-என்று **मां**-என்னை **तर्जयत्सु**-அதட்டும் பொழுது **त्वं**-நீ **मयूरं समारुह्य**-மயில்மீது ஏறிக்கொண்டு **शक्ति**-

**पाणिः**-சக்தியைக் கையில் ஏந்தியவனாக **मा भैः**-பயப்படாதே **इति**-என்று **मम**-என்னுடைய **पुरः**-முன்னிலையில் **शीघ्रं**-விரைவாக **आयाहि**-வருவாயாக.

உயிர் உடலைவிட்டு நீங்கும் சமயத்தில் பயங்கரமான தோற்றமுள்ள யமபடர்கள் பலவிதமான ஆயுதங்களைத் தாங்கியவர்களாய் 'கொளுத்து, வெட்டு, பிள' என்று கூச்சலிட்டுக்கொண்டு ஜீவராசிகளைப் பயமுறுத்துகின்றனர். அச்சமயத்தில் யாரும் அவர்களை யமபடர்களின் பயத்தி னின்று விடுவிக்கமுடியாது. முருகப்பெருமான் தான் தன் கையில் சக்தி என்னும் ஆயுதத்தை எடுத்துக்கொண்டு தன்னுடைய பக்தர்களைக் காக்கின்றான். ஆதலால் ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகள் இவ்விதமான ஆபத்துக்காலத்தில் தன்னைக்காப்பாற்ற வேண்டுமெனக் குஹனைப் ப்ரார்த்திக் கின்றார். (21)

प्रणम्यासकृत्पादयोस्ते पतित्वा
प्रसाद्य प्रभो प्रार्थयेऽनेकवारम् ।
न वक्तुं क्षमोऽहं तदानीं कृपाब्धे
न कार्यान्तकाले मनागप्युपेक्षा ॥ २२ ॥

ப்ரணம்யாஸக்ருத் பாதயோஸ்தே பதித்வா
ப்ரஸாத்ய ப்ரபோ ப்ரார்த்தயேऽநேகவாரம் ।
ந வக்தும் க்ஷமோऽஹம் ததாநீம் க்ருபாப்தே
ந கார்யாந்தகாலே மநாகப்யுபேக்ஷா ॥

**कृपाब्धे**-கருணைக் கடலே! **प्रभो**-ப்ரபுவே! **असकृत्**-அடிக்கடி **प्रणम्य**-வணங்கி **ते**-உம்முடைய **पादयोः** பாதங்களில் **पतित्वा**-விழுந்து **प्रसाद्य**-மகிழ்வித்து **अनेकवारं**-பன்முறை **प्रार्थये**-வேண்டுகின்றேன். **तदानीं**-அச்சமயத்தில் **अहं**-நான் **वक्तुं**-பேசுவதற்கு **न क्षमः**-சக்தியற்றவனாவேன். **अन्तकाले**-முடிவு காலத்தில் **मनागपि**-சிறிதுகூட **उपेक्षा**-அசட்டை **न**-**कार्या**-செய்யத்தக்கதல்ல.

"மரண காலத்தில் புலன்கள் அனைத்தும் ஒடுங்கும் பொழுது கடவுளை த்யானம் செய்வதும் பிரார்த்திப்பதும் இயலாத கார்யம். ஆகையால் நான் இப்பொழுதே உன்னுடைய பாதங்களில் பல தடவை விழுந்து உன்னை மகிழச்செய்து பிரார்த்தனை செய்கின்றேன். கடைசி காலத்தில் என்னைக்கைவிடாதே" என்று பகவத்பாதர் பகவானை வேண்டுகின்றார். அதனால் ஏதாவது ஒருசமயம் தன்னைப்பணிந்து துதித்த பக்தர்களை அந்தியகாலத்தில் முருகப்பெருமான் காக்கின்றார் என்று விளங்குகின்றது. (22)

(அ) இரு சுலோகங்களால் மனத்துன்பத்தை நீக்க வேண்டுகிறார்:—

**सहस्राण्डभोक्ता त्वया शूरनामा**
**हतस्तारकः सिंहवक्त्रश्च दैत्यः ।**
**ममान्तर्हृदिस्थं मनःक्लेशमेकं**
**न हंसि प्रभो किं करोमि क्व यामि ॥ २३ ॥**

ஸஹஸ்ராண்டபோக்தா த்வயா சூரநாமா
ஹதஸ்தாரகஸ்ஸிம்ஹவக்த்ரஶ்ச தைத்ய: ।
மமாந்தர்ஹ்ருதிஸ்தம் மந:க்லேஶமேகம்
ந ஹம்ஸி ப்ரபோ கிம் கரோமி க்வ யாமி ॥

**प्रभो**-ஏ ப்ரபுவே! **सहस्राण्डभोक्ता**-ஆயிரம் அண்டங்களையும் ஆண்ட **शूरनामा**-சூரபத்மன் என்று பெயர்கொண்ட அஸுரன் **त्वया**-உம்மால் **हतः**-கொல்லப்பட்டான். **तारकः**-தாரகன் என்பவனும் **हतः**-கொல்லப்பட்டான். **सिंहवक्त्रः दैत्यः च**-சிம்மத்தின் முகத்தையுடைய அரக்கனும் **हतः**-கொல்லப்பட்டான். **मम**-என்னுடைய **अन्तर्हृदिस्थं**-மனதினுள் நிலைத்திருக்கும் **मनःक्लेशं न एकं**-கவலை என்ற ஒன்றை **न हंसि**-கொல்லாவிடில் **किं करोमि**-என்னசெய்வேன்? **क्व**-எங்கு **यामि**-செல்வேன்?

முருகக்கடவுள் மிகுந்த சக்தி வாய்ந்தவர். ஆயிரம் அண்டங்களையும் ஆண்ட சூரபத்மன் என்ற அஸுரனை அழித்தவர். அதேபோல் அவர் தாரகன் என்ற அரக்கனையும் சிம்மமுகன் என்னும் மற்றுமோர் அஸுரனையும் கொன்று உலகில் உள்ள அனைவரது துன்பங்களையும் நீக்கி இருக்கின்றார். அவரைப்பணிவதால் நம் துன்பங்களும் நீங்கும். அவரன்றி ஒருவராலும் கவலைகளைத் தீர்க்க முடியாது. அவர் நம்மீது கருணை வைக்காவிடில் நாம் என்ன செய்ய முடியும்? எங்கு செல்லமுடியும்? (23)

अहं सर्वदा दुःखभारावसन्नो
भवान्दीनबन्धुस्त्वदन्यं न याचे ।
भवद्भक्तिरोधं सदा क्लृप्तबाधं
ममाधिं द्रुतं नाशयोमासुत त्वम् ॥ २४ ॥

அஹம் ஸர்வதா துக்கபாராவஸந்நோ
பவாந் தீனபந்துஸ்த்வதன்யம் ந யாசே ।
பவத்பக்திரோதம் ஸதாக்லுப்தபாதம்
மமாதிம் த்ருதம் நாஶயோமாஸுத த்வம் ॥

**उमासुत**–உமையின் புத்ரனே! **अहं**–நான் **सर्वदा**–எப்பொழுதும் **दुःखभारावसन्नः**–துன்பச்சுமையால் தவிக்கின்றேன். **भवान्**–நீர் **दीनबन्धुः**–ஏழைகளுக்கு உதவி செய்கின்றவர். **त्वदन्यं**–உம்மைத்தவிர வேறு ஒருவரையும் **न याचे**–நான் வேண்டவில்லை. **भवद्भक्तिरोधं**–உம்மிடம் பக்தி வைப்பதற்குத் தடைசெய்கின்றதும் **सदा**–எப்பொழுதும் **क्लृप्तबाधं**–துன்பத்தையுண்டுபண்ணுகின்றதுமான **मम**–என்னுடைய **आधिं**–மனோவ்யாதியை **द्रुतं**–சீக்ரமாக **त्वं**–நீர் **नाशय**–அழிப்பீராக.

தாயைப்போல் சேய் என்று சொல்வார்கள். உமையின் புதல்வனை ஆறுமுகக்கடவுளும் தன் தாயின் குணங்களைப் பெற்று விளங்குகின்றான். உமை சிவனைத் தன்

கணவனாக அடையும்பொருட்டுத் தவம்செய்ய விரும்பினாள். ஆனால் அவள் தாய் உ ஏ குழந்தாய்! **मा** வேண்டாம் என்று சொல்லி அவள் தவம் செய்வதைத் தடுத்தாள். அதனால் அவளுக்கு உமை என்ற பெயர் வழங்கலாயிற்று. ஆயினும் அவள் இடையூறுகளைப் பாராட்டாமல் தவம் செய்து சிவ பெருமானையே பதியாக அடைந்தாள். அவளது குமாரனும் பக்தனுக்கு ஏற்படும் இடையூறுகளைக் களைவான் என்பது **उमासुत** என்ற சொல்லால் விளங்குகின்றது. அதனால் அவரை அண்டுபவர்களின் இடைஞ்சல்களைக் களைந்து அம்முருகக்கடவுள் அவர்களிடம் பக்தியை உண்டுபண்ணுகிறார். அதனால் பக்தனுடைய துன்பங்களனைத்தும் நீங்குகின்றன. அவரைத் தவிர வேறு யாரை சரண் புகுவேன்? யாரை வேண்டுவேன்? (24)

(அ) திருச்செந்தூரில் பக்தருக்கு அருளுகின்ற பன்னீர் இலை விபூதியின் பெருமையைக் கூறுகிறார் :—

**अपस्मारकुष्ठक्षयार्शःप्रमेह-**
**ज्वरोन्मादगुल्मादिरोगा महान्तः ।**
**पिशाचाश्च सर्वे भवत्पत्रभूतिं**
**विलोक्य क्षणात्तारकारे द्रवन्ते ॥२५॥**

அபஸ்மார குஷ்டக்ஷயார்சஃப்ரமேஹ-
ஜ்வரோந்மாதகுல்மாதிரோகா மஹாந்தஃ ।
பிஶாசாஶ்ச ஸர்வே பவத்பத்ரபூதிம்
விலோக்ய க்ஷணாத் தாரகாரே த்ரவந்தே ॥

**तारकारे**-தாரகன் என்ற அரக்கனைக் கொன்றவனே! **महान्तः**-பெரிய **अपस्मार**-அபஸ்மாரம் **कुष्ठ**-குஷ்டம் **क्षय**-க்ஷயம் **अर्शः**-மூலம் **प्रमेह**-மேஹம் **ज्वर**-ஜுரம் **उन्माद**-பைத்தியம் **गुल्मादि**-குன்மம் இது முதலான **रोगाः**-நோய்களும் **सर्वे पिशाचाः च**-எல்லாப்பிசாசுகளும் **भवत्**-உம்முடைய **पत्रभूतिं**-இலையில் வைக்கப்பட்டுள்ள விபூதியை **विलोक्य**-பார்த்து **क्षणात्**-ஒரே விநாடியில் **द्रवन्ते**-ஓடிவிடுகின்றன.

முருகப்பெருமானின் இலை விபூதியைக் கண்ட உடனேயே ஸகல ரோகங்களும் பிசாசங்களும் விலகுகின்றன. அவ்வாறு இருக்க இவ்விபூதியைத் தரித்துக் கொள்வதால் எல்லா ஆபத்துக்களும் விலகுமென்பதைச் சொல்லவாவேண்டும்? தவிரவும் ஸாதாரணமாக விபூதியின் மஹிமையோ எல்லோருக்கும் தெரிந்ததே. அதிலும் பன்னீரிலையில் அடங்கிய முருகப்பெருமானின் பிரஸாதமான விபூதியின் மஹிமையை எல்லோரும் அனுபவித்திருப்பார்கள். இதன் மஹிமையைப் பல பெரியோர்களின் சரித்ரங்களும் நன்கு புலப்படுத்துகின்றன. மேலும் முருகக்கடவுளின் கருணையால் இலை விபூதியை ஓர் நிதியாகப்பெற்ற பக்த ரத்னங்களான த்ரிஸ்வதந்த்ர முனீஶ்வரர்களின் பல அற்புத வைபவங்களும், விபூதியும் கையுமாக அம்முனிவரது வடிவமாய்த் தோன்றி பக்த ஜனங்களுக்குக் கருணைபுரியும் முருகப் பெருமானின் பல ஆச்சரியமான செயல்களும் கணக்கில் அடங்கா. (25)

(அ) ஆண்டவனிடம் நம் ஒவ்வொரு அவயவமும் ஈடுபடும் விதத்தைக் காட்டுகிறார்:—

दृशि स्कन्दमूर्तिः श्रुतौ स्कन्दकीर्ति-
र्मुखे मे पवित्रं सदा तच्चरित्रम् ।
करे तस्य कृत्यं वपुस्तस्य भृत्यं
गुहे सन्तु लीना ममाशेषभावाः ॥ २६ ॥

த்ருஶி ஸ்கந்தமூர்த்தி: ஶ்ருதௌ ஸ்கந்த கீர்த்தி:
முகே மே பவித்ரம் ஸதா தச்சரித்ரம் ।
கரே தஸ்ய க்ருத்யம் வபுஸ்தஸ்ய ப்ருத்யம்
குஹே ஸந்து லீநா மமாஶேஷபாவா: ॥

मे-என்னுடைய दृशि-கண்ணின்முன் स्कन्दमूर्तिः-முருகப் பெருமானுடைய திருவுருவம் (தோன்றட்டும்) श्रुतौ-காதில் स्कन्दकीर्तिः-முருகனுடைய புகழுரை (விழட்டும்) मुखे-வாயில் पवित्रं-புனிதமான तच्चरित्रं-அவனது கதையும் करे-கையில்

**तस्य कृत्यं**-அவனுக்குச் செய்யும் கைங்கர்யமும் இருக்கட்டும். **वपुः**--உடல் **तस्य भृत्यं**-அவனுடைய ஏவலாளாக இருக்கட்டும் (இவ்வாறு) **मम**-என்னுடைய **अशेषभावाः**--எல்லாச் செய்கைகளும் **गुहे**-குஹனிடம் **सदा**-எப்பொழுதும் **लीनाः**-ஈடுபட்டவைகளாக **सन्तु**-இருக்கட்டும்.

நம் உடலில் உள்ள ஒவ்வொரு அவயவத்திற்கும் ஒவ்வொரு சக்தி இருக்கிறது. கண்ணுக்குப் பார்க்கும் சக்தியும் காதுக்குக்கேட்கும் சக்தியும், வாய்க்குப் பேசும் சக்தியும், கைக்கு வேலை செய்யும் திறனும் இருக்கிறது. இது போல் மற்ற அவயவங்களுக்கும் விசேஷ சக்தி இருக்கிறது. காலுக்கு நடக்கும் சக்தி, தலைக்கு வணங்கும் சக்தி. நாம் எல்லோரும் ஸாதாரணமாக இந்த அவயவங்களை உலக விஷயங்களில் உபயோகப்படுத்துகிறோம். உபயோகம் இல்லாததும், பார்க்கத்தகாததுமான உருவங்களைப் பார்க்கிறோம். கேட்கத்தகாதவைகளைக்கேட்கிறோம். சொல்லத்தகாதவைகளைச் சொல்கிறோம். செய்யத்தகாதவைகளைச் செய்கிறோம். எண்ணத் தகாதவைகளை எண்ணுகிறோம். இதனால் ஸம்ஸாரச்சுழலில் சிக்கித் தவிக்கிறோம். இந்த சுலோகத்தில் பகவத்பாதர் நம் ஒவ்வொரு அவயவங்களையும் அதாவது உடல் முழுவதையும் முருகனிடத்திலேயே எப்பொழுதும் ஈடுபடுத்தவேண்டுமென்று உபதேசிக்கிறார். கண் கோவில்களில் விளங்கும் ஸ்கந்தரின் உருவத்தையே எப்பொழுதும் பார்க்கவேண்டும். அவரின் புகழ்மிக்க சரித்திரங்களை அடியார்கள் சொல்வதைக் காதால் கேட்க வேண்டும். வாயால் அவர் கதைகளைச்சொல்லவேண்டும். கையால் அவருக்கு பூஜை முதலிய கார்யங்களைச் செய்ய வேண்டும். காலால் அவர் திருக்கோயிலுக்கு நடந்துசெல்ல வேண்டும். தலையால் அவரை வணங்கவேண்டும். மனதால் அவரையே நினைக்க வேண்டும். இவ்வாறு நம் உடலை அவரிடம் ஈடுபடுத்தி ஆண்டவனுக்காகவே ஒவ்வொரு காரியத்தையும் செய்து வரவேண்டும். உடலைப் பெற்ற பயன் இதுதான். (26)

(அ) முருகன் கடையர்களையும் காக்கும் தெய்வமெனக் கூறுகிறார் :—

मुनीनामुताहो नृणां भक्तिभाजा-
मभीष्टप्रदाः सन्ति सर्वत्र देवाः ।
नृणामन्त्यजानामपि स्वार्थदाने
गुहाद्दैवमन्यन्न जाने न जाने ॥ २७ ॥

முநீநாமுதாஹோ ந்ருணாம் பக்திபாஜா-
மபீஷ்டப்ரதாஸ்ஸந்தி ஸர்வத்ர தேவா: ।
ந்ருணாமந்த்யஜாநாமபி ஸ்வார்த்ததாநே
குஹாத்தைவமந்யந் ந ஜாநே ந ஜாநே ॥

**मुनीनां**—முனிவர்களுக்கோ **उताहो**—அல்லது **भक्तिभाजां**—பக்தி செய்யும் **नृणां**—மனிதர்களுக்கோ **अभीष्टप्रदाः**—வேண்டிய வரன்களைக் கொடுக்கும் **देवाः**—தேவர்கள் **सर्वत्र**—எல்லா இடங்களிலும் **सन्ति**—இருக்கிறார்கள். **अन्त्यजानां**—கீழ் ஜாதியில் பிறந்த **नृणां अपि**—மனிதர்களுக்கும்கூட **स्वार्थदाने**—மனோபீஷ்டத்தைக் கொடுப்பதில் **गुहात्**—குஹனைத்தவிற **अन्यत् दैवं**—வேறு ஒரு தைவத்தையும் **न जाने**—யான் அறியவில்லை. **न जाने**—யான் அறியவில்லை.

இங்கு முருகப்பெருமானின் தனிச்சிறப்பு எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றது. உலகில் எவ்வளவோ தேவதைகள் இருக்கின்றனர். ஆனால் அவர்கள் எல்லோரும் விதிப்படி தவம் செய்கின்றவர்கட்கோ அல்லது பக்தி செய்கின்றவர்கட்கோதான் வேண்டிய வரங்களைக் கொடுப்பார்கள். ஆனால் கீழ்ஜாதியில் பிறந்து முறைப்படி வழிபட அதிகாரமில்லாதவர்களுக்கும் மனோபீஷ்டங்களைக் கொடுத்துக் காப்பாற்றுபவர் முருகன் ஒருவர்தான். இவ் விஷயத்தில் இவரைப்போல் மற்றோர் தெய்வத்தைக் காண்பது அரிது. (27)

(அ) தனது பரிவாரங்களும் குஹ ஸேவையில் ஈடுபட வேண்டும் என வேண்டுகிறார் :—

कलत्रं सुता बन्धुवर्गः पशुर्वा
नरो वाथ नारी गृहे ये मदीयाः ।
यजन्तो नमन्तः स्तुवन्तो भवन्तं
स्मरन्तश्च ते सन्तु सर्वे कुमार ॥ २८ ॥

களத்ரம் ஸுதா பந்துவர்க்க: பஶுர்வா
நரோ வாத நாரீ க்ருஹே யே மதீயா: ।
யஜந்தோ நமந்தஸ் ஸ்துவந்தோ பவந்தம்
ஸ்மரந்தஶ்ச தே ஸந்து ஸர்வே குமார ॥

**कलत्र**-மனைவியோ **सुताः**-பிள்ளைகளோ **बन्धुवर्गः**-உறவினர் கூட்டமோ **वा**-அல்லது **पशुः**-பசுவோ **नरो वा**-புருஷனே **अथ**-அல்லது **नारी**-பெண்ணே **गृहे**-வீட்டில் **ये मदीयाः**-என்னைச்சேர்ந்தவர்கள் எவர்களோ **कुमार**-குமரக் கடவுளே, **ते सर्वे**-அவர்கள் அனைவரும் **भवन्तं**-உம்மை **यजन्तः**-பூஜிக்கின்றவர்களாயும் **नमन्तः**வணங்குகின்றவர்களாயும் **स्तुवन्तः**-ஸ்துதி செய்கின்றவர்களாயும் **स्मरन्तश्च**-ஸ்மரிக்கின்றவர்களாகவும் **सन्तु**-இருக்கட்டும்.

அறியாமை என்ற காரிருளின்கண் தத்தளிக்கும் ஜீவ ராசிகளுக்கு ஆத்மவித்யை என்ற ஓர் திவ்ய தீபத்தைக் காட்டிக் கரையேற்றவே கருணாமூர்த்தியான சிவபெருமான் பூவுலகில் அவதரித்தார். அவரது திருக்குமாரனே குமரக் கடவுள். ஆதலால் இங்கு அவர் முருகக்கடவுளைக் குமாரா என்று அழைக்கின்றார். என் வீட்டில் வஸிக்கும் என்னைச் சேர்ந்த மனைவி, மக்கள், உறவினர், பசுக்கள் மற்றுமுள்ள ஆண், பெண் அனைவரும் எப்பொழுதும் உன்னையே பூஜித்துக்கொண்டும், வணங்கிக்கொண்டும், துதித்துக் கொண்டும், ஸ்மரித்துக்கொண்டும் இருக்கவேண்டுமென அவர் இறைவனைப் பிரார்த்தனை செய்கின்றார். விவாஹம் செய்துகொள்ளாமல் ப்ரஹ்மசர்யாச்ரமத்திலிருந்தே ஸந்யாஸாச்ரமத்தையடைந்த ஸ்ரீ சங்கரபகவத்பாதர் இந்த

சுலோகத்தில் "என்வீட்டிலுள்ள எனது மனைவி மக்கள்" என்று கூறுவது எவ்வாறு பொருந்தும்? அவருக்கு வீடு ஏது? மனைவி மக்கள் ஏது? என்று ஸந்தேஹம் ஏற்படலாம். அதற்கு ஸமாதானம் இவ்வாறு: என் பக்தன் வீட்டிலுள்ள மனைவி மக்கள் என்று சொல்லலாம். பக்தன் கிருஹஸ்தனாக இருக்கலாம். மேலும் பரமேசுவரனே லோகாநுக்ரஹத்திற்காக சங்கராசார்ய ரூபமாக அவதரித்திருக்கிறார். இந்த ஸ்தோத்திரம் மூலம் அவர் அடையவேண்டியது ஒன்றும் இல்லை. ஸ்துதி செய்யத்தெரியாத பக்தர்களுக்காகத்தான் அவர் எல்லா ஸ்தோத்திரங்களையும் அருளியுள்ளார். இந்த ஸ்தோத்திரத்தைப் படிக்கும் கிருஹஸ்தனாக உள்ள பக்தன் தன் வீட்டிலுள்ள யாவரும் முருகனைப் பஜிக்கவேண்டுமென பிரார்த்திக்கிறான். தான் மட்டுமல்லாமல் தன்னைச் சேர்ந்தவர் யாவரும் முருகனை வழிபட்டு நன்மையடையும்படி செய்யவேண்டியது கிருஹஸ்தனுடைய கடமை என்று தெரிகிறது. இம்மாதிரியான வேறு சுலோகங்களிலும் இதே ஸமாதானத்தைக் கொள்ளலாம். (28)

(அ) குஹ பக்தர்களின் உடலுக்கு ஒரு துன்பமும் ஏற்படாதெனக் காட்டுகிறார்:—

मृगाः पक्षिणो दंशका ये च दुष्टा-
स्तथा व्याधयो बाधका ये मदङ्गे ।
भवच्छक्तितीक्ष्णाग्रभिन्नाः सुदूरे
विनश्यन्तु ते चूर्णितक्रौञ्चशैल ॥ २९ ॥

ம்ருகா: பக்ஷிணோ தம்ஶகா யே ச துஷ்டா:
ததா வ்யாதயோ பாதகா யே மதங்கே ।
பவச்சக்தி தீக்ஷ்ணாக்ர பின்னாஸ்ஸுதூரே
விநஶ்யந்து தே சூர்ணிதக்ரௌஞ்சஶைல ॥

**चूर्णितक्रौञ्चशैल**—கிரௌஞ்சமென்ற மலையைப் பொடியாக்கிய குமர! **ये**—எந்த **मृगाः**—மிருகங்களும் **पक्षिणः**—பறவை

களும் **दुष्टाः**–கொடிய **दंशकाः**–கடிக்கும் ஜந்துக்களும் **तथा**–அது போலவே **मदङ्गे**–என்னுடைய சரீரத்தில் **बाधकाः**–துன்பத்தைக் கொடுக்கின்ற **ये**–எந்த **व्याधयः च**–நோய்களும் உள்ளனவோ **ते**–அவைகள் அனைத்தும் **भवच्छक्तितीक्ष्णाग्रभिन्नाः**–உன்னுடைய சக்தியென்ற ஆயுதத்தின் கூர்மையான நுனியால் பிளக்கப்பட்டவைகளாக **सुदूरे**–வெகுதூரத்தில் சென்று **विनश्यन्तु**–நாசமடையட்டும்.

முருகப்பெருமானைத் துதிப்பதால் சகலவிதமான துன்பங்களும் நீங்கும். விஷக்கடிகளால் ஏற்படும் கஷ்டங்களோ அல்லது பலவிதமான நோய்களால் உண்டாகும் துன்பங்களோ முருகனுடைய சக்தியினால் போக்கப்படுகின்றன. அதனால் பக்தர்கள் சுகித்து வாழலாம் என்பது இதனால் நன்கு விளங்குகின்றது. (29)

(அ) குற்றங்களைப் பொறுத்துக்கொள்ளும்படி வேண்டுகிறார் :—

जनित्री पिता च स्वपुत्रापराधं
सहेते न किं देवसेनाधिनाथ ।
अहं चातिबालो भवान् लोकतातः
क्षमस्वापराधं समस्तं महेश ॥ ३० ॥

ஜநித்ரீ பிதா ச ஸ்வபுத்ராபராதம்
ஸஹேதே ந கிம் தேவஸேநாதிநாத ।
அஹஞ்சாதிபாலோ பவாந் லோகதாத:
க்ஷமஸ்வாபராதம் ஸமஸ்தம் மஹேஶ ॥

**जनित्री**–பெற்ற தாயும் **पिता च**–தந்தையும் **स्वपुत्रापराधं**–தன் பிள்ளையின் குற்றத்தை **सहेते न किम्**–பொறுப்பதில்லையா என்ன? **देवसेनाधिनाथ**–தேவர்களுடைய ஸேனைத் தலைவனே! **महेश**–மிகுத்த சக்திவாய்ந்த முருகப்பெருமானே **अहं च**–நானும் **अतिबालः**–மிகச்சிறுவன் **भवान्**–தாங்கள் **लोक**

**तातः**-உலகங்களுக்கெல்லாம் தந்தை **समस्तं**-எல்லா **अपराधं**-குற்றத்தையும் **क्षमस्व**-பொறுத்தருள்வீராக.

முருகக்கடவுள்தான் உலகமனைத்திற்கும் தாய். தந்தையும் அவரே. நாமெல்லோரும் அவரது குழந்தைகள். தாய் தந்தையர் குழந்தைகள் செய்யும் தவறுகளைப் பொருட்படுத்தாது அவர்களைப்பேணிப் போஷிக்கின்றனர். அதுபோலவே தேவர்களுடைய சேனையின் தலைவனாய் நின்று அவர்கள் அனைவரையும் காத்தருளிய ஸர்வசக்தியுள்ள முருகக்கடவுள் சிறியோராகிய நம் பிழைகளைப்பொறுத்து நம்மையும் காத்தருள்வார். ஆதலால் அனைவரும் அவரைப் போற்றுவது அவசியம். (30)

(அ) குஹனுடைய பரிவாரங்களையும் அவர் இருக்கும் இடத்தையும் வணங்குகிறார் :—

**नमः केकिने शक्तये चापि तुभ्यं**
**नमश्छाग तुभ्यं नमः कुक्कुटाय ।**
**नमः सिन्धवे सिन्धुदेशाय तुभ्यं**
**पुनः स्कन्दमूर्ते नमस्ते नमोऽस्तु ॥ ३१ ॥**

நம: கேகிநே ஶக்தயே சாபி துப்யம்
நமஶ்சாக துப்யம் நம: குக்குடாய ।
நமஸ்ஸிந்தவே ஸிந்துதேஶாய துப்யம்
புநஸ்ஸ்கந்தமூர்த்தே நமஸ்தே நமோஸ்து ॥

**केकिने**-கே கா என்ற இனிய குரலையுடைய மயில் வாஹனத்திற்கும் **शक्तये**-சக்தி என்ற ஆயுதமாகிய **तुभ्यं चापि**-உனக்கும் **नमः**-வணக்கம். **छाग**-ஒரு சமயம் வாஹனமாக இருந்த ஆடே **तुभ्यं**-உனக்கும் **नमः**-வணக்கம். **कुक्कुटाय**-கொடியாக விளங்கும் கோழிக்கும் **नमः**-வணக்கம். **सिन्धवे**-சமுத்திரத்திற்கும் **सिन्धुदेशाय**-சமுத்திரக்கரையில்

உள்ள தேசத்திற்கும் **नमः**–வணக்கம். **स्कन्दमूर्ते**–ஸ்கந்த மூர்த்தியே **तुभ्यं**–உமக்கு **नमः**–வணக்கம். **ते**–உனக்கு **पुनः**–மறுபடியும் **नमः**–வணக்கம் **अस्तु**–இருக்கட்டும்.

முருகனுடைய ஸம்பந்தத்தால் அனைத்தும் போற்றப்படுகின்றன. இனிய கேகா என்ற குரலுடைய மயில் முருகனின் வாஹனமாதலால் அதைப்போற்றி வணங்குகின்றனர். அது போலவே அவனது ஆயுதமான சக்தியை அநேகர் பூஜிக்கின்றனர். ஒரு சமயம் அவனுக்கு வாஹனமாய் விளங்கிய ஆட்டையும், கொடியாகத்திகழ்ந்த கோழியையும் கும்பிடுகின்றனர். அவன் வசிக்கும் சமுத்திரக்கரையும் எதிரிலுள்ள ஸமுத்திரமும் புனிதமானவை. அவையனைத்தும் நம்மால் போற்றப்படுகின்றன. ஆதலால் நாமும் அக்கடவுளை அண்டினுல் கைவிடப்படோம். பெருமையையும் சிறந்த வாழ்வையும் எய்துவோம் என்பது இதனுல் நன்கு விளங்குகின்றது. (31)

जयानन्दभूमञ्जयापारधाम-
ञ्जयामोघकीर्ते जयानन्तमूर्ते ।
जयानन्दसिन्धो जयाशेषबन्धो
जय त्वं सदा मुक्तिदानेशसूनो ॥ ३२ ॥

ஜயாநந்தபூமந் ஜயாபாரதாமந்
ஜயாமோககீர்த்தே ஜயாநந்தமூர்த்தே ।
ஜயாநந்தஸிந்தோ ஜயாசேஷபந்தோ
ஜய த்வம் ஸதா முக்திதானேசஸூநோ ॥

**आनन्दभूमन्**–மிகுந்த ஆனந்தவடிவமே! **जय**–வெற்றி பெறுவீராக. **अपारधामन्**–அளவற்ற காந்தியுள்ளவரே **जय**–வெற்றிபெறுவீராக. **अमोघकीर्ते**–களங்கமற்ற புகழ் பெற்றவரே **जय**–வெற்றி பெறுவீராக. **अनन्तमूर्ते**–அழிவற்ற மூர்த்தியே **जय**–வெற்றி பெறுவீராக. **आनन्दसिन्धो**–ஆனந்தக் கடலே

**जय**-வெற்றி பெறுவீராக. **अशेषबन्धो**-உலகிலுள்ள அனைத் திற்கும் உற்றவரே! **जय**-வெற்றி பெறுவீராக. **मुक्तिदान**-மோக்ஷத்தை தருபவரே **ईशसूनो**-பரமசிவனின் புதல்வரே! **त्वं**-நீர் **सदा**-எப்பொழுதும் **जय**-வெற்றியுடன் விளங்குவீராக.

ஆதிசங்கர பகவத்பாதர் ஸாக்ஷாத் சிவபெருமானின் அவதாரம். அதனால்தான் **शंकरः शंकरः साक्षात्** என்று கூறப் படுகின்றது. அவர் பரமசிவனின் புத்ரனாகிய முருகக் கடவுளைப் போற்றும்பொழுது மெய்மறந்து விடுகின்றார். ஆதலால் இங்கு அவர் சிவபெருமானுடைய நிலையைப் பெற்றுத் தனது புத்ரன் என்றும் வெற்றியுடன் வாழவேண்டு மென்று வேண்டுகின்றார். தனது தனயன் சிறப்புறவேண்டு மென விரும்புவது தந்தையின் இயல்புதானே. இவ்வித மாகக் கந்தனை நாமும் போற்றுவோமாகில் அவரும் நம்முன் தோன்றி நமக்கு ஆனந்த வெள்ளத்தை அள்ளி அளித்துக் காத்தருள்வார். (32)

**भुजङ्गाख्यवृत्तेन क्लृप्तं स्तवं यः**
**पठेद्भक्तियुक्तो गुहं संप्रणम्य ।**
**स पुत्रान्कलत्रं धनं दीर्घमायु-**
**र्लभेत्स्कन्दसायुज्यमन्ते नरः सः ॥ ३३ ॥**

புஜங்காக்ய வ்ருத்தேன க்லுப்தம் ஸ்தவம் ய:
படேத் பக்தி யுக்தோ குஹம் ஸம்ப்ரணம்ய ।
ஸ புத்ராந் களத்ரம் தனம் தீர்க்கமாயு-
ர்லபேத் ஸ்கந்த ஸாயுஜ்யமந்தே நரஸ்ஸ: ॥

**यः**-எவனொருவன் **भुजङ्गाख्यवृत्तेन**-புஜங்கம் என்ற பெயர்கொண்ட விருத்தத்தினால் **क्लृप्तं**-அமைக்கப்பட்ட **स्तवं**-துதியை **भक्तियुक्तः**-பக்தியுடன் கூடியவனாக **गुहं**-குஹனை **संप्रणम्य**-நன்கு வணங்கி **पठेत्**-படிப்பானோ **सः**-அவன்

**पुत्रान्**-பிள்ளைகளையும் **कलत्रं**-நல்ல மனைவியையும் **धनं**-செல்வத்தையும் **दीर्घं आयुः**-நீண்ட ஆயுளையும் **लभेत्**-அடைவான். **सः नरः**-அந்த மனிதன் **अन्ते**-முடிவில் **स्कन्द-सायुज्यं**-முருகக்கடவுளிடம் ஒன்றுபடும் நிலையையும் **लभेत्**-எய்துவான்.

இத்துதிப்பாடல் பலச்ருதியுடன் முடிவுபெறுகின்றது. மிகுந்த பக்தியுடன் முருகனை வணங்கி இதைப் படிப்பவர்களின் எல்லா அபீஷ்டங்களும் இனிது நிறைவேறும். பிள்ளைகள் இல்லாதவர் பிள்ளைகளைப் பெறுவர். மனைவியை விரும்புகிறவர் நல்ல இல்லாளை எய்துவர். செல்வத்தை வேண்டுகின்றவர் அளவற்ற செல்வத்தை அடைவார்கள். முருகனின் பக்தர்களனைவரும் நீண்ட ஆயுளை அடைந்து இன்பமாய் வாழ்ந்து கடைசியாகக் கடவுளிடம் ஒன்றுபடுவர். இதுவே அனைவரும் விரும்பத்தகும் இன்பநிலை. (33)

**ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய புஜங்கம் முற்றும்.**



|| श्रीः ||



# || शिवभुजङ्गम् ||

## சிவ புஜங்கம்

[சிவனைத் துதிக்கும் 40 சுலோகங்கள் கொண்ட இந்த ஸ்தோத்திரம் புஜங்க விருத்தத்தில் அமைந்துள்ளது. சிவன் பாம்புகளைத் தமக்கு மிகவும் உகந்த அணிகளாகக்கொண்டிருப்பதால் புஜங்க ப்ரயாத விருத்தத்தில் அமைக்கப்பட்ட இந்த ஸ்தோத்திரமும் அவருக்கு பிரியத்தைக்கொடுக்கும் என்று கடைசி சுலோகத்தில் ஆசார்யாள் காரணம் கூறுகிறார். இதில் மார்க்கண்டேயனுக்கு அருள் செய்த காலகாலனிடம் மிருத்யு பயம் விலக வேண்டுகிறார். குற்றம் செய்தவருக்கும் அனுக்ரஹம் செய்திருப்பதைக்காட்டி தன் குற்றங்களையும் மன்னிக்கும்படி பிரார்த்திக்கிறார். அம்பிகையுடன் சேர்ந்த சிவமூர்த்தியை தியானிக்கிறார். சிவனை பரப்ரஹ்மமாக முதலிலும் கடைசியிலும் கூறி அவரே தன் ஆத்மா 'शिवोहं' என்று முடிவில் கூறுகிறார்.]

गलद्दानगण्डं मिलद्भृङ्गषण्डं चलच्चारुशुण्डं जगत्त्राणशौण्डम् ।
कनद्दन्तकाण्डं विपद्भङ्गचण्डं शिवप्रेमपिण्डं भजे वक्रतुण्डम् ॥ १ ॥

கலத்தானகண்டம் மிலத்ப்ருங்கஷண்டம்
சலச்சாருஶுண்டம் ஜகத்த்ராண ஶௌண்டம் ।
கனத்தந்தகாண்டம் விபத்பங்கசண்டம்
ஶிவப்ரேமபிண்டம் பஜே வக்ரதுண்டம் ॥

**गलद्दानगण्डं**-பெருகுகின்ற மதஜலத்தையுடைய கன்னத்துடன் கூடியவரும் **मिलद्भृङ्गषण्डं**-மொய்க்கின்ற வண்டுகளின் கூட்டத்தையுடையவரும் **चलच्चारुशुण्डं**-அசைகின்ற அழகிய துதிக்கையையுடையவரும் **जगत्त्राणशौण्डं**- உலகைக் காப்பதில் திறனுள்ளவரும் **कनद्दन्तकाण्डं**-பிரகாசிக்கின்ற தந்தங்களுடன் கூடியவரும் **विपद्भङ्गचण्डं**-ஆபத்துகளைப் போக்குவதில் ஸாமர்த்தியமுடையவரும் **शिवप्रेमपिण्डं**-பரமேச்வரரின் அன்பிற்குப் பாத்திரமானவருமான **वक्रतुण्डं**-கணபதியை **भजे**-துதிக்கிறேன்.

'ஶிவ புஜங்கம்' என்ற இந்தத் துதி நூலை ஆரம்பிப்பதற்கு முன் ஆசார்ய பகவத்பாதர் எல்லா இடையூறுகளையும் அகற்றவல்ல கணபதியை முதலில் தோத்தரிக்கின்றார். கணபதி யானைமுகத்தையுடையவர். அவரது கன்னத்திலிருந்து மதஜலம் பெருகுவதால் வண்டுக் கூட்டம் அவரது முகத்தைச் சுற்றிலும் மொய்க்கின்றது. அவைகளை ஓட்டுவதற்காக அவர் தனது துதிக்கையை ஆட்டுவது மிகவும் மனோகரமாக விளங்குகின்றது. அவரது முகத்தில் உள்ள தந்தங்கள் மிகுந்த ஒளியுள்ளவைகளாதலால் மனதைக் கவருகின்றன. இவ்வாறு மிக்க மதத்துடனும் வலிவுடனும் கூடிய கணேசன் பகைவர்களின் கூட்டத்தை நாசம் செய்வதால் பயங்கரமாகவும் தோற்றமளிக்கின்றார். ஆகையால் அவர் ஒரே ஸமயத்தில் பயங்கரமாயும் மனோஹரமாயுமுள்ள வடிவுடன் காட்சியளிக்கின்றார். அவர் சிவனுடைய அன்புக்குப் பாத்ரமானவர். அவரை வணங்குவதால் ஸர்வாபீஷ்டங்களும் நிறைவேறும். (1)

(அ) சிவனை பரப்ரஹ்ம ஸ்வரூபமாக வர்ணிக்கிறார்:—

**अनाद्यन्तमाद्यं परं तत्त्वमर्थं चिदाकारमेकं तुरीयं त्वमेयम् ।**
**हरिब्रह्ममृग्यं परब्रह्मरूपं मनोवागतीतं महः शैवमीडे ॥ २ ॥**

அனுத்யந்தமாத்யம் பரம் தத்வமர்த்தம்
சிதாகாரமேகம் துரீயம் த்வமேயம் ।
ஹரிப்ரஹ்மம்ருக்யம் பரப்ரஹ்மரூபம்
மனோவாகதீதம் மஹ: சைவமீடே ॥

**अनाद्यन्तं**–ஆதி அந்தம் இல்லாததும் **आद्यं**–(எல்லா வற்றிற்கும்) முதன்மையானதும் **परं**–சிறந்ததாயும் **तत्वमर्थं**–தத்வம் என்ற மஹாவாக்யப் பொருளாயும் **चिदाकारं**–ஞான வடிவமாயும் **एकं**–ஒன்ருயும் **तुरीयं**–நான்காவதாயும் **तु**–ஆனல் **अमेयं**–அறிய முடியாததாயும் **हरिब्रह्ममृग्यं**-விஷ்ணுவினலும் பிரமனலும் தேடத்தகுந்ததாயும் **परब्रह्मरूपं**-பரப்ரும்மஸ்வரூபி யாயும் **मनोवागतीतं**–மனதிற்கும் வாக்குக்குமெட்டாததாயும் இருக்கின்ற **शैवं महः**–சிவசம்பந்தமான ஜ்யோதியை **ईडे**–துதிக்கின்றேன்.

இந்த சிவபெருமானுடைய நிராகாரமான ஸ்வரூபம் வர்ணிக்கப்படுகின்றது. அவர் ஆதியும் அந்தமும் அற்றவர். அவருக்கு முன் யாரும் இருந்தது கிடையாது. ஆகையால் அவர் பிறப்பற்றவர். எது பிறக்கின்றதோ அது நாசத்தை யடைகிறது. சிவபெருமான் பிறப்பற்றவராக இருப்பதால் அவருக்கு இறப்பும் கிடையாது. அவர்தான் ஆதி புருஷன். ஆதலால் அவர் எல்லோரையும் காட்டிலும் சிறந்து விளங்கு கிருர். 'தத்த்வமஸி' என்ற மஹாவாக்யத்திலுள்ள 'தத்' பதத்திற்கும் 'த்வம்' பதத்திற்கும் லக்ஷ்யமாக இருப்பவர். சைதன்யம் என்ற அறிவு அவர் ஸ்வரூபம். அவர் ஒருவர் தான் உண்மைப்பொருள். ஆக்கல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழில்களைச் செய்யும் ப்ரஹ்மா, விஷ்ணு, ருத்ரன் என்ற மும்மூர்த்திகளுக்கும் அப்பால் நான்காவது தத்துவமாக விளங்குகின்றவரும் அவரே. மேலும் ஜாக்ரத், ஸ்வப்நம், ஸுஷுப்தி என்ற மூன்று நிலைகளையும் கடந்து நான்காவதான துரீயாவஸ்தையில் நிலைத்து நிற்கின்றவரும் அவரே. இவ்வாறு அனைத்தையும் கடந்து நிற்பதால் அவரது ஸ்வரூபத்தை அளவிடமுடியாது. அது மனதிற்கும்

வாக்கிற்கும் எட்டாதது. பிரம்மாவும் விஷ்ணுவும் அவரது தோற்றத்தை அளவிட எண்ணி ஆகாயத்தையும் பாதாளத்தையும் நோக்கிச் சென்றனர். ஆனால் அவர்களால் கூட சிவபெருமானுடைய தலையும் கால்களும் கண்டு பிடிக்க இயலவில்லை. இவ்வாறு இருக்க அவரது உண்மை ஸ்வரூபத்தை யார்தான் அளவிடமுடியும்? அவரே பரபிரம்மம். **यतो वाचो निवर्तन्ते अप्राप्य मनसा सह** என்ற ச்ருதிகள் இதற்குச் சான்றுகள். இவ்வாறான ஓர் ஜோதியை நாம் போற்றவேண்டும். (2)

(அ) மனதில் தியானம் செய்ய ஸகுணமூர்த்தியை வர்ணிக்கிறார் :—

**स्वशक्त्यादिशक्त्यन्तसिंहासनस्थं मनोहारिसर्वाङ्गरत्नोरुभूषम् ।**
**जटाहीन्दुगङ्गास्थिशम्याकमौलिं पराशक्तिमित्रं नुमः पञ्चवक्त्रम् ॥**

ஸ்வஶக்த்யாதிஶக்த்யந்தஸிம்ஹாஸநஸ்தம்
மநோஹாரிஸர்வாங்கரத்நோருபூஷம் ।
ஜடாஹீந்துகங்காஸ்திஶம்யாகமௌளிம்
பராஶக்திமித்ரம் நுமঃ பஞ்சவக்த்ரம் ॥

**स्वशक्त्यादि**-தன் சக்தியையே முதலாகக்கொண்டதும் **स्वशक्त्यन्त**-தன் சக்தியையே கடைசியாக உடையதுமான **सिंहासनस्थं**-ஸிம்மாஸனத்தில் வீற்றிருப்பவனும் **मनोहारि**-மனதைக் கவருகின்ற **सर्वाङ्ग**-எல்லா அங்கங்களிலும் **रत्नोरु-भूषम्**-ரத்னங்களிழைத்த பெரிய அணிகளையுடையவனும் **जटा**-ஜடை **अहि**-பாம்பு **इन्दु**-சந்திரன் **गङ्गा**-கங்கை **अस्थि**-எலும்பு **शम्याक**-கொன்றை மலர் இவைகளைத்தாங்கும் **मौलिम्**-தலையையுடையவனும் **पराशक्तिमित्रं**-பராசக்தியின் துணைவனும் **पञ्चवक्त्रम्**-ஐந்து முகங்களையுடையவனுமான பரமேச்வரனை **नुमः**-வணங்குகிறோம்.

பரமேச்வரன் ஸாக்ஷாத் பரதேவதையின் துணைவன். ஆகையால் அவளுடன் அவன் சக்தி பீடங்கள் எல்லாவற்றி

லும் அமர்ந்திருக்கிறான். அவனுடைய எல்லா அங்கங்களும் ரத்னங்களிழைத்த அழகிய நகைகளால் அலங்கரிக்கப்பட்டுள்ளன. அவனுக்கு மற்ற தேவர்களிடம் இல்லாத ஓர் தனிச்சிறப்பு ஏற்பட்டுள்ளது அவனது ஐந்து முகங்களும் தேஜோமயமாய் விளங்குகின்றன. அவனது சிரஸில் ஜடை, சந்திரன், கங்கை, கபாலம், பாம்பு, கொன்றை மலர்கள் முதலியன விளங்குகின்றன. இவ்வாறு பராசக்தி ஸமேதனாய், ஸர்வாலங்காரபூஷிதனாய் ஐந்து முகங்களுடனும் ஸிம்மாஸனத்தில் வீற்றிருந்து உலகனைத்தையும் ஆளும் உத்தமனாய் விளங்கும் உமாமஹேச்வரனை நாம் வணங்குகிறோம். (3)

(அ) ஐந்து முகங்களைக் கூறுகிறார் :—

**शिवेशानतत्पूरुषाघोरवामादिभिः पञ्चभिर्हृन्मुखैः षड्भिरङ्गैः ।**
**अनौपम्य षट्त्रिंशतं तत्त्वविद्यामतीतं परं त्वां कथं वेत्ति को वा ॥**

*ஶிவேஶானதத்பூருஷாகோரவாமா-*
*திபி: பஞ்சபிர்ஹ்ருந்முகை: ஷட்பிரங்கை: ।*
*அனௌபம்ய ஷட்த்ரிம்ஶதம் தத்வவித்யா-*
*மதீதம் பரம் த்வாம் கதம் வேத்தி கோ வா ॥*

**शिव**-சிவன் (ஸத்யோஜாதம்) **ईशान**-ஈசானம் **तत्पूरुष**-தத்புருஷம் **अघोर**-அகோரம் **वामादि**-வாமதேவம் என்ற **पञ्चभिः**-ஐந்து முகங்களோடும் **हृन्मुखैः**-ஹ்ருதயம் முதலான **षड्भिः अङ्गैः**-ஆறு அங்கங்களோடும்கூடி **अनौपम्य**-ஒப்பற்றவரே! **षट्त्रिंशतं**-முப்பத்தாறு **तत्त्वविद्यां**-தத்துவங்களையும் **अतीतं**-தாண்டிய **परं**-சிறந்த **त्वां**-உம்மை **को वा**-யார்தான் **कथं**-எப்படி **वेत्ति**-அறிவான்?

பரமசிவனுக்கு ஸத்யோஜாதம், வாமதேவம், அகோரம் தத்புருஷம், ஈசானம் என ஐந்து முகங்கள். இந்த ஐந்து முகங்களையும் '**सद्योजातं प्रपद्यामि**' என்று ஆரம்பித்து '**ईशानः**

सर्वविद्यानां' என்று முடிவடைகின்ற வேத மந்திரங்கள் போற்றுகின்றன. ஈசுவரனுக்கு ஆறு அங்கங்கள். 'षड्भिरङ्गैरुपेताय' என்பது பாமதி வாக்யம். அவைகளாவன: ஸர்வக்ஞதா (எல்லாவற்றையும் அறிதல்), திருப்தி, அனுதி போதம் (காரணமில்லாமல் தானகவேயமைந்துள்ளஅறிவு), ஸ்வாதந்த்ர்யம் (பிறருக்கு உட்படாமை), அலுப்த சக்தி (அழிவற்ற சக்தி), அனந்த சக்தி (எண்ணற்ற சக்தி)

"सर्वज्ञता तृप्तिरनादिबोधः स्वतन्त्रता नित्यमलुप्तशक्तिः ।
अनन्तशक्तिश्च विभोर्विधिज्ञाः षडाहुरङ्गानि महेश्वरस्य ॥"

மந்திரத்தை ஜபிக்கும்பொழுது இந்த ஆறையும் சொல்லி ஹிருதயம், சிரஸ், சிகை, கவசம், நேத்ரம், அஸ்த்ரம் என்ற ஷடங்கந்யாஸம் செய்வது ஸம்பிரதாயம். இவ்விதச் சிறப்புக்கள் வாய்ந்த இவருக்கு இணையாக வேறு யாரையும் கூறமுடியாது. இவர் 36 தத்வங்களுக்கும் மேல்பட்ட நிலையில் இருப்பதால் இவரை யாரும் எவ்விதத்திலும் அறிந்துகொள்ள முடியாது. (4)

(அ) அர்த்தநாரீசுவர ஸ்வரூபத்தை ஸ்மரிக்கிறுர்:—

प्रवालप्रवाहप्रभाशोणमर्धं मरुत्वन्मणिश्रीमहःश्याममर्धम् ।
गुणस्यूतमेतद्वपुः शैवमन्तः स्मरामि स्मरापत्तिसंपत्तिहेतुम् ॥ ५ ॥

ப்ரவாள ப்ரவாஹ ப்ரபா ஶோணமர்தம்
மருத்வந் மணி ஸ்ரீமஹ: ஶ்யாமமர்தம் ।
குணஸ்யூத மேதத்வபு: ஶைவமந்த:
ஸ்மராமி ஸ்மராபத்தி ஸம்பத்திஹேதும் ॥

**प्रवालप्रवाह**-பவழங்களின் பெருக்கினுடைய **प्रभा**-ஒளியைப்போல் **शोणं**-சிவந்தது **अर्धं**-பாதிபாகம் **मरुत्वन्मणिश्री**-இந்திர நீல மணியின் காந்தியைப்போன்ற **महः श्यामं**-ஒளியினுல் கருப்பானது **अर्धं**-பாதி சரீரம் **गुणस्यूतं**-குணங்கள் நிறைந்ததும் (நூலினுல் தொடுக்கப்பட்டதும்) **स्मरापत्ति-संपत्तिहेतुं**-காமனின் அழிவுக்கும் வளர்ச்சிக்கும் காரண

மானதுமான **एतत्** -இந்த **शैवं**-சிவபெருமானுடையதான **वपुः**-சரீரத்தை **अन्तः**-மனதில் **स्मरामि**-தியானம் செய்கிறேன்.

இங்கு சிவபெருமானுடைய அர்த்தநாரீஸ்வர ஸ்வரூபம் வர்ணிக்கப்படுகின்றது. அதில் ஒரு பகுதி ஸ்த்ரீ ரூபமாயும் மற்றோர் பகுதி புருஷரூபமாயும் விளங்குகின்றது. ஒரு பகுதி பவழங்களின் வரிசைபோல் சிவந்த நிறத்தையுடையது. மற்றொன்று இந்திர நீலம்போல் தோற்றமளிக்கின்றது. இவ்விரண்டும் சேர்ந்திருப்பது மிகவும் மனோஹரமாய்த் திகழ்கின்றது. இவ்வாறு தோன்றும் அர்த்தநாரீஸ்வரர் சிறந்த குணங்களை உடையவர். இதில் புருஷரூபமான சிவன் காமனை அழித்தவர். தவம் செய்யும் தன்மேல் மலர் அம்பை ஏவிய மன்மதனை சிவன் நெற்றிக்கண்ணால் எரித்தார். பெண் உருவமான அம்பாள் காமனை உயிர்ப்பித்தவள். '**कामसंजीवनी**' என்பது ஸ்ரீ லலிதாத்ரிசதியில் உள்ள ஓர் நாமா. நெருப்பில் சாம்பலான காமனுக்கு உயிர்கொடுத்து பிழைக்கவைத்தவள். இங்கு **गुणस्यूतं** என்ற சொல் மிகவும் அழகாக அமைந்திருக்கின்றது. இதனால் மற்றோர் பொருளும் வ்யங்க்யமாகப் புலப்படுகின்றது. **गुणस्यूतं**, என்பதற்கு நூலினால் தொடுக்கப்பட்டது என்ற மற்றோர் பொருளும் உண்டு. அர்த்தநாரீசுவர ரூபமானது ஓர் ரத்னமாலை போன்றது. இதில் பவழங்களும் இந்திர நீல ரத்னங்களும் அமைந்திருக்கின்றன. இந்த ரத்னங்கள் அனைத்தும் சிறந்த நூலால் தொடுக்கப்பட்டுள்ளன. இவ்விதமான ரத்னமாலையை நாம் அணிந்துகொண்டால் நமது ஸகலதாபங்களும் நீங்கிவிடும். மேலும் சிவபக்தர்களாகிய நாம் அவனுடைய திருநாமங்களை ஜபிக்கவேண்டும். அதற்காக ஜபமாலையை அணியவேண்டும். இங்கு பகவானுடைய திவ்ய ஸ்வரூபமே ஓர் ஜபமாலைபோல் அமைந்து இருப்பது மிகுந்த விசேஷமானது அல்லவா? ஆகையால் அவருடைய இந்த அர்த்தநாரீசுவர ஸ்வரூபத்தை நம் மனக்கண் முன் நிறுத்திக் கொண்டாலே நமது மனோபீஷ்டங்கள் அனைத்தும் கைகூடுமென்பதில் என்ன ஐயம்? (5)

(அ) பாதாரவிந்தத்தை வணங்குகிறார் :—

स्वसेवासमायातदेवासुरेन्द्रानमन्मौलिमन्दारमालाभिषिक्तम् ।
नमस्यामि शंभो पदाम्भोरुहं ते भवाम्भोधिपोतं भवानीविभाव्यम् ॥

ஸ்வஸேவா ஸமாயாத தேவாஸுரேந்த்ரா-
நமந்மௌலி மந்தார மாலாபிஷிக்தம் ।
நமஸ்யாமி ஶம்போ பதாம்போருஹம் தே
பவாம்போதிபோதம் பவாநீவிபாவ்யம். ॥

**शम्भो**-ஹே பரமேச்வரா **स्वसेवा**-தனக்கு ஸேவை செய்வதற்காக **समायात**-வந்த **देवासुरेन्द्र**-தேவேந்திரன், அசுரேந்திரன் இவர்களுடைய **आनमन्**-வணங்குகின்ற **मौलि-मन्दारमाला**-தலைகளிலிருந்துவிழும் மந்தார மலர்களின் மாலைகளால் **अभिषिक्तम्**-அபிஷேகம் செய்யப்பட்டதும் **भवाम्भोधि**-பிறவியென்ற பெருங்கடலைக் கடப்பதற்குச் சாதனமான **पोतम्**-படகாயும் **भवानीविभाव्यम्**-பார்வதீ தேவியால் போற்றத்தக்கதுமான **ते**-உம்முடைய **पदाम्भोरुहं**-திருவடித் தாமரையை **नमस्यामि**-பூஜிக்கின்றேன்.

சிவபெருமானுடைய பாதபத்மம் மிகவும் பெருமை வாய்ந்தது. அதைத் தேவர்களும் அஸுரர்களும் ஸேவிக்கின்றனர். அமராதிபனும் அஸுரச் சக்ரவர்த்தியும் இவரது பாதத்தில் வணங்கும்பொழுது அவர்களுடைய மகுடங்களில் விளங்கும் மந்தார மாலைகள் இதன்மேல் விழுந்து இதை அலங்கரிக்கின்றன. பிறவி என்ற ஓர் பெருங்கடலைத் தாண்டுவதற்கு இது ஓர் தோணியாக விளங்குகின்றது. பரமேச்வரனுடைய பத்னியாகிய பார்வதீ தேவியும் இதையே தியானம் செய்கின்றாள். இந்த பாதபத்மத்தை நாம் எப்பொழுதும் பூஜித்தல்வேண்டும். இதனால் நமக்கு நன்மையே ஏற்படும். இதை **शम्भो** என்ற பதம் நன்கு காட்டுகின்றது. (6)

(அ) - நான்கு சுலோகங்களால் சிவநாமாக்கள் மூலம் அவர் பெருமையைக் காட்டித் துதிக்கின்றார் :

**जगन्नाथ मन्नाथ गौरीसनाथ प्रपन्नानुकम्पिन्विपन्नार्तिहारिन् ।**
**महस्तोममूर्ते समस्तैकबन्धो नमस्ते नमस्ते पुनस्ते नमोऽस्तु ॥ ७ ॥**

ஜகந்நாத மந்நாத கௌரீஸநாத
ப்ரபந்நாநுகம்பிந் விபந்நார்த்திஹாரிந் ।
மஹஸ்தோமமூர்த்தே ஸமஸ்தைகபந்தோ
நமஸ்தே நமஸ்தே புநஸ்தே நமோऽஸ்து ॥

**जगन्नाथ**-உலகனைத்தையும் காக்கின்றவனே **मन्नाथ**-என்னை ரக்ஷிக்கின்றவனே **गौरीसनाथ**-பார்வதீ தேவியுடன் கூடியவனே **प्रपन्नानुकम्पिन्**-தஞ்சம் அடைந்தவர்களிடம் கருணையுள்ளவனே **विपन्नार्तिहारिन्**-ஆபத்துக்குட்பட்டவர்களின் துன்பங்களைக் களைகின்றவனே **महस्तोममूर्ते**-ஒளிகளின் கூட்டத்தையே உருவமாகக் கொண்டவனே **समस्तैकबन्धो**-எல்லாவற்றிற்கும் உற்ற உறவினனே **नमस्ते**-உனக்கு வணக்கம் **नमस्ते**-உனக்கு வணக்கம் **ते**-உனக்கு **पुनः**-மறுபடியும் **नमोऽस्तु**-வணக்கம் இருக்கட்டும்.

பரமேச்வரன் எல்லா உலகங்களையும் காக்கின்றவன். அவனே நம்மையும் ரக்ஷிக்கின்றான். தயாரூபியான அம்பிகையுடன் கூடியிருப்பதால் அவன் தன்னையண்டியவர்களிடம் தயவுகூர்ந்து அவர்களுடைய கஷ்டங்கள் அனைத்தையும் போக்குகின்றான். அவனே பரஞ்ஜோதி. அவன்தான் அனைவருக்கும் உறவினன். அவனை நாம் என்றென்றும் வணங்கவேண்டும். (7)

**विरूपाक्ष विश्वेश विश्वादिदेव त्रयीमूल शंभो शिव त्र्यम्बक त्वम् ।**
**प्रसीद स्मर त्राहि पश्यावमुक्त्यै क्षमां प्राप्नुहि त्र्यक्ष मां रक्ष मोदात् ॥**

விரூபாக்ஷ விஶ்வேஶ விஶ்வாதிதேவ
த்ரயீமூல ஶம்போ ஶிவ த்ர்யம்பக த்வம் ।
ப்ரஸீத ஸ்மர த்ராஹி பஶ்யாவமுக்த்யை
க்ஷமாம் ப்ராப்நுஹி த்ர்யக்ஷ மாம் ரக்ஷ மோதாத் ॥

**विरूपाक्ष**-விருபமான கண்ணையுடையவனே! **विश्वेश**-உலகங்களுக்கெல்லாம் ஈசனே **विश्वादिदेव**-உலகங்களுக்கெல்லாம் ஆதியான கடவுளே **त्रयीमूल**-மூன்று வேதங்களுக்கும் காரணமாக இருப்பவனே! **शम्भो**-நன்மையைத் தருகின்றவனே **शिव**-மங்கள உருவம் கொண்டவனே **त्र्यम्बक**-முக்கண்ணனே **त्वं**-நீ **प्रसीद**-அருள் புரிவாயாக **स्मर**-என்னை ஞாபகத்தில் வைத்துக்கொள்வாயாக. **त्राहि**-என்னைக் காப்பாற்றுவாயாக **अवमुक्त्यै**-மோக்ஷத்தை அளிப்பதற்காக **पश्य**-கடாக்ஷிப்பாயாக **क्षमां प्राप्नुहि**-பொறுத்துக்கொள்வாயாக **त्र्यक्ष**-மூன்று கண்களை உடையவனே **मां**-என்னை **मोदात्**-சந்தோஷத்துடன் **रक्ष** காப்பாயாக.

பரமேச்வரன் நெற்றிக் கண்ணை உடையவன். அதனால் அவன் கொடிய அரக்கர்களை அழித்து உலகங்களை ஆபத்துகளிலிருந்து மீட்கின்றான். உலகங்களையெல்லாம் படைத்தவன். ஆகையால் அவனே முதற் கடவுள். ருக், யஜுஸ், ஸாம என்ற வேதங்களுக்கெல்லாம் அவனே மூலம். எல்லா நன்மைகளும் அவனிடத்திலிருந்தே ஏற்படுகின்றன. அதனால் அவன் சிவனென்று அழைக்கப்படுகின்றான். அவனுடைய அருளால்தான் நாம் கடைத்தேறமுடியும். ஆதலால் அவன் நம்மை எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக்கொண்டு நம்மிடம் அருள் வைத்து நம்மை மோக்ஷத்தில் சேர்ப்பிக்கவேண்டும். நம் குற்றங்களை மன்னித்து அவர் தன்னுடைய க்ருபாகடாக்ஷத்தை நம்மிடத்தில் செலுத்தி நம்மைப் பரிவுடன் காக்கவேண்டும்.

महादेव देवेश देवादिदेव स्मरारे पुरारे यमारे हरेति ।
ब्रुवाणः स्मरिष्यामि भक्त्या भवन्तं ततो मे दयाशील देव प्रसीद ॥

மஹாதேவ தேவேஶ தேவாதிதேவ
ஸ்மராரே புராரே யமாரே ஹரேதி ।
ப்ருவாண: ஸ்மரிஷ்யாமி பக்த்யா பவந்தம்
ததோ மே தயாசீல தேவ ப்ரஸீத ॥

**महादेव**-ஏ மஹாதேவனே **देवेश**-தேவர்களுக்குத் தலைவனே **देवादिदेव**-தேவர்களுக்கெல்லாம் முதல் தேவனே **स्मरारे**-மன்மதனை எரித்தவனே **पुरारे**-புரன் என்ற அரக்கனை மாய்த்தவனே **यमारे**-யமனை அடக்கியவனே **हर**-ஏ பரமேச்வரனே **इति**-என்று **ब्रुवाणः**-சொல்லிக்கொண்டு **भक्त्या**-பக்தியுடன் **भवन्तं**-உம்மை **स्मरिष्यामि**-த்யானம் செய்கிறேன். **ततः**-ஆகையால் **दयाशील**-ஹே கருணைஸ்வரூபியே **देव**-ஏ தேவனே **मे**-எனக்கு **प्रसीद**-அருள்புரிவாயாக.

பரமேச்வரனுடைய பெருமைகள் இங்கு கூறப்படுகின்றன. அவர்தான் மிகப்பெரிய கடவுள். தேவர்களுக்கெல்லாம் ஈசன். தேவர்களுக்கெல்லாம் முதல்வன். மன்மதனை ஒழித்தவர். ஓர் சமயம் அவர் இமயத்தில் தியானநிஷ்டையில் இருந்தார். அவ்வமயம் தாரகன் என்ற ஓர் அரக்கன் தேவர்களைத் துன்புறுத்திவந்தான். அவர்களைக் காப்பாற்றுவதற்குச் சிவபெருமானுடைய வீர்யம்தான் சக்திவாய்ந்தது. அதைத்தாங்க இமவானின் புத்ரியான பார்வதிதேவிதான் தகுந்தவள் என்று பிரம்மாவின் மூலமாக தெரிந்துகொண்ட தேவேந்திரன் அவ்விருவரையும் சேர்த்து வைப்பதற்காக மன்மதனை அனுப்பினன். சிவன் யோக நிஷ்டையிலிருந்து எழுந்த சமயத்தில் பார்வதீதேவி அவருக்கு ஓர் மாலையை ஸமர்ப்பித்தாள். அந்த சமயத்தில் மன்மதன் தன்னுடைய புஷ்பபாணத்தை சிவன்பால் ஏவ சிவனும் சினங்கொண்டு நெற்றிக் கண்ணைத்திறந்தார். அதிலிருந்து கிளம்பிய நெருப்புப்பொறி மன்மதனை எரித்துச் சாம்பலாக்கியது.

அதுபோலவே முன் ஒரு காலத்தில் திரிபுரன் என்ற ஓர் அரக்கன் வாழ்ந்துவந்தான். அவனுக்குத் தங்கம் வெள்ளி

இரும்புகளாலாகிய பறக்கும் மூன்று கோட்டைகள் இருந்தன. அவைகளால் மதங்கொண்ட அவ்வரக்கன் அனைவரையும் துன்புறுத்தலானுன். அதனுல் கோபங்கொண்ட சிவபெருமான் அவ்வரக்கனுடைய மூன்று கோட்டைகளையும் தகர்த்துத் தன் சிரிப்பினுலேயே அவனை எரித்தார்.

மேலும் தன்னுடைய பக்தனுகிய மார்க்கண்டேயனைக் காத்தருளினுர். தன்னுடைய மரணசமயம் நெருங்கும் பொழுது மார்க்கண்டேயன் சிவலிங்கத்தைப் பூஜித்துக் கொண்டிருந்தான். யமன் மார்க்கண்டேயனை அழைத்து வரத் தன்னுடைய தூதர்களை ஏவினுன். ஆனுல் அவர்கள் மார்க்கண்டேயனை அணுக இயலவில்லை. அதனுல் கோபங் கொண்ட யமன் தானே பாசத்துடன் கிளம்பிவந்து மார்க் கண்டேயனுடைய கழுத்தில் பாசத்தைப்போட்டான். மார்க்கண்டேயன் சிவலிங்கத்தை இறுகத் தழுவிக்கொண்டு இருந்ததால் யமபாசம் சிவலிங்கத்தின் மேலும் விழுந்தது. இதனுல் கோபமடைந்த சிவபெருமான் அந்த லிங்கத்திலிருந்து தோன்றி யமனைக் காலால் உதைத்துத் தன் பக்தனுகிய மார்க்கண்டேயனைக் காத்தருளினுர்.

இவ்வாருகப் பரமேச்வரனுடைய பெருமைகளை மனதில் ஸ்மரித்துக்கொண்டு அவரது திருநாமாக்களை எவர் பக்தியுடன் கூறுகின்றனரோ அவர்களுக்குக் கருணுமூர்த்தியான பரமேச்வரன் பரிவு காட்டி அவர்களை எல்லாவித ஆபத்துக் களிலிருந்தும் காப்பாற்றுகின்ருர். (9)

(அ) பக்தனைக் காப்பாற்றவேண்டியது ஈசுவரனின் கடமை என்பதை ஞாபகப்படுத்துகிருர்:—

त्वदन्यः शरण्यः प्रपन्नस्य नेति प्रसीद स्मरन्नेव हन्यास्तु दैन्यम् ।
न चेत्ते भवेद्भक्तवात्सल्यहानिस्ततो मे दयालो सदा संनिधेहि ॥

த்வதந்ய: ஶரண்ய: ப்ரபந்நஸ்ய நேதி
ப்ரஸீத ஸ்மரந்நேவ ஹந்யாஸ்து தைந்யம் ।

ந சேத்தே பவேத் பக்தவாத்ஸல்யஹானி-
ஸ்ததோ மே தயாளோ ஸதா ஸந்நிதேஹி ॥

**दयालो**–தயவுடன் கூடியவனே! **प्रपन्नस्य**–தஞ்சமடைந்தவனுக்கு **त्वदन्यः**–உன்னைத்தவிர வேறு ஒரு **शरण्यः**புகல் **न**–இல்லை **इति**–என்பதை **स्मरन्**–ஞாபகம் வைத்துக்கொண்டு **प्रसीद**–அனுக்ரஹம் செய். **दैन्यं**–ஏழ்மையை **हन्याः**–போக்குவாயாக. **न चेत्**–இல்லாவிடில் **ते**–உனக்கு **भक्तवात्सल्यहानिः भवेत्**– பக்தனிடம் அன்புகொண்டவன் என்பது போய்விடும் **ततः**–ஆகையால் **सदा**–எப்பொழுதும் **मे**–என்னுடைய **सन्निधेहि**–அருகில் இருப்பீராக.

பரமேச்வரன் பக்தர்களிடத்தில் மிகுந்த அன்பு வாய்ந்தவர். அவர் மிகுந்த தயவுள்ளவர். தன்னிடம் தஞ்சம் புகும் பக்தர்களின் ஏழ்மையைப் போக்கி அவர்களுக்கு வேண்டிய நன்மைகளைச் செய்பவர். இவ்வாறு ‘பக்தவத்ஸலர்’ என்ற பெயர் பகவானுக்கு ஏற்பட்டிருக்கிறது. உம்மைத் தஞ்சம் அடைந்த என்னை நீர் கைவிடுவீராகில் நான் அழிந்துபோவேன். என்னைக் காப்பாற்ற இவ்வுலகில் உம்மைத் தவிர வேறு ஒருவரும் இல்லை. தஞ்சம் அடைந்தவனைக் கைவிட்ட உம்மை யாரும் பக்தவத்ஸலன் என்று கூறமாட்டார்கள். ‘பக்தவத்ஸலன்’ என்ற கீர்த்தி நிலைத்திருக்கவேண்டுமானல் என்னைக் கட்டாயம் காப்பாற்றியாக வேண்டும். இது உம்முடைய கடமையாகும் என்று வற்புறுத்துகிருர். (10)

(அ) யாசகனுகிய தனக்கு பக்தியைத் தானம் செய்ய வேண்டுகிருர்:—

*अयं दानकालस्त्वहं दानपात्रं भवानेव दाता त्वदन्यं न याचे ।
भवद्भक्तिमेव स्थिरां देहि मह्यं कृपाशील शंभो कृतार्थोऽस्मि तस्मात् ॥

* ஸ்ரீ சிருங்ககிரி ஸ்ரீ சாரதாபீடம் வியாக்யான ஸிம்ஹாஸனத்தில் 32வது ஆசார்யராக விளங்கிவந்த பாற்காய் ஸ்வாமிகள் என்ற ஸ்ரீ நரஸிம்ஹபாரதி ஸ்வாமிகள் அவர்கள்

அயம் தானகாலஸ்த்வஹம் தானபாத்ரம்
பவா்னேவ தாதா த்வதன்யம் ந யாசே ।
பவத்பக்திமேவ ஸ்திராம் தேஹி மஹ்யம்
க்ருபாஶீல ஶம்போ க்ருதார்த்தோऽஸ்மி தஸ்மாத் ॥

कृपाशील–தயவுகாட்டும் தன்மை வாய்ந்த शम्भो–சிவ பெருமானே! अयं–இது दानकाल:–கொடுப்பதற்கு உரிய ஸமயம். अहं तु–நானும் दानपात्रं–தானம் வாங்கத் தகுதி வாய்ந்தவன். भवान् एव–தாங்களே दाता–கொடுக்கின்றவர். त्वदन्यं–உம்மைத் தவிர வேறு ஒருவரையும் न याचे–வேண்ட வில்லை. मह्यं–எனக்கு स्थिरां–நிலைத்து நிற்கின்ற भवद्भक्तिमेव–உம்முடைய பக்தியையே देहि–கொடுப்பீராக. तस्मात्–அதனுல் कृतार्थ:–கைகூடிய கார்யத்தையுடையவனுக अस्मि–ஆவேன்.

முன் சுலோகத்தில் தான் வேண்டிக்கொண்டபடி, பகவான் தன் அருகில் வந்து என்ன வேண்டுமெனக் கேட்க

ஸ்ரீ சாரதாம்பிகையின் ஆக்ஞையின் பேரில் சிஷ்ய பரிக்ரஹம் செய்து கொள்ள வேண்டும் என்ற ஸங்கல்பத்துடன் சிருங்க கிரியிலிருந்து யாத்திரையாகப் புறப்பட்டு மைசூர் வந்து சேர்ந்தார். அக்காலத்தில் மைசூர் ஸம்ஸ்தானத்தில் ஆஸ் தான பண்டிதராயும் மஹாவித்வானுயுமிருந்து காலம்சென்ற குனிகல் ராமசாஸ்திரிகளின் 3 வது குமாரனுன சிவஸ்வாமி என்பவரையே தம் சிஷ்யனுக ஏற்றுக்கொள்வது என்று தீர்மானித்து மைசூர் மஹாராஜாவிடமும் இதைத் தெரிவித் திருந்தார். தன் தமையனுர் ஸ்ரீலக்ஷ்மீநரஸிம்மசாஸ்திரிகளுடன் ஸ்ரீமஹாஸ்வாமிகளை தாிசிக்க வந்திருந்த 9 வயதுள்ள அந்த சிவஸ்வாமி என்ற பாலகனைத் தன் சமீபத்தில் உட்கார வைத்துக்கொண்டு ஸ்ரீநரஸிம்மபாரதி ஸ்வாமிகள் அதிக ஆதரவுடன் 'உனக்கு என்ன வேணும் அப்பா குழந்தாய்" என்று கேட்டார்கள். இந்தக்கேள்விக்குப்பதிலாக வேறு எந்த வார்த்தையும் சொல்லாமல் அந்த பாலகன் 'अयं दानकाल:' என்ற இந்த சுலோகத்தையே சொன்னுன். இவரே பின்னுல் ஸ்ரீஸச்சிதானந்தசிவாபிநவநரஸிம்மபாரதி ஸ்வாமிகள் என்ற பிரஸித்தியுடன் காலடியில் பகவத்பாத மூர்த்தியை ப்ரதிஷ்டை செய்துவைத்தவர்.

எப்பொழுதும் உறுதியான பக்தி இருக்கும்படி அநுக்ரஹிக்க வேண்டுகிறார். ஆனால் இந்த அசஞ்சல பக்தியைத் தான மாகக் கொடுக்கும்படி கேட்கிறார். உலகில் தானம் நடைபெற நான்கு வஸ்துக்கள் தேவை. கொடுக்கிறவன் (दाता), வாங்குபவன் (पात्रं प्रतिग्रहीता), கொடுக்கப்படும் பொருள் (देयं), காலம். இந்நான்கும் இங்கு நன்கு அமைந் திருப்பதைக் காட்டுகிறார். இங்கு தானமாகக் கொடுக்கப் படும் பொருள் 'உறுதியான பக்தி'. இது என்னிடம் இல்லாததாலும் இப்பொழுது எனக்குத் தேவைப்படுவதாலும் நான்தான் தானம் வாங்கத் தகுதிவாய்ந்தவன். இப்பொழுதுதான் தானம் செய்வதற்கு உரிய காலம். உம் அருளால்தான் எனக்கு பக்தி ஏற்படும். ஆகையால் நீர்தான் கொடுப்பவர் (दाता). இதைக் கொடுப்பதற்கு வேறு யாருக்கும் ஸாமர்த்தியம் இல்லாததால் உம்மைத் தவிர வேறு யாரையும் நான் வேண்டவில்லை. இவ்வளவும் உலகிலுள்ள தானம் மாதிரி அமைந்திருந்தும் ஒரு அம்சத்தில் மட்டும் வித்யாஸம் காணப்படுகிறது. உலகில் தானம் வாங்குபவனை விட தானம் கொடுப்பவனுக்குத்தான் அதிகமான நன்மை ஏற்படுகிறது. இங்கு தானம் கொடுப் பவர் ஈசுவரன். அவருக்கு இந்த தானத்தால் அடைய வேண்டியது ஒன்றும் இல்லை. ஆனால் தானம் வாங்குபவன் இந்த பக்தியைக்கொண்டு மேலான பயனை அடைந்து விடுகிறான். (11)

(அ) தோஷமுள்ளவனிடமும் கருணை காட்டும் ஸ்வபாவத்தைக் கூறுகிறார் :—

**पशुं वेत्सि चेन्मां तमेवाधिरूढः कलङ्कीति वा मूर्ध्नि धत्से तमेव ।**
**द्विजिह्वः पुनः सोऽपि ते कण्ठभूषा त्वदङ्गीकृताः शर्व सर्वेऽपि धन्याः ॥**

பசும் வேத்ஸி சேன் மாம் தமேவாதிரூட:
கலங்கீதி வா மூர்த்நி தத்ஸே தமேவ |

த்விஜிஹ்வ: புன: ஸோऽபி தே கண்டபூஷா
த்வதங்கீக்ருதா: ஶர்வ ஸர்வேऽபி தந்யா: ॥

शर्व–சிவபெருமானே ! मां–என்னை पशुं–மிருகமாக वेत्सि
चेत्–அறிவீராகில் तं एव–அப்பசுவின் மேலேயே आरूढः–
நீர் ஏறிக்கொண்டிருக்கிறீர். वा–அல்லது कलङ्की इति–களங்க
முள்ளவன் என்று என்னை நினைப்பீராகில் तमेव–அந்தக்
களங்கமுள்ள சந்திரனையே मूर्ध्नि–சிரஸில் धत्से–தரிக்கின்றீர்.
पुनः–மறுபடியும் द्विजिह्वः–இரண்டு நாக்குகளையுடையவன்
என்று என்னை எண்ணுவீராகில் सोऽपि–அந்த இரண்டு
நாக்குகளையுடைய பாம்பும் ते–உன்னுடைய कण्ठभूषा–கழுத்
திற்கு அணியாக விளங்குகிறது. त्वदङ्गीकृताः–உம்மால்
ஏற்றுக்கொள்ளப்பட்ட सर्वेऽपि–எல்லோருமே धन्याः–
பாக்யசாலிகள்.

என்னிடம் குற்றங்களுள்ளபோதிலும் என்னைக்
கைவிடாமல் காப்பாற்றவேண்டும். ஏனெனில் என்போன்ற
குற்றமுள்ள பலருக்கு உயர்ந்தநிலை அளித்திருக்கிறீர்.
அவ்விதமிருக்க தோஷத்தைக்காட்டி என்னைமட்டும் கை
விடுவது உசிதம் அல்ல. பசுவைப்போல் நான் விவேகம்
இல்லாமலிருப்பது வாஸ்தவம். ஆனால் பசுவையே வாஹன
மாக ஆக்கிக்கொண்டு அதை ஆதரித்துள்ள தாங்கள்
என்னை எப்படி விலக்கமுடியும்? களங்கமுள்ள சந்திரனை
சிரஸில் தரித்துள்ள தாங்கள் களங்கமுள்ள எனக்கும் அருள்
செய்யவேண்டும். இரண்டு நாக்குகள் உள்ள பாம்புகளை
கழுத்தில் மாலையாக அணிந்திருக்கிறீர். ஆனதால் இரண்டு
விதமான நாக்கு உள்ள (ஒரேமாதிரிப் பேசாமல் உள்
ஒன்று வைத்துப் புறம்பொன்று பேசும்) என்னையும்
காப்பாற்றவேண்டும் என்று கேட்கிறார். குற்றங்கள் பல
செய்தபோதிலும் அதைப்பொருட்படுத்தாமல் கருணையால்
மன்னித்து அருள் செய்வது பரமசிவனுக்கு இயற்கையாக
அமைந்துள்ள ஸ்வபாவம். ஆகையால் குற்றவாளியான

தனக்கும் அருள் செய்யவேண்டும் என்று வேண்டுகிறார். பரமசிவனின் அருள் பெற்றவன்தான் உலகில் பாக்யசாலி.

**न शक्नोमि कर्तुं परद्रोहलेशं कथं प्रीयसे त्वं न जाने गिरीश।**
**तथा हि प्रसन्नोऽसि कस्यापि कान्तासुतद्रोहिणो वा पितृद्रोहिणो वा॥**

ந ஶக்நோமி கர்த்தும் பரத்ரோஹலேஶம்
கதம் ப்ரீயஸே த்வம் ந ஜாநே கிரீஶ।
ததா ஹி ப்ரஸந்நோऽஸி கஸ்யாபி காந்தா—
ஸுதத்ரோஹிணோ வா பித்ருத்ரோஹிணோ வா॥

**गिरीश**—சிவபெருமானே **परद्रोहलेशं**—பிறருக்குச் சிறிதளவு துரோஹத்தைக்கூட **कर्तुं**—செய்வதற்கு **न शक्नोमि**—நான் சக்தியுள்ளவனாக இல்லை. **त्वं**—நீர் **कथं**—எவ்வாறு **प्रीयसे**—என்னிடத்தில் பிரியமுள்ளவராக இருப்பீர் என்று **न जाने**—நான் அறிந்து கொள்ளவில்லை **तथा हि**—அது எப்படி எனில் **कस्यापि**—ஏதோ ஒரு **कान्तासुतद्रोहिणः**—மனைவிக்கும் மக்களுக்கும் துரோஹம் செய்தவனிடமும் **पितृद्रोहिणो वा**—தந்தைக்கு துரோஹம் செய்தவனிடமும் **प्रसन्नोऽसि**—அனுக்ரஹம் செய்தவனாக இருக்கிறீர்.

முன் சுலோகத்தில் பரமேசுவரன் நற்குணம் இல்லாதவனுக்கும் அநுக்ரஹம் செய்கிறார் என்று கூறப்பட்டது. இங்கு பெரியதோஷம் உள்ளவனையும் கைதூக்கி விடுகிறார் என்று காட்டப்படுகிறது. அதாவது மனைவிக்கும், மக்களுக்கும், தந்தைக்கும் துரோஹம் செய்த மஹாபாபியிடமும் ஈசுவரன் கருணைகாட்டி அருள்பாலிக்கிறார். தன் தந்தையின் காலை வெட்டிய சண்டேசுவரரும், தன் பிள்ளையைக்கொன்று சமைத்த சிறுத்தொண்ட நாயனாரும் தன் மனைவிக்குத் துன்பம் விளைவித்த கலிகம்பநாயனார், கழற்சிங்கநாயனார் முதலானோரும் சிவனுடைய அருளைப் பெற்றவர்களில் சிறந்தவர்கள். இதை எல்லாம் கவனித்தால் பெரிய குற்றம் செய்தவன்தான் தங்கள் அருளுக்குப்

பாத்திரமாவான் என்று தெரிகிறது. இம்மாதிரியான பெருங் குற்றம் செய்ய எனக்குத்திறமையில்லையே. உம் அருள் எனக்கு எவ்வாறு கிட்டும்? என்று கேட்கிருர். (13)

(அ) சிவபாதாவலம்பம் யமபயத்தைப் போக்குமெனக் கூறுகிருர்:-

**स्तुतिं ध्यानमर्चां यथावद्विधातुं भजन्नप्यजानन्महेशावलम्बे ।**
**त्रसन्तं सुतं त्रातुमग्रे मृकण्डोर्यमप्राणनिर्वापणं त्वत्पदाब्जम् ॥ १४ ॥**

ஸ்துதிம் த்யானமர்ச்சாம் யதாவத் விதாதும்
பஜந்நப்யஜாநந் மஹேஶாவலம்பே ।
த்ரஸந்தம் ஸுதம் த்ராதுமக்ரே ம்ருகண்டோ:
யமப்ராண நிர்வாபணம் த்வத்பதாப்ஜம் ॥

**महेश**-ஏ மஹேச்வர **यथावत्**-முறைப்படி **स्तुतिं**-துதியையும் **ध्यानं**-தியானத்தையும் **अर्चां**-பூஜையையும் **विधातुं**-செய்வதற்கு **अजानन् अपि**-தெரியாதவனுக இருந்தும் **भजन्**-உன்னைப் போற்றிக்கொண்டு **अग्रे**-தன் முன்னுல் **त्रसन्तं**-பயப்படுகின்ற **मृकण्डोः सुतं**-மிருகண்டுவின் பிள்ளையான மார்க்கண்டேயனை **त्रातुं**-காப்பாற்றுவதற்காக **यमप्राणनिर्वापणं**-யமனுடைய உயிரைப்போக்கிய **त्वत्पदाब्जं** உன்னுடைய பாதகமலத்தை **अवलम्बे**-பற்றிக்கொள்கிறேன்.

பரமேச்வரனுடைய பாதகமலம் மிகவும் சக்தி வாய்ந்தது. அது பக்தர்களை யமபயத்தினின்றும் காக்கின்றது. முறைப்படி துதி, த்யானம், பூஜை முதலியவற்றைச் செய்யத்தெரியாதவர்கூட மிகுந்த பக்தியுடன் பரமேச்வரனுடைய பாதபத்மத்தைப்போற்றல் வேண்டும். அவ்வாறு பரமேச்வரனுடைய பாதபத்மத்தைப்போற்றிய மார்க்கண்டேயனைக் காப்பதற்காகப் பகவான் யமனைக் காலால் உதைத்து அவனை மாய்த்தார். ஆதலால் நாம் பக்தியுடன் அவரது பாதகமலத்தைப் பற்றிக்கொண்டால் யமபாதை ஏற்படாது. (14)

(அ) எல்லாப் பிணிகளும் நீங்கி ஆரோக்யம் ஏற்பட ஆதி வைத்யரிடம் முறையிடுகிறுர்:—

**शिरोदृष्टिहृद्रोगशूलप्रमेहज्वरार्शोजरायक्ष्महिक्काविषार्तान् ।
त्वमाद्यो भिषग्भेषजं भस्म शंभो त्वमुल्लाघयास्मान्वपुर्लाघवाय ॥**

ஶிரோ த்ருஷ்டி ஹ்ருத்ரோக ஶூல ப்ரமேஹ-
ஜ்வரார்ஶோ ஜரா யக்ஷ்ம ஹிக்கா விஷார்த்தான் ।
த்வமாத்யோ பிஷக் பேஷஜம் பஸ்ம ஶம்போ
த்வமுல்லாகயாஸ்மான் வபுர்லாகவாய ॥

**शंभो**-சம்புவே, **त्वं**-நீ **आद्यः**-முதல்வனுன **भिषक्**-வைத்யன் **भस्म**-விபூதியே **भेषजम्**-மருந்து (ஆகையால்) **त्वं**-நீர் **शिरोदृष्टिहृद्रोग**-தலைநோய், கண்நோய், இருதயநோய் **शूल**-வயிற்றுவலி **प्रमेह**-சிறுநீர்பெருக்கு **ज्वर**-காய்ச்சல் **अर्शः**-மூலரோகம் **जरा**-மூப்பு **यक्ष्म**-காசநோய் **हिक्का**-விக்கல் **विष**-விஷம் இவைகளால் **आर्तान्**-பீடிக்கப்பட்ட **अस्मान्**-எங்களை **पुनः**-மறுபடியும் **वपुर्लाघवाय**-தேஹத்தில் ஸாமர்த்தியம் ஏற்பட **त्वं**-நீர் **उल्लाघय**-ஸ்வஸ்தப்படுத்துவாயாக.

உலகில் அநேகமாக எல்லோரும் ஏதாவது ஒரு வியாதியால் துன்புறுகின்றனர். அதிலும் சில பெரிய வியாதிகள் வந்தால் சுலபமாக குணமாவதில்லை. வியாதிகள் வந்து உடலைப்பீடித்துக்கொண்டிருந்தால் அவன் ஒரு காரியமும் செய்யமுடியாது. உடலில் லாகவம் இருக்காது. பலம் எல்லாம் போய்விடும். அந்நிலையில் அவன் எப்படி சிவபூஜை, சிவத்யானம், முதலியவைகளைச் செய்யமுடியும். அதனுல் ஈசுவரனிடம் வேண்டுகிறுர்:- "என் சரீரத்திலுள்ள ஒரு அவயவத்திலாவது ஒரு வியாதியும் இருக்கக்கூடாது. ஏதாவது வியாதி இருந்தால் அது உடனே நீங்கவேண்டும். மேல்கொண்டு வியாதி ஒன்றும் வராமல் சரீரம் பூர்ண ஆரோக்யத்துடன் இருக்கும்படி அனுக்ரஹம் செய்ய வேண்டும்" என்று. விஷபாதையும் மூப்பும்கூட ஏற்படக்

கூடாது என்று கேட்கிறார். வியாதியுள்ளவன் தன் பிணி நீங்க வைத்யனைத் தேடிச்செல்வது வழக்கம். அந்த வைத்யனிடம் இவன் வியாதியைப்போக்கும் மருந்து இருந்தால்தான் அவன் குணப்படுத்தமுடியும். அதற்காகக் கூறுகிறார்—“ நீரே முதன்மையான வைத்யர். மிகச்சிறந்த வைத்யர். உம்மிடமுள்ள பஸ்ம ஸகல வியாதிகளையும் போக்கும் சிறந்த மருந்து ”

‘ प्रथमो दैव्यो भिषक् ’ ‘ भिषक्तमं त्वां भिषजां शृणोमि ’

என்று வேதமானது பரமேசுவரனை முதல் வைத்யராகவும், வைத்யர்களுக்குள் மிகச்சிறந்தவராகவும் கூறுகிறது. இந்த சுலோகத்தை ஜபித்து விபூதியை உடலில் பூசிக்கொள்வதாலும் உட்கொள்வதாலும் தலைவலி, கண்வலி முதலிய ஸகல ரோகங்களும் நீங்கும். உடலில் வலிமையும் பொலிவும் உண்டாகும். (15)

(அ) ஆதிகளை (மனக்லேசங்களை)ப்போக்க வேண்டுகிறார்:—

दरिद्रोऽस्म्यभद्रोऽस्मि भग्नोऽस्मि दूये
विषण्णोऽस्मि सन्नोऽस्मि खिन्नोऽस्मि चाहम् ।
भवान्प्राणिनामन्तरात्मासि शंभो
ममाधिं न वेत्सि प्रभो रक्ष मां त्वम् ॥ १६ ॥

தரித்ரோऽஸ்ம்யபத்ரோऽஸ்மி பக்நோऽஸ்மி தூயே
விஷண்ணோऽஸ்மி ஸந்நோऽஸ்மி கிந்நோஸ்மி சாஹம் ।
பவாந் ப்ராணிநாமந்தராத்மாஸி ஶம்போ
மமாதிம் ந வேத்ஸி ப்ரபோ ரக்ஷ மாம் த்வம் ॥

**अहम्**-நான் **दरिद्रः**-ஏழையாக **अस्मि**-இருக்கிறேன் **अभद्रः**-க்ஷேமமற்றவனாக **अस्मि**-இருக்கிறேன் **भग्नः**-ஒடிந்தவனாக **अस्मि**-இருக்கிறேன் **दूये**-வருத்தப்படுகிறேன் **विषण्णः**

வேதனையடைந்தவனாக **अस्मि**-இருக்கிறேன் **सन्नः अस्मि**-துக்கமடைந்தவனாக இருக்கிறேன் **खिन्नः अस्मि**-கிலேசத்தை யடைந்திருக்கிறேன் **शम्भो**-ஏ சிவபெருமானே, **भवान्**-நீர் **प्राणिनां**-எல்லா ஜீவராசிகளுடையவும் **अन्तरात्मा**-அந்தராத்மா வாக **असि**-இருக்கின்றீர் **मम**-என்னுடைய **आधिं**-மனோ வியாதியை **न वेत्सि**-அறியமாட்டீரா? **प्रभो**-ஏ பிரபுவே, **त्वं**-நீர் **मां**-என்னை **रक्ष**-காப்பாற்றும்.

முன் சுலோகத்தில் சிவபெருமான்தான் நம்முடைய சரீரத்திலுண்டாகும் வியாதிகள் அனைத்தையும் நீக்க வல்லவர் என்று கூறப்பட்டது. இங்கு அவர் நம்முடைய மனதில் உண்டாகும் ஸகல ஆதிகளையும் (க்லேசங்களையும்) போக்கும் வன்மை பெற்றவர் என்று சொல்லப்படுகிறது. சிவபெருமான்தான் சிறந்த பிரபு. அவர் எல்லோருடைய இருதயத்திலும் நிலைத்திருக்கும் அந்தராத்மா. ஆதலால் பிறரால் அறிந்துகொள்ளமுடியாத நம் மனத்துன்பங்களை அவர் நன்கு உணர்கின்றார். அவரைப்போற்றுங்கால் எல்லாத்துன்பங்களும் உடனே நீங்கும். (16)

(அ) ஏழ்மையை அடியுடன் போக்கும் சிவகடாக்ஷ மஹிமையைக் கூறுகிறார்:—

**त्वदक्ष्णोः कटाक्षः पतेत्त्र्यक्ष यत्र**
**क्षणं क्ष्मा च लक्ष्मीः स्वयं तं वृणाते ।**
**किरीटस्फुरच्चामरच्छत्रमाला-**
**कलाचीगजक्षौमभूषाविशेषैः ॥ १७ ॥**

த்வதக்ஷ்ணோ: கடாக்ஷ: பதேத் த்ர்யக்ஷ யத்ர
க்ஷணம் க்ஷ்மா ச லக்ஷ்மீ: ஸ்வயம் தம்
வ்ருணுதே ।
கிரீடஸ்புரச்சாமரச்சத்ரமாலா-
கலாசீகஜக்ஷௌமபூஷாவிசேஷை: ॥

**त्र्यक्ष** - ஏ முக்கண்ணனே! **त्वदक्ष्णोः** - உன் இருகண்களுடைய **कटाक्षः**-கடாக்ஷமானது **यत्र**-எவனிடம் **क्षणं**-சிறிது நேரமாவது **पतेत्**-விழுமோ **तं**-அவனை **क्ष्मा च**-பூதேவியும் **लक्ष्मीः च**-ஸ்ரீதேவியும் **स्वयं** - தாங்களாகவே **किरीट**-மகுடம் **स्फुरच्चामर**-பிரகாசிக்கின்ற சாமரங்கள் **छत्र**-குடை **माला**-ரத்னமாலைகள் **कलाची**-களாஞ்சி **गज**-யானைகள் **क्षौम**-பட்டு **भूषाविशेषैः**-சிறந்த ஆபரணங்கள் இவைகளுடன் **वृणाते**-வரிக்கிறார்கள்.

இங்கு பரமேச்வரனுடைய கருணை கடாக்ஷத்தின் மஹிமை வர்ணிக்கப்படுகின்றது. பரமேச்வரன் மூன்று கண்களையுடையவன். மூன்றாவதான நெற்றிக்கண் துஷ்டர்களை அழிப்பதற்காக ஏற்பட்டது. அதனால் நெற்றிக்கண்ணின் பார்வையை பக்தர்களிடம் செலுத்துவதில்லை. மற்ற இரு கண்களுடைய கடாக்ஷம் எவன் மேல் விழுகின்றதோ அவனே ஸகல ஐச்வர்யங்களையும் பெறுகிறான். இந்த அகண்ட பூமண்டலமனைத்திற்கும் அவனே சக்ரவர்த்தியாகின்றான். லக்ஷ்மீதேவியும் அவனையே வரிக்கின்றாள். இவ்விரு தேவியர்களும் கிரீடம், சத்ரம், சாமரம், ரத்னமாலைகள், வாஹன விசேஷங்கள், பட்டாடைகள் ஆபரணங்கள் இவைகளுடன் அவனையே வந்து அடைகின்றனர். ஆதலால் அனைவரும் பரமேச்வரனுடைய கருணை கடாக்ஷத்திற்குப் பாத்திரமாகவேண்டுமென்பது இதனால் விளக்கப்படுகின்றது. (17)

(அ) சிவன், சக்தி இருவரையும் சேர்த்து வணங்குகிறார்:—

भवान्यै भवायापि मात्रे च पित्रे
मृडान्यै मृडायाप्यघघ्न्यै मखघ्ने ।
शिवाङ्ग्यै शिवाङ्गाय कुर्मः शिवायै
शिवायाम्बिकायै नमस्त्र्यम्बकाय ॥ १८ ॥

பவாந்யை பவாயாபி மாத்ரே ச பித்ரே
ம்ருடாந்யை ம்ருடாயாப்யகக்ந்யை மகக்நே ।
ஶிவாங்க்யை ஶிவாங்காய குர்ம: ஶிவாயை
ஶிவாயாம்பிகாயை நமஸ்த்ர்யம்பகாய ॥

**भवान्यै**-பரமேச்வரனுடைய பத்னியாயும் **मात्रे**-ஸகல லோகங்களுக்கும் தாயாயும் **मृडान्यै**-மகிழ்ச்சியைத் தருகின்ற வளாயும் **अघघ्न्यै**-பாபங்களை போக்குகின்றவளாயும் **शिवाङ्ग्यै**-மங்களகரமான அங்கங்களையுடையவளாயும் **शिवायै**-மங்க ளத்தைத்தரக்கூடியவளாயும் இருக்கின்ற **अम्बिकायै**-அம்பி கைக்கும் **भवाय**-ஸ்வயம்பூவாகவும் **पित्रे**-ஸகலலோகங்களுக் கும் தந்தையாயும் **मृडाय**-சுகத்தைத்தருகின்றவனும் **मखघ्ने**-தக்ஷனுடைய யாகத்தை அழித்தவனும் **शिवाङ्गाय**-மங்கள கரமான அங்கங்களையுடையவனும் **त्र्यम्बकाय**-மூன்று கண் களையுடையவனுமான **शिवाय**-சிவபெருமானுக்கும் **नमः कुर्मः** நமஸ்காரம் செய்கிறோம்.

இந்த சுலோகத்தில் யதாஸங்க்யம் என்ற அணியின் மூலமாக உலகங்களுக்கெல்லாம் தாய் தந்தையர்களாக விளங் கும் பார்வதீ பரமேச்வரர்களுடைய ரூபம் வர்ணிக்கப்பட்டு உள்ளது. பார்வதீ தேவி லோகமாதா. பரமேச்வரனுடைய தர்மபத்னீ. அவளே தன்னுடைய குழந்தைகளாகிய ஸகல ஜீவராசிகளுக்கும் சுகத்தையளிப்பவள். பாபங்களனைத் தையும் களைகின்றவள். அழகிய அங்கங்கள் வாய்ந்தவள். நாம் அனைவரும் சுகம்பெற அந்தப் பராசக்தியை வழிபடு கின்றோம்.

அதேபோல் பரமேச்வரனும் மிகுந்த சக்தியுள்ளவன் ஸ்வயம்பூ. அவனே உலகைப்படைத்தவன். ஆதலால் அவனே உலகின் தந்தை. ஸகல ஜீவர்களுக்கும் அவனே சுகத்தைத் தருகின்றான். தக்ஷனுடைய யாகத்தை நாசம் செய்து அவனுடைய கர்வத்தைப் போக்கியவன். அழகிய அங்கங்களையுடையவன். மூன்று கண்களை உடையவன் நாமனைவரும் நலம்பெற அவனை வழிபடுகின்றோம். (18)

(அ) பிரபுவான நீர் ஊழியனுன என்னை மன்னித்து காக்கவேண்டுமெனக் கூறுகிருர்:—

**भवद्गौरवं मल्लघुत्वं विदित्वा प्रभो रक्ष कारुण्यदृष्ट्यानुगं माम् ।**
**शिवात्मानुभावस्तुतावक्षमोऽहं स्वशक्त्या कृतं मेऽपराधं क्षमस्व ॥**

பவத்கௌரவம் மல்லகுத்வம் விதித்வா
ப்ரபோ ரக்ஷ காருண்யத்ருஷ்ட்யாநுகம் மாம் ।
சிவாத்மாநுபாவஸ்துதாவக்ஷமோऽஹம்
ஸ்வசக்த்யா க்ருதம் மேऽபராதம் க்ஷமஸ்வ ॥

**हे प्रभो**-ஏ ப்ரபுவே! **भवद्गौरवं**-உம்முடைய பெருமையையும் **मल्लघुत्वं**-என்னுடைய சிறுமையையும் **विदित्वा**-அறிந்து கொண்டு **कारुण्यदृष्ट्या**-உம்முடைய கருணைகடாக்ஷத்தால் **अनुगं** – உம்மைப்பின்பற்றும் ஊழியனுன **माम्** – என்னை **रक्ष** – காப்பாற்றும். **अहं** - நான் **शिवात्मानुभावस्तुतौ**-சிவஸ்வரூபத்தின் பெருமையை துதிப்பதில் **अक्षमः**–சக்தியற்றவன். **स्वशक्त्या**-உம்முடைய சக்தியால் **मे कृतं**-என்னுல் செய்யப்பட்ட **अपराधं**-குற்றத்தை **क्षमस्व**–பொறுத்துக் கொள்வீராக.

பரமேச்வரன் ஸர்வ சக்தியுள்ளவன். அளவற்ற பெருமை பெற்றவன். எல்லாவற்றிற்கும் யஜமானன். நானோ மிகச்சிறியவன். அல்ப புத்தியுள்ளவன். ஊழியன் ஆதலால் அவனுடைய ஸ்வரூபத்தை எனக்குள் பாவித்துத் துதிக்கும் ஆற்றல் எனக்குக் கிடையாது. இவ்வாறு இருப்பினும் சிறியவனுகிய நான் செய்த பிழையெல்லாம் ஸர்வ சக்தி வாய்ந்த பரமேச்வரன் பொறுத்துக்கொண்டு ஊழியனுன என்னிடம் தன்னுடைய கருணைகடாக்ஷத்தைச் செலுத்திக் காத்தருளல் வேண்டுமென்று பிரார்த்தனை செய்கின்ருர். இம்மாதிரி செருக்கை உதறித்தள்ளி நாம் பகவானிடம் வேண்டிக்கொண்டால் கட்டாயம் அவர் நம்மைக் காப்பாற்றுவார்.

(அ) இது முதல் பல சுலோகங்களால் அந்த்ய காலத்தில் வரும் யமபயத்தைப் போக்க வேண்டுகிறார்:—

**यदा कर्णरन्ध्रं व्रजेत्कालवाहद्विषत्कण्ठघण्टाघणात्कारनादः ।**
**वृषाधीशमारुह्य देवौपवाह्यं तदा वत्स मा भीरिति प्रीणय त्वम् ॥**

யதா கர்ணரந்த்ரம் வ்ரஜேத் காலவாஹ-
த்விஷத்கண்டகண்டாகணாத்கார நாதः ।
வ்ருஷாதீசமாருஹ்ய தேவௌபவாஹ்யம்
ததா வத்ஸ மாபீரிதி ப்ரீணய த்வம் ॥

**हे देव**-ஏ தேவனே! **यदा**-எப்பொழுது **काल**-யமனுடைய **वाहद्विषत्**-(வாஹனமான) எருமையின் **कण्ठ**-கழுத்திலுள்ள **घण्टा** - மணிகளுடைய **घणात्कारनादः** – கண கண என்ற ஒலி **कर्णरन्ध्रं** – என் காதுகளின் துவாரத்தை **व्रजेत्**-அடையுமோ **तदा** - அப்பொழுது **औपवाह्यम्** – உம்முடைய வாஹனமான **वृषाधीशं**–சிறந்த காளையின் மீது **आरुह्य**–ஏறிக் கொண்டு **वत्स** -குழந்தாய்! **मा भीः**-பயப்படாதே **इति**-என்று **त्वं**-நீர் **प्रीणय**-சந்தோஷப்படுத்துவீராக.

மரணகாலம் கிட்டும் சமயத்தில் யமன் தன்னுடைய வாஹனமான எருமையின்மீது ஏறிக்கொண்டு என்னை அணுகுவான். அப்பொழுது அந்த எருமையினுடைய கழுத்தில் கட்டப்பட்டிருக்கும் மணிகள் பயங்கரமான ஒலிகளை எழுப்பும். அவைகள் என்னுடைய செவிகளுக்குள் புகுந்து எனக்கு மிகுந்த அச்சத்தை அளிக்கும். அப்பொழுது தாங்கள் தங்களுடைய வாஹனமான விருஷபத்தின் மீது ஏறிக்கொண்டு என்னருகில் வந்து எனக்கு அபயங்கொடுத்து என்னைக் காத்தருளல் வேண்டும். (20)

**यदा दारुणाभाषणा भीषणा मे भविष्यन्त्युपान्ते कृतान्तस्य दूताः ।**
**तदा मन्मनस्त्वत्पदाम्भोरुहस्थं कथं निश्चलं स्यान्नमस्तेऽस्तु शंभो ॥**

யதா தாருணாபாஷணா பீஷணா மே
　　பவிஷ்யந்த்யுபாந்தே க்ருதாந்தஸ்ய தூதா: ।
ததா மந்மநஸ்த்வத்பதாம்போருஹஸ்தம்
　　கதம் நிஶ்சலம் ஸ்யாத் நமஸ்தேऽஸ்து ஶம்போ ॥

**शम्भो**-ஏ பரமேச்வரா! **यदा**-எப்பொழுது **दारुणाभाषणाः** மிகவும் கடுமையான பேச்சுக்களை உடையவர்களாயும் **भीषणाः**-பயங்கரமானவர்களுமான **कृतान्तस्य**-யமனுடைய **दूताः**-ஒற்றர்கள் **मे**-என்னுடைய **उपान्ते**-அருகில் **भविष्यन्ति**-இருப்பார்களோ **तदा**-அப்பொழுது **मन्मनः**-என்னுடைய மனம் **त्वत्पदाम्भोरुहस्थं**-உம்முடைய பாதகமலத்தையடைந்து **कथं**-எவ்வாறு **निश्चलं**-அசைவற்றதாக **स्यात्**-இருக்கும்? **ते**-உமக்கு **नमः**-வணக்கம் **अस्तु**-இருக்கட்டும்.

நம்முடைய அந்திய காலத்தில் காலனுடைய பயங்கரமான தூதர்கள் நம்மை அணுகுவார்கள். அவர்கள் வெட்டு குத்து கொல்லு என்று பயங்கரமாக ஒருவருக்கொருவர் பேசிக்கொள்வார்கள். அதைக்கேட்டு மனம் மிகவும் நடுங்கிக்கொண்டிருக்கும். அப்பொழுது பரமேச்வரனுடைய பாதகமலங்களில் மனதை நிலைநாட்டுவது இயலாதகார்யம். ஆகையால் இப்பொழுதே பகவானுடைய பாதகமலங்களில் வணங்கி மனதை ஈடுபடச் செய்யவேண்டும். இவ்வாறு செய்வதால் யமனுடைய தூதர்கள் நம் முன் வரும்பொழுது நமது மனம் பகவானிடம் லயித்துவிடும். அந்த சமயத்தில் நமக்கு அவர்களால் யாதொரு துன்பமும் ஏற்படாது. (21)

**यदा दुर्निवारव्यथोऽहं शयानो लुठन्निःश्वसन्निःसृताव्यक्तवाणिः ।**
**तदा जह्नुकन्याजलालंकृतं ते जटामण्डलं मन्मनोमन्दिरं स्यात् ॥**

யதா துர்நிவாரவ்யதோऽஹம் சயாநோ
　　லுடந்நி:ச்வஸந்நி:ஸ்ருதாவ்யக்தவாணி: ।
ததா ஜஹ்நுகந்யா ஜலாலங்க்ருதம் தே
　　ஜடாமண்டலம் மந்மநோமந்திரம் ஸ்யாத் ॥

(அ) இது முதல் பல சுலோகங்களால் அந்த்ய காலத்தில் வரும் யமபயத்தைப் போக்க வேண்டுகிறார்:—

**यदा कर्णरन्ध्रं व्रजेत्कालवाहद्विषत्कण्ठघण्टाघणात्कारनादः ।**
**वृषाधीशमारुह्य देवौपवाह्यं तदा वत्स मा भीरिति प्रीणय त्वम् ॥**

யதா கர்ணரந்த்ரம் வ்ரஜேத் காலவாஹ-
த்விஷத்கண்டகண்டாகணாத்கார நாதः ।
வ்ருஷாதீசமாருஹ்ய தேவௌபவாஹ்யம்
ததா வத்ஸ மாபீரிதி ப்ரீணய த்வம் ॥

**हे देव**-ஏ தேவனே! **यदा**-எப்பொழுது **काल**-யமனுடைய **वाहद्विषत्**-(வாஹனமான) எருமையின் **कण्ठ**-கழுத்திலுள்ள **घण्टा** – மணிகளுடைய **घणात्कारनादः** – கணகண என்ற ஒலி **कर्णरन्ध्रं** – என் காதுகளின் துவாரத்தை **व्रजेत्**-அடையுமோ **तदा** - அப்பொழுது **औपवाह्यम्** – உம்முடைய வாஹனமான **वृषाधीशं**-சிறந்த காளையின் மீது **आरुह्य**-ஏறிக் கொண்டு **वत्स** -குழந்தாய்! **मा भीः**-பயப்படாதே **इति**-என்று **त्वं**-நீர் **प्रीणय**-சந்தோஷப்படுத்துவீராக.

மரணகாலம் கிட்டும் சமயத்தில் யமன் தன்னுடைய வாஹனமான எருமையின்மீது ஏறிக்கொண்டு என்னை அணுகுவான். அப்பொழுது அந்த எருமையினுடைய கழுத்தில் கட்டப்பட்டிருக்கும் மணிகள் பயங்கரமான ஒலிகளை எழுப்பும். அவைகள் என்னுடைய செவிகளுக்குள் புகுந்து எனக்கு மிகுந்த அச்சத்தை அளிக்கும். அப்பொழுது தாங்கள் தங்களுடைய வாஹனமான விருஷபத்தின் மீது ஏறிக்கொண்டு என்னருகில் வந்து எனக்கு அபயங்கொடுத்து என்னைக் காத்தருளல் வேண்டும். (20)

**यदा दारुणाभाषणा भीषणा मे भविष्यन्त्युपान्ते कृतान्तस्य दूताः ।**
**तदा मन्मनस्त्वत्पदाम्भोरुहस्थं कथं निश्चलं स्यान्नमस्तेऽस्तु शंभो ॥**

யதா தாருணபாஷணா பீஷணா மே
பவிஷ்யந்த்யுபாந்தே க்ருதாந்தஸ்ய தூதா: ।
ததா மந்மநஸ்த்வத்பதாம்போருஹஸ்தம்
கதம் நிஸ்சலம் ஸ்யாத் நமஸ்தேऽஸ்து ஶம்போ ॥

**शम्भो**-ஏ பரமேச்வரா! **यदा**-எப்பொழுது **दारुणाभाषणाः** மிகவும் கடுமையான பேச்சுக்களை உடையவர்களாயும் **भीषणाः**- பயங்கரமானவர்களுமான **कृतान्तस्य**-யமனுடைய **दूताः**-ஒற்றர்கள் **मे**-என்னுடைய **उपान्ते**-அருகில் **भविष्यन्ति**-இருப்பார்களோ **तदा**-அப்பொழுது **मन्मनः**-என்னுடைய மனம் **त्वत्पदाम्भोरुहस्थं**-உம்முடைய பாதகமலத்தையடைந்து **कथं**-எவ்வாறு **निश्चलं**-அசைவற்றதாக **स्यात्**-இருக்கும்? **ते**-உமக்கு **नमः**-வணக்கம் **अस्तु**-இருக்கட்டும்.

நம்முடைய அந்திய காலத்தில் காலனுடைய பயங்கரமான தூதர்கள் நம்மை அணுகுவார்கள். அவர்கள் வெட்டு குத்து கொல்லு என்று பயங்கரமாக ஒருவருக்கொருவர் பேசிக்கொள்வார்கள். அதைக்கேட்டு மனம் மிகவும் நடுங்கிக்கொண்டிருக்கும். அப்பொழுது பரமேச்வரனுடைய பாதகமலங்களில் மனதை நிலைநாட்டுவது இயலாதகார்யம். ஆகையால் இப்பொழுதே பகவானுடைய பாதகமலங்களில் வணங்கி மனதை ஈடுபடச் செய்யவேண்டும். இவ்வாறு செய்வதால் யமனுடைய தூதர்கள் நம் முன் வரும்பொழுது நமது மனம் பகவானிடம் லயித்துவிடும். அந்த சமயத்தில் நமக்கு அவர்களால் யாதொரு துன்பமும் ஏற்படாது. (21)

**यदा दुर्निवारव्यथोऽहं शयानो लुठन्निःश्वसन्निःसृताव्यक्तवाणिः ।**
**तदा जह्नुकन्याजलालंकृतं ते जटामण्डलं मन्मनोमन्दिरं स्यात् ॥**

யதா துர்நிவாரவ்யதோऽஹம் சயாநோ
லுடந்நி:ச்வஸந்நி:ஸ்ருதாவ்யக்தவாணி: ।
ததா ஜஹ்நுகந்யா ஜலாலங்க்ருதம் தே
ஜடாமண்டலம் மந்மநோமந்திரம் ஸ்யாத் ॥

**यदा**-எப்பொழுது (அந்த்யகாலத்தில்) **अहं**-நான் **दुर्निवारव्यथः**-போக்கமுடியாத வேதனையுடையவனாக **शयानः**-படுத்துக்கொண்டும் **लुठन्**-பூமியில் புரண்டுகொண்டும் **निःश्वसन्**-பெருமூச்சு விட்டுக்கொண்டும் **निस्सृताव्यक्तवाणिः**-பிறர் புரியாதபடி உளறிக்கொண்டும் பிதற்றிக்கொண்டுமிருப்பேனோ, **तदा**-அப்பொழுது **जह्नुकन्याजलालंकृतं**-ஜஹ்னு மஹர்ஷியின் பெண்ணான கங்காதேவியினுடைய தீர்த்தத்தால் அலங்கரிக்கப்பட்ட **ते**-உன்னுடைய **जटामण्डलं**-ஜடாமண்டலமானது **मन्मनोमन्दिरं स्यात्**-என் மனதிற்கு இருப்பிடமாக இருக்கட்டும்.

காலன் நம்மை நெருங்கும்பொழுது நாம் பலவிதமான துன்பங்களுக்குள்ளாகிறோம். நமக்கு உண்டாகும் வேதனைகளைத் தாங்கமுடியாமல் நாம் பூமியில் படுத்துப்புரளுகின்றோம். நம்முடைய சுய அறிவை இழந்துவிடுவதால் பலவிதமாகப் பிதற்றுகின்றோம். அச்சமயம் நமது மனது பகவானுடைய திருச்சடை முடியில் லயிக்கவேண்டுமென்று இப்பொழுதே வேண்டிக்கொள்ளல் வேண்டும். இவ்வாறு நாம் பிரார்த்தித்தால் நாம் துன்பமுறும்பொழுது பகவான் திருச்சடையுடன் நம்மிடம் தோன்றுவார். அவரது சடையில் வீற்றிருக்கும் கங்காதேவியினுடைய குளிர்ந்த நீர் நம்மேல் பட்டு நமது துயரனைத்தையும் நீக்கும். ஆகையால் நம் புலன்களனைத்தும் நன்றாக இயங்கும்பொழுதே நாம் பரமேச்வரனை வழிபட்டு அவரது அருளைப்பெற வேண்டும். (22)

**यदा पुत्रमित्रादयो मत्सकाशे रुदन्त्यस्य हा कीदृशीयं दशेति ।**
**तदा देवदेवेश गौरीश शंभो नमस्ते शिवायेत्यजस्रं ब्रवाणि ॥**

யதா புத்ர மித்ராதயோ மத்ஸகாஶே
ருதந்த்யஸ்ய ஹா கீத்ருஶீயம் தஶேதி ।
ததா தேவதேவேஶ கௌரீஶ ஶம்போ
நமஸ்தே ஶிவாயேத்யஜஸ்ரம் ப்ரவாணி ॥

**यदा**-எப்பொழுது **पुत्रमित्रादयः**-பிள்ளைகள், நண்பர்கள் முதலானவர்கள் **मत्सकाशे**-என் அருகில் (அமர்ந்து) **हा**-ஐயோ! '**अस्य**-இவனுக்கு, **कीदृशी**-எப்பேற்பட்ட **इयं**-இந்த **दशा**-அவஸ்தை (வந்திருக்கிறது) **इति**- என்று (சொல்லி) **रुदन्ति**-அழுகிருர்களோ **तदा**-அப்பொழுது **देवदेवेश**-தேவாதி தேவனே, **गौरीश**-பார்வதியின் பதியான **शम्भो**-சிவ பெருமானே! **शिवाय**-சிவபெருமானாகிய **ते**-உமக்கு **नमः**-வணக்கம் **इति**-என்று **अजस्रं**-அடிக்கடி **ब्रवाणि**-சொல்வேனுக.

மரணகாலத்தில் நாம் சுயபுத்தியை இழந்துவிடுவோம். அப்பொழுது நாம் படும் அவஸ்தையைப்பார்த்து நம் புத்திரர், நண்பர் முதலானோர் நம்மருகில் அமர்ந்து கொண்டு 'ஐயோ ரொம்பவும் அவஸ்தைப்படுகிருரே பார்க்க ஸஹிக்கவில்லையே' என்று பலவாறு புலம்பி அழுவார்கள். இந்நிலையிலும்கூட நம்முடைய வாயி லிருந்து நம: ஶிவாய என்ற பஞ்சாக்ஷர மந்திரம் வெளி வரவேண்டும். அந்த மந்திரம் எப்பொழுதும் உச்சரிக்கப் படுமாகில் நிச்சயமாக யமபாதை நமக்கு ஏற்படாது. மேலும் சிவபெருமானுடைய அருளால் நாம் பரம பதத்தை பெறலாம். (23)

**यदा पश्यतां मामसौ वेत्ति नास्मानयं श्वास एवेति वाचो भवेयुः ।**
**तदा भूतिभूषं भुजङ्गावनद्धं पुरारे भवन्तं स्फुटं भावयेयम् ॥ २४ ॥**

யதா பஶ்யதாம் மாமஸௌ வேத்தி நாஸ்மா-
நயம் ஶ்வாஸ ஏவேதி வாசோ பவேயு: ।
ததா பூதிபூஷம் புஜங்காவநத்தம்
புராரே பவந்தம் ஸ்புடம் பாவயேயம் ॥

**यदा**-எப்பொழுது **मां**-என்னை **पश्यतां**-பார்க்கின்றவர் களுக்கு **असौ**-இவன் **अस्मान्**-நம்மை **न वेत्ति**-அறிந்துகொள் கின்ருன் இல்லை **अयं**- இது **श्वास एव**-கடைசி மூச்சுத்தான் **इति**-என்ற **वाचो भवेयुः**-வார்த்தைகள் உண்டாகுமோ **तदा**-அப்பொழுது **भूतिभूषं**-விபூதியால் அலங்கரிக்கப்பட்டதும்

**भुजङ्गावनद्धं**-பாம்புகள் சுற்றிக்கொண்டிருக்கின்றதுமான **भवन्तं**-உம் மூர்த்தியை **हे पुरारे**-புரன் என்ற அரக்கனை அழித்த சிவபெருமானே **स्फुटं**-தெளிவாக **भावयेयम्**-என் மனக்கண் முன் நிறுத்திக்கொள்வேனாகவும்.

மரணகாலத்தில் நம்மைப் பார்ப்பதற்காக அநேகர் வருவார்கள். அச்சமயத்தில் நாம் சுய அறிவை இழந்து இருப்போம். நமது தேஹத்தில் கடைசிமூச்சு கிளம்பிக் கொண்டிருக்கிறதென்று அந்தக்கணத்தில் நம்மைச் சேர்ந்த அனைவரும் நம்மைக்கைவிட்டு விடுவார்கள். ஆனால் விபூதியை அணிந்திருப்பவரும் பாம்புகளால் அலங்கரிக்கப் பட்ட தேஹத்தையுடையவருமான சிவபெருமான் ஒருவனே நம் கண்முன் தோன்றி நமக்கு அபயமளிப்பார். ஆதலால் அந்தியகாலத்தில் நம் மனம் அவரிடம் ஈடுபட நாம் இப்பொழுதே அவரை பிரார்த்திக்கவேண்டும். இவ்வாறு செய்தலால் நமக்கு நன்மை உண்டாகும். (24)

**यदा यातनादेहसंदेहवाही भवेदात्मदेहे न मोहो महान्मे ।**
**तदा काशशीतांशुसङ्काशमीश स्मरारे वपुस्ते नमस्ते स्मराणि ॥ २५ ॥**

யதா யாதநாதேஹஸந்தேஹவாஹீ
பவேதாத்மதேஹே ந மோஹோ மஹாந்மே ।
ததா காசசீதாம்சுஸங்காசமீச
ஸ்மராரே வபுஸ்தே நமஸ்தே ஸ்மராணி ॥

**यदा**-எந்த சமயத்தில் **मे**-எனக்கு **आत्मदेहे**-என்னுடைய சரீரத்தில் **यातनादेह**-நரக வேதனையை அனுபவிக்கும் சரீரத்தின் **सन्देहवाही**-ஸந்தேஹம் வரும்படி **महान्**-பெரிய **मोहः**-மயக்கம் **न भवेत्**-ஏற்படாதோ **तदा**-அப்பொழுதே **ईश**-ஏ பரமேச்வரா **स्मरारे**-மன்மதனை நாசம் செய்தவனே! **काश**-நாணல் பூ **शीतांशु**-குளிர்ந்த கதிர்களையுடைய சந்திரன் இவர்களுக்கு **संकाशं**-ஒப்பான **ते**-உன்னுடைய **वपुः**-சரீரத்தை **स्मराणि**-தியானம் செய்வேனாக. **ते**-உமக்கு **नमः**-வணக்கம்.

மரணசமயம் நெருங்கும்பொழுது மிகுந்த பயமுண்டாகிறது. நாம் செய்த பாவங்களை அனுபவிப்பதற்கான யாதநா (சூக்ஷ்ம) சரீரம் வந்துவிட்டதோ என்ற ஐயம் ஏற்பட்டுவிடுகிறது. மோஹமும் நம்மைக் குடிகொள்கிறது இந்நிலையை நான் அடைவதற்கு முன்பாகவே தாபத்தைப் போக்கும் வெளுப்பு நிறமுள்ள உம் மூர்த்தியை என் மனம் நினைக்கும்படி அருளவேண்டும். பகவானுடைய மூர்த்தி தூய வெளுப்பு நிறமானது. ஸத்வகுணம் பொருந்தியது. அதை ஸ்மரிப்பதால் நமக்கும் மோஹத்திற்குக் காரணமான தமோகுணம் நீங்கி ஸத்வகுணம் ஏற்பட்டு விடும். சந்திரனைப்போன்றது என்பதால் எல்லாத்தாபங்களையும் நீக்கும் என்பதைக் காட்டுகிறார். சிவமூர்த்தியை ஸ்மரிப்பவனுக்கு யாதநாசரீரமோ, நரகமோ ஒன்றும் வராது. சிவலோகத்தை அடைவான். (25)

**यदापारमच्छायमस्थानमद्भिर्जनैर्वा विहीनं गमिष्यामि मार्गम् ।**
**तदा तं निरुन्धन्कृतान्तस्य मार्गं महादेव मह्यं मनोज्ञं प्रयच्छ ॥**

யதாபாரமச்சாயமஸ்தானமத்பிர்-
ஜனைர்வா விஹீனம் கமிஷ்யாமி மார்க்கம் ।
ததா தம் நிருந்தந் க்ருதாந்தஸ்ய மார்க்கம்
மஹாதேவ மஹ்யம் மனோஜ்ஞம் ப்ரயச்ச ॥

**यदा**-எப்பொழுது **अपारं**-முடிவில்லாததும் **अच्छायं**-நிழலற்றதும் **अस्थानं**-தங்குவதற்கு இடமில்லாததும் **अद्भिः**-ஜலங்களாலோ அல்லது **जनैर्वा**-ஜனங்களாலோ **विहीनं**-இல்லாததுமான **मार्गं**-வழியில் **गमिष्यामि**-செல்வேனோ **तदा**-அப்பொழுது **महादेव**-மஹாதேவனே **तं**-அந்த **कृतान्तस्य**-யமனுடைய **मार्गं**-வழியை **निरुन्धन्**-மறித்துக்கொண்டு **मह्यं**-எனக்கு **मनोज्ञं**-அழகிய **मार्गं**-வழியை **प्रयच्छ**-கொடுப்பீராக.

யமன் நம்மை அழைத்துக்கொண்டு போகும் வழி மிகவும் பயங்கரமானது. அதற்கு எல்லையே கிடையாது.

அங்கு நிழல் கிடையாது. தங்குவதற்கு இடமும் கிடையாது. அங்கு துணைக்கு ஒரு மனிதன்கூட இருக்கமாட்டான். தாகத்தைத் தீர்த்துக்கொள்ள தண்ணீரும் கிடைக்காது. இவ்வாறான நிலையில் நாம் பரமேச்வரனைத் தியானம் செய்தால் பரமகருணாமூர்த்தியான அவர் நம்மை அப்பயங்கரமான பாதையிலிருந்து மீட்பித்து மனோஹரமான மோக்ஷ மார்க்கத்திற்கு அழைத்துச்செல்வார். ஆதலால் நாம் அனைவரும் அப்பரம்பொருளையே தியானம் செய்ய வேண்டும். (26)

**यदा रौरवादि स्मरन्नेव भीत्या व्रजाम्यत्र मोहं महादेव घोरम् ।**
**तदा मामहो नाथ कस्तारयिष्यत्यनाथं पराधीनमर्धेन्दुमौले ॥**

யதா ரௌரவாதி ஸ்மரந்நேவ பீத்யா
வ்ரஜாம்யத்ர மோஹம் மஹாதேவ கோரம் ।
ததா மாமஹோ நாத கஸ்தாரயிஷ்ய-
த்யநாதம் பராதீநமர்த்தேந்து மௌளே ॥

**अर्धेन्दुमौले**–பிறைச்சந்திரனைத் தலையில் அணிந்திருக்கும் **महादेव**-சிவபெருமானே! **यदा**–எப்பொழுது **रौरवादि**-ரௌரவம் முதலிய பயங்கரமான நரகங்களை **स्मरन्नेव**–நினைத்த மாத்திரத்திலேயே **भीत्या**–பயத்தால் **अत्र**–இங்கு **घोरं**–பயங்கரமான **मोहं**–மயக்கத்தை **व्रजामि**–அடைகிறேனோ **तदा**–அப்பொழுது **नाथ**–ஏ நாதனே! **अनाथं**–அநாதையான **पराधीनं**–பிறர் வசப்பட்ட **माम्**–என்னை **कः**–யார் **तारयिष्यति**–கடைத்தேறச் செய்வான்? **अहो**–அந்தோ!

யமபாதையை யாரால் அனுபவிக்கமுடியும்? அது மிகக் கொடியது. அதிலிருந்து நம்மைக் காப்பாற்ற ஒருவராலும் முடியாது. அதை நினைத்தமாத்திரத்திலேயே நாம் மோஹமடைந்து விடுவோம். இந்த யமபயத்திலிருந்து அநாதைகளான நம்மைக்காக்க ஸர்வேச்வரன் ஒருவன்தான் சக்தியுள்ளவன். ஆகையால் ரௌரவம் முதலிய மிகக்கோரமான நரகங்களில் வீழ்ந்து அவதிப்படாமலிருப்பதற்காக நாம்

அனைவரும் இப்பொழுதே தீனதயாளுவான பரமேச்வரனைத் தியானம் செய்யவேண்டும். (27)

**यदाश्वेतपत्रायतालङ्घ्यशक्तेः कृतान्ताद्भयं भक्तवात्सल्यभावात् ।**
**तदा पाहि मां पार्वतीवल्लभान्यं न पश्यामि पातारमेतादृशं मे ॥**

யதாஶ்வேதபத்ராயதாலங்க்யஶக்தே:
க்ருதாந்தாத் பயம் பக்தவாத்ஸல்ய பாவாத் ।
ததா பாஹி மாம் பார்வதீவல்லபாந்யம்
ந பஶ்யாமி பாதாரமேதாத்ருஶம் மே ॥

**यदा**—எப்பொழுது **अश्वेतपत्रायतालङ्घ्यशक्तेः**—கருப்பான எருமையை வாஹனமாகக் கொண்டவனும், தொடர்ந்து வருகின்ற மீற முடியாத சக்தியுள்ளவனுமான **कृतान्तात्**-யமனிடத்திலிருந்து **भयं**-பயம் உண்டாகின்றதோ **तदा** — அப்பொழுது **पार्वतीवल्लभ**-ஹே பார்வதீபதியே **भक्तवात्सल्य-भावात्** — பக்தன்பாலுள்ள பரிவினால் **मां**-என்னை **पाहि** — காப்பாற்று. **एतादृशं**-இப்படிப்பட்ட **मे पातारं**-என்னைக் காப்பவர் **अन्यं**-வேறு ஒருவரையும் **न पश्यामि**-நான் பார்க்கவில்லை.

யமனுடைய சக்தி அளவற்றது. அதை மீற யாராலும் முடியாது. அவனிடமிருந்து பயம் உண்டாகும் பொழுது பார்வதீபதியான பரமேச்வரன் ஒருவனே நம்மைக்காக்க வல்லவன். அவனுடைய கருணையால்தான் நாம் கரையேற முடியும். ஆகையால் நாம் அனைவரும் அவனிடம் பக்தி செலுத்தி அவனுடைய அன்பிற்குப் பாத்திரமாகவேண்டும். அவ்வாறு நாம் பக்தி செலுத்தினால் அம்பிகாபதி நம்மிடம் பரிவு காட்டி நம்மைக் காப்பான். (28)

**इदानीमिदानीं मृतिर्मे भवित्रीत्यहो संततं चिन्तया पीडितोऽस्मि ।**
**कथं नाम मा भून्मृतौ भीतिरेषा नमस्ते गतीनां गते नीलकण्ठ ॥**

இதாநீமிதாநீம் ம்ருதிர் மே பவித்ரீ-
த்யஹோ ஸந்ததம் சிந்தயா பீடிதோऽஸ்மி ।
கதம் நாம மா பூன் ம்ருதௌ பீதிரேஷா
நமஸ்தே கதீநாம் கதே நீலகண்ட ॥

**नीलकण्ठ**-நீல நிறமுள்ள கழுத்தையுடையவனே! **गतीनां** -ரக்ஷகர்களையும் **गते**-காப்பாற்றுபவரே! **मे**-எனக்கு **मृतिः**-மரணம் **इदानीं**-இப்பொழுது **भवित्री**-ஏற்படும் **इदानीं**-இப்பொழுது **भवित्री**-ஏற்படும் **इति**-என்று **अहो**-அந்தோ **सन्ततं**-எப்பொழுதும் **चिन्तया**-கவலையால் **पीडितः**-துன்புறுத்தப்பட்டவனாக **अस्मि**-இருக்கிறேன் **कथं नाम**-எவ்வாறுதான் **मृतौ**-மரணத்தில் **एषा**-இந்த **भीतिः**-பயம் **माभूत्**-ஏற்படாமல் இருக்குமோ? **ते**-உனக்கு **नमः**-வணக்கம்.

தனக்கு எப்பொழுது மரணம் வரும் என்பதை யாரும் அறிந்துகொள்ள முடியவில்லை. அதனால் நமக்கு மரணபயம் ஒவ்வொரு விநாடியும் ஏற்பட்டுக்கொண்டேயிருக்கிறது. இந்த பயத்தால் நாம் ஒவ்வொரு கணமும் பீடிக்கப்படுகிறோம். ஆனால் திருநீலகண்டன் மரணத்தை விளைவிக்கும் விஷத்தையே பருகி மரணத்தை வென்றான். அதனால் அவனது கழுத்து நீல நிறமாகத் தோற்றமளிக்கின்றது. ஸாதாரணமாக தேவதைகள் மனிதர்களைக் காப்பாற்றுகிறார்கள். ஆனால் அந்த தேவர்களும் காலகூடவிஷத்தால் துன்புறும்பொழுது அவர்களைக் காப்பாற்றியவர் நீலகண்டர். அவ்வாறு விளங்கும் அவனுடைய ஸ்வரூபத்தை மனதில் இருத்தி நாம் அவனை வழிபட்டால் நமக்கு மரணபயம் ஏற்படாது என்பது இதனால் விளங்குகின்றது. (29)

**अमर्यादमेवाहमाबालवृद्धं हरन्तं कृतान्तं समीक्ष्यास्मि भीतः ।**
**मृतौ तावकाङ्घ्र्यब्जदिव्यप्रसादाद्भवानीपते निर्भयोऽहं भवानि ॥**

அமர்யாதமேவாஹமாபாலவ்ருத்தம்
ஹரந்தம் க்ருதாந்தம் ஸமீக்ஷ்யாஸ்மி பீத: ।

ம்ருதௌ தாவகாங்க்ரிப்ஜதிவ்யப்ரஸாதாத்
பவாநீபதே நிர்பயோஹம் பவாநி ||

**आबालवृद्धं**-குழந்தைகள் முதல் வயோதிகர்கள் வரையில் **अमर्यादमेव**-வரம்பு இல்லாமலேயே **हरन्तं**-அபஹரித்துச்செல்கின்ற **कृतान्तं**-யமனை **समीक्ष्य**-பார்த்து **अहं**-நான் **भीतः अस्मि**-பயந்தவனாக இருக்கிறேன். **भवानीपते** - பார்வதீதேவியின் பதியே! **तावकाङ्घ्रयब्जदिव्यप्रसादात्** — உன்னுடைய பாத பத்மத்தின் திவ்யமான அருளால் **अहं**-நான் **मृतौ**-சாவினிடத்தில் **निर्भयः**-பயம்தெளிந்தவனாக **भवानि**-இருப்பேனாக.

தினந்தோறும் கணக்கற்ற ஜீவராசிகள் யமலோகத்தை அடைகின்றன. **अहन्यहनि भूतानि प्रविशन्ति यमालयम्** என்று மஹாபாரதத்திலும் கூறப்பட்டிருக்கின்றது. யமன் குழந்தையென்ருவது கிழவர் என்ருவது கருதுவதேயில்லை. **यमस्य करुणा नास्ति** என்று சொல்லப்படுகிறது. அவன் சிறிதும் கருணைகாட்டாமல் அனைவரையும் எடுத்துச்செல்கிருன். இதைப்பார்த்து நாம் அனைவரும் அளவற்ற பயத்தையடைகிரோம். ஆனல் பார்வதீபதியான பரமேச்வரனுடைய திருவடிகளை நாம் பற்றிக்கொண்டால் அவைகளுடைய அருளால் இப்பயத்தினின்றும் நாம் விடுபடலாமென்று இந்த சுலோகத்திஞல் விளக்கப்படுகின்றது. (30)

(அ) பதினேறு சுலோகங்களால் யமபயத்தைப் போக்கும்படி வேண்டிவிட்டு இதில் பிறவித்துன்பமே விலக பிரார்த்திக்கிருர்:—

जराजन्मगर्भाधिवासादिदुःखान्यसह्यानि जह्यां जगन्नाथ देव ।
भवन्तं विना मे गतिर्नैव शंभो दयालो न जागर्ति किं वा दया ते ॥

ஜராஜந்மகர்ப்பாதிவாஸாதிதுக்கா-
ந்யஸஹ்யாநி ஜஹ்யாம் ஜகந்நாத தேவ ।
பவந்தம் விநா மே கதிர் நைவ ஶம்போ
தயாளோ ந ஜாகர்த்தி கிம் வா தயா தே ॥

**जगन्नाथ**-உலகனைத்தும் காப்பவனே! **देव**-திவ்ய மங்கள ரூபத்தையுடையவனே! **असह्यानि** - தாங்கமுடியாத **जरा**-மூப்பு **जन्म**-பிறப்பு **गर्भाधिवासादि**-கர்ப்பவாஸம் முதலிய **दुःखानि** - துன்பங்களை **जह्याम्**- விடுவேனாக. **शम्भो**-நன்மைகளைத் தருகின்றவரே! **भवन्तं विना**-உன்னைத்தவிர **मे**-எனக்கு **गतिः**-வேறு வழி ஒன்றும் **नैव**- இல்லவேஇல்லை **हे दयालो**-ஏ தயாஸ்வரூபியே **ते**-உமக்கு **दया**-தயவு **न जागर्ति किं वा**-வெளிப்படவில்லையா ?

பரமேச்வரன் தயாமூர்த்தி. அவருடைய அருளால் தான் பிறவி, மூப்பு, கர்ப்பத்தில் வசித்தல் முதலிய சகலமான பிணிகளிலிருந்தும் விடுபடலாம். அவ்வாறு எல்லாத் துன்பங்களையும் கடந்து நிரந்தர இன்பத்தை அடைய அவருடைய தயவுக்குப் பாத்திரமாகவேண்டும். ஆதலால் ஆதிசங்கர பகவத்பாதாசார்யர் இந்த சுலோகத்தில் அவரைப் பணிந்து என்னை ஆட்கொள்ள உம் தயவை வெளிக்காட்டக் கூடாதா என்று பரிவுடன் பகர்கின்றார். (31)

(அ) பஞ்சாக்ஷர மந்திரத்தின் மஹிமையைக் கூறுகிறார்:—

**शिवायेति शब्दो नमःपूर्व एष स्मरन्मुक्तिकृन्मृत्युहा तत्त्ववाची ।**
**महेशान मा गान्मनस्तो वचस्तः सदा मह्यमेतत्प्रदानं प्रयच्छ ॥**

ஶிவாயேதி ஶப்தோ நம:பூர்வ ஏஷ
ஸ்மரந்முக்திக்ருந் ம்ருத்யுஹா தத்வவாசீ ।
மஹேஶாந மா காந் மநஸ்தோ வசஸ்த:
ஸதா மஹ்யமேதத்ப்ரதானம் ப்ரயச்ச ॥

**हे महेशान**-ஏ மஹேச்வரனே **स्मरन्मुक्तिकृत्**-ஸ்மரிக்கின்றவர்களுக்கு முக்தியை அளிக்கின்றதும் **मृत्युहा**-மரணத்தைப்போக்குகின்றதும் **तत्त्ववाची**-தத்துவத்தை விளக்குகின்றதுமான **एषः**-இந்த **नमःपूर्वः**-நம: என்பதை முதலாகக் கொண்ட **शिवाय इति शब्दः**-சிவாய என்ற சொல்

**सदा**-எப்பொழுதும் **मनस्तः**-என்னுடைய மனதிலிருந்தும் **वचस्तः**-வாக்கிலிருந்தும் **मा गात्** - போகக்கூடாது **मह्यं**-எனக்கு **एतत्**-இந்த **प्रदानं**-பெரியதானத்தை **प्रयच्छ**-கொடு.

[1]'நம: ஶிவாய' என்ற பஞ்சாக்ஷர மஹா மந்திரம் எல்லாமந்திரங்களிலும் மிகச் சிறந்தது. மந்திர ராஜம் என்று பிரஸித்தி பெற்றது. தத்வத்தை விளக்கக் கூடிய மந்திரம் இது '**शान्तं शिवमद्वैतं**' என்ற உபநிஷத் வாக்யத்தால் சிவபதம் ப்ரஹ்மத்தைக் குறிக்கிறது. **नमः** பதத்தால் தன்னையே சிவனிடம் அர்ப்பணம் செய்கிருன். அதாவது ஜீவஸ்வரூபம் சிவனிடம் (ப்ரஹ்மத்தில்) கலந்து ஒன்றுபட்டுவிடுகிறது. இவ்வாறு இம்மந்திரம் அத்வைத தத்வத்தைக் காட்டுகிறது. இதை ஸ்மரித்து இம் மந்திரத்தை ஜபிப்பவன் மிருத்யுபயம் விலகி முக்தியை அடைகிருன். வாக்கில் பஞ்சாக்ஷர மஹாமந்திரமும் மனதில் அதன் பொருளும் ஒரு கணமும் அகலாமல் எப்பொழுதும் நிலைத்து நிற்கும்படி அருளவேண்டும் என்று மஹேசுவரனிடம் வரம் கேட்கிருர். ஒவ்வொருவரும் எப்பொழுதும் பஞ்சாக்ஷர மந்திரத்தை வாக்கால் ஜபிக்க வேண்டும். மனதில் அதன் பொருளை தியானிக்கவேண்டும். இவ்வாறு நடப்பவனுக்கு மிருத்யுபயம் விலகும். (32)

(அ) அம்பிகையை பிரார்த்திக்கிருர் :—

**त्वमप्यम्ब मां पश्य शीतांशुमौलिप्रिये भेषजं त्वं भवव्याधिशान्तौ ।**
**बहुक्लेशभाजं पदाम्भोजपोते भवाब्धौ निमग्नं नयस्वाद्य पारम् ।। ३३ ।।**

த்வமப்யம்ப மாம் பஶ்ய ஶீதாம்ஶுமௌளி-
ப்ரியே பேஷஜம் த்வம் பவவ்யாதிஶாந்தௌ ।

1. இந்தப் பஞ்சாக்ஷர மந்திர ஸம்பந்தமாக (1) சிவபஞ்சாக்ஷர ஸ்தோத்திரம் (2) சிவபஞ்சாக்ஷர நக்ஷத்திரமாலா ஸ்தோத்திரம் (3) அர்த்தநாரீசுவர ஸ்தோத்திரம் என்று மூன்று ஸ்தோத்திரங்களை பகவத்பாதாள் இயற்றியிருக்கிருர்கள்.

பஹுக்லேசபாஜம் பதாம்போஜபோதே
பவாப்தௌ நிமக்நம் நயஸ்வாத்ய பாரம் ॥

**शीतांशुमौलिप्रिये**-குளிர்ந்த கதிர்களைக்கொண்ட சந்திர கலையைத் தலையில் அணிந்து விளங்கும் சிவபெருமானுக்கு உகந்தவளே! **अम्ब**-தாயே! **त्वमपि**-நீயும் **मां**-என்னை **पश्य**-கருணையுடன் பார்ப்பாயாக. **त्वं**-நீ **भवव्याधिशान्तौ**-பிறவி எனும் பிணியைத்தீர்ப்பதில் **भेषजम्**-மருந்து. **बहुक्लेशभाजं**-பலவித இன்னல்களை அடைந்தவனும் **भवाब्धौ**-பிறவி என்ற கடலில் **निमग्नं**-மூழ்கியவனுமான **मां**-என்னை **अद्य**-இப்பொழுதே **पदाम्भोजपोते**-உன்னுடைய பாதபத்மமாகிய படகில் (ஏற்றி) **पारं नयस्व**-கரைக்குக் கொண்டுபோய்ச் சேர்ப்பாயாக.

இதுவரை அநேகம் சுலோகங்களால் தன் துன்பம் விலக தந்தையான பரமேசுவரனைப் பலவாருகத்துதித்தார். தந்தையிட்ட கட்டளைப்படி நடவாத தனயனிடம் அவர் கோபம் கொள்வது இயல்பு. அப்பொழுது தாய்தான் அவனுக்குப் புகலிடம். எந்தத்தாயும் தன் தனயன் படும் துன்பத்தைக்கண்டு சும்மா இருக்கமாட்டாள். **कुपुत्रो जायेत क्वचिदपि कुमाता न भवति** ’ தான் ஆதரவுகாட்டுவதுடன் தகுந்த சமயம் பார்த்து கணவனிடம் சொல்லி அவர் கோபத்தைத் தணித்து பிரீதிகாட்டும்படி செய்வது தாயின் ஸ்வபாவம். இந்த நியாயத்தைக்கொண்டு ஈசுவரியை ‘**अम्ब**’ தாயே, நீயாவது நான் படும் துன்பங்களைக்கண்டு இரங்கக்கூடாதா என்று முறையிடுகிருர். “பிறவிப்பிணியால் நான் துன்புறுகிறேன். இந்தப்பிணிக்கு நீதான் மருந்து என்று ஆன்ருேர் கூறுகின்றனர். என் பிணியை நீக்கக்கூடாதா? மேலும் பிறவிக்கடலில் மூழ்கி பலவித க்லேசங்களை அனுபவிக்கிறேன். இந்தக் கடலில் மூழ்கியுள்ளவர்கள் அக்கரை சேர்வதற்கு உன் திருவடித்தாமரையே ஓடமாக அமைந்து உள்ளது. கருணையுடன் என்னையும் அந்த ஓடத்தில் ஏற்றிவைத்து அக்கரை சேர்க்கவேண்டும். மேலும் சந்திர

மௌளியான ஈசுவரன் உன்னிடம் அளவற்ற பிரியம் கொண்டவர். என்னிடம் கருணையால் அவருக்குக்கோபம் நீங்கும்படி செய்து என்னைக்காப்பாற்றவேண்டும் என்று கெஞ்சிக்கேட்கிறார். (33)

(அ) பரமசிவனுடைய பல திவ்ய லக்ஷணங்களைக் கூறி இவைகளில்லாத மற்றதேவர்களால் யாதொரு பயனுமில்லை யென்று மூன்று சுலோகங்களால் கூறுகிறார்:—

**अनुद्यल्ललाटाक्षिवह्निप्ररोहैरवामस्फुरच्चारुवामोरुशोभैः ।**
**अनङ्गभ्रमद्भोगिभूषाविशेषैरचन्द्रार्धचूडैरलं दैवतैर्नः ॥ ३४ ॥**

அநுத்யல்லலாடாக்ஷிவஹ்நிப்ரரோஹை-
ரவாமஸ்புரச்சாரு வாமோரு ஶோபை: ।
அநங்க்ப்ரமத்போகிபூஷாவிசேஷை-
ரசந்த்ரார்த்தசூடைரலம் தைவதைர்ந: ॥

**अनुद्यल्ललाटाक्षिवह्निप्ररोहैः**-எழுகின்ற தீக்கொழுந்துகளையுடைய நெற்றிக் கண்ணில்லாதவர்களும் **अवामस्फुरच्चारु-वामोरुशोभैः**-இடது பாகத்தில் அழகு வாய்ந்த தேவியின் சோபையுடன் விளங்காதவர்களும் **अनङ्गभ्रमद्भोगिभूषाविशेषैः**-அங்கங்களில் சுழல்கின்ற ஸர்ப்பாபரணங்களற்றவர்களும் **अचन्द्रार्धचूडैः**-அர்த்தசந்திரனைத் தலையில் அணிந்துகொள்ளாதவர்களுமான **दैवतैः**-தேவதைகளால் **नः**-நமக்கு **अलम्**-போதும்.

ஈசுவரன் நெற்றிக்கண்ணை உடையவர். அக்கண்ணிலிருந்து நெருப்பு ஜ்வாலைகள் கிளம்புவதால் அவர் நமது சத்ருக்கள் அனைத்தையும் அழிக்கவல்லவர். அவர் அர்த்த நாரீச்வரர். அவரது இடதுபாகத்தில் சிறந்த ரூபலாவண்யத்தையுடையவளும் லோகமாதாவுமான பரமேச்வரி அமர்ந்திருக்கிறாள். அதனால் அவர் நம்மைக் காக்க வல்லவர். அவருடைய சரீரம் பாம்புகளால் அலங்கரிக்கப் பட்டிருக்கின்றது. இதனால் அவர் ரமணீயமாயும் பயங்கர

மாயும் உள்ள தோற்றத்துடன் விளங்குகின்றார். மேலும் அவரது தலையில் அரைவட்ட வடிவமான சந்திரனுடைய கலை பிரகாசிக்கின்றது. இதனால் அவர் நமது தாபங்களைப் போக்கவல்லவர். இந்த லக்ஷணங்கள் பரமசிவன் ஒருவருக்கே அஸாதாரணமாக அமைந்துள்ளன. வேறு ஒருவருக்கும் இவை கிடையாது. மற்ற தேவதைகளால் எனக்கு யாதொரு பயனுமில்லை.

இந்த சுலோகத்திலும் பின்வரும் சுலோகங்களிலும் கூறியிருப்பதைக்கொண்டு பகவத்பாதர் மற்ற தேவதைகளை நிந்தித்திருப்பதாகத் தீர்மானிக்கக்கூடாது. அவர் ஷண்மத ஸ்தாபனாசார்யர். எல்லா தேவதைகளையும் ஸமமாகப் போற்றக்கூடியவர். சிவனைப்போலவே மற்ற தேவதைகள் பேரிலும் பல ஸ்தோத்திரங்கள் இயற்றியுள்ளார். அப்பேற்பட்ட அத்வைத ஸாக்ஷாத்காரம்பெற்ற ஆசார்யர் ஒரு தேவதையையும் குறைவாகக்கூறமாட்டார். இங்கு கூறியிருப்பதற்கு இவ்வாறு கருத்துக்கொள்ளவேண்டும்: இந்த ஸ்தோத்திரங்கள் எல்லாம் பக்தர்களுக்காகவே அருளப்பட்டவை. இயற்கையிலேயே சிவபக்தியுள்ளவருக்கு அது மாறுமல் நிலைத்து நிற்பதற்காக சிவனை மிகவும் புகழ்ந்து பேசவேண்டும். அப்பொழுது மற்றவரைக்குறைத்துப் பேசும்படி நேரிடும். **न हि निन्दा निन्दितुं प्रवृत्ता अपितु स्तुत्यं स्तोतुम्** என்ற நியாயப்படி, இந்த வாக்யங்களுக்கு சிவ ஸ்துதியில் தான் தாத்பர்யம். பிறநிந்தையில் தாத்பர்யம் இல்லை. 'இவர் மாதிரி படித்தவர் இவ்வுலகில் கிடையாது' என்ற வாக்யத்திற்கு இவர் ரொம்பப்படித்தவர் என்பதுதான் கருத்து. (34)

**अकण्ठेकलङ्कादनङ्गेभुजङ्गादपाणौकपालादफालेऽनलाक्षात् ।**
**अमौलौशशाङ्कादवामेकलत्रादहं देवमन्यं न मन्ये न मन्ये ॥ ३५ ॥**

அகண்டே கலங்காதநங்கேபுஜங்காத்
அபாணௌ கபாலாதபாலேதலாக்ஷாத் ।

அமௌளௌ ஶஶாங்காதவாமே களத்ராத்

அஹம் தேவமந்யம் ந மந்யே ந மந்யே ॥

**अकण्ठकलङ्कात्**–கழுத்தில் (நீலநிற) அடையாளமற்றதும் **अनङ्गेभुजङ्गात्**-அங்கங்களில் ஸர்ப்பங்களற்றதும் **अपाणौकपालात्**-கையில் மண்டையோடு அற்றதும் **अफालेनलाक्षात्**–நெற்றியில் நெருப்புக் கண்ணற்றதும் **अमौलौशशाङ्कात्**-தலையில் சந்திர கலையற்றதும் **अवामेकलत्रात्**–இடது பாகத்தில் பத்னியற்றதுமான **अन्यं**-மற்ற **देवं**-தைவத்தை **अहं**-நான் **न मन्ये**–நினைக்கவில்லை **न मन्ये**–நினைக்கவில்லை.

முன் சுலோகத்தின் கருத்தே இங்கு மேலும் விளக்கப் படுகின்றது. சிவபெருமான் நீலநிறமான கழுத்தை உடையவன். தேவர்களும் அசுரர்களும் பாற்கடலைக் கடைந்தபொழுது கிளம்பிய பயங்கரமான விஷத்தைப்பருகி உலகையே ரக்ஷித்த உத்தமன். ஸர்ப்பங்களைத்தனது அங்கங்களில் ஆபரணங்களாக அணிந்தவன். ஆதியில் ஐந்துமுகமுள்ள பிரஹ்மாவின் கர்வத்தை அடக்க ஒரு முகத்தைக் கிள்ளி எறிந்து அதன் கபாலத்தைக் கையில் வைத்திருப்பவன். அக்னியே நெற்றிக்கண்ணாக விளங்குகிறது. சந்திரனைத் தலையில் தரித்திருப்பவன். இடது பாகத்தில் பரமேச்வரியை வைத்திருப்பவன். இவனைத்தவிர மற்ற தெய்வங்களுக்கு இவ்வாறான குணங்கள் கிடையா. ஆகையால் மற்ற தெய்வங்களை யான் மனதால் நினைக்கமாட்டேன்.

**महादेव शंभो गिरीश त्रिशूलिंस्त्वयीदं समस्तं विभातीति यस्मात् ।**
**शिवादन्यथा दैवतं नाभिजाने शिवोऽहं शिवोऽहं शिवोहं शिवोहं ॥**

மஹாதேவ ஶம்போ கிரீஶ த்ரிஶூலின்

த்வயீதம் ஸமஸ்தம் விபாதீதி யஸ்மாத் ।

ஶிவாதன்யதா தைவதம் நாபிஜாநே

ஶிவோऽஹம் ஶிவோऽஹம் ஶிவோऽஹம்

ஶிவோஹம் ॥

**हे महादेव**–ஏ தேவாதிதேவனே! **शम्भो**-நன்மையை விளைவிப்பவனே **गिरीश**–கைலயங்கிரியின் நாதனே **त्रिशूलिन्**-த்ரிசூலத்தைத்தரிப்பவனே **यस्मात्**-யாதொரு காரணத்தினால் **इदं समस्तं**–இவ்வுலகம் முழுவதும் **त्वयि**–உன்னிடத்தில் **विभाति**–பிரகாசிக்கின்றதோ **इति**–என்று **शिवात्**-சிவனைத் தவிர **अन्यथा**–வேறு வகையில் **दैवतं**–தெய்வத்தை **न अभिजाने**-நான் அறிந்துகொள்ளவில்லை **अहं**–நான் **शिवः**–சிவன் **अहं**–நான் **शिवः**–சிவன் **अहं शिवः**-நான் சிவன் **अहं शिवः**–நான் சிவன்.

சிவபெருமானே தேவர்களுக்கெல்லாம் ஆதிதேவன். அவனே உலகுக்கெல்லாம் நன்மையைக்கொடுக்கின்றவன். கைலயங்கிரியின் நாதன். கையில் த்ரிசூலமேந்தியவன். அவனிடத்திலேயே இவ்வுலகனைத்தும் விளங்குகின்றது. ஆதலால் சிவபெருமானைத்தவிர வேறு தேவதையை நான் அறியவில்லை. இந்த சுலோகத்தில் சிவனை ப்ரஹ்மமாகக் கூறி மஹாவாக்யார்த்தத்தையும் கூறுகிறார். ப்ரஹ்மம் அதிஷ்டானம். பிரபஞ்சம் ஆரோபிதம். ப்ரஹ்மத்தில் தான் பிரபஞ்சம் தோன்றுகிறது. அதாவது ப்ரஹ்மமேதான் பிரபஞ்சமாகத்தோன்றுகிறது. ஆகையால் பிரபஞ்சம் தனியான பொருள் அல்ல. அதிஷ்டானமான கயிற்றில் தான் பாம்பு தோன்றுமே தவிற தனியாகத்தோன்றாது. ஆகையால் கயிற்றைக்காட்டிலும் பாம்பு வேறான உண்மைப் பொருள் அல்ல. இதுபோலவே அதிஷ்டானமான சிவ ஸ்வரூபம் ஒன்றுதான் உண்மை வஸ்து. இதை அறிந்தவனுக்கு வேறு ஒன்றும் தோன்றாது. நானும் அந்த அத்வைதமான சிவன்தான் என்று முடிக்கிறார். (36)

(அ) உபநிஷத்தில் கூறப்பட்ட ப்ரஹ்மலக்ஷணத்தைக் கூறுகிறார்:—

**यतोऽजायतेदं प्रपञ्चं विचित्रं स्थितिं याति यस्मिन् यदेवान्तमन्ते ।**
**स कर्मादिहीनः स्वयंज्योतिरात्मा शिवोहं शिवोहं शिवोहं शिवोहम् ॥**

யதோऽஜாயதேதம் ப்ரபஞ்சம் விசித்ரம்
ஸ்திதிம் யாதி யஸ்மிந் யதேவாந்தமந்தே ।
ஸ கர்மாதிஹீந: ஸ்வயம்ஜ்யோதிராத்மா
சிவோऽஹம் சிவோऽஹம் சிவோऽஹம்
சிவோऽஹம் ॥

**यतः**-எதனிடமிருந்து **इदं**-இந்த **विचित्रं**-ஆச்சர்யமான **प्रपञ्चं**-உலகம் **अजायत**-உண்டாயிற்றோ **यस्मिन्**-எதனிடத்தில் **स्थितिं**-நிலையை **याति**-அடைகிறதோ **अन्ते**-முடிவில் **यदेव**-எதிலேயே **अन्तं**-லயத்தை (அடைகிறதோ) **सः**-அதுவே **कर्मादिहीनः**-கர்மா முதலியவை அற்றதாயும் **स्वयंज्योतिः**-தானே பிரகாசிக்கின்றதுமான **आत्मा**-ஆத்மவஸ்து **अहं**-நானே **शिवः**-அந்த சிவன் **अहं**-நானே **शिवः**-சிவன் **अहं**-நானே **शिवः**-சிவன் **अहं**-நானே **शिवः**-சிவன்.

பிரபஞ்சம் அனைத்தையும் உண்டுபண்ணி நிலைத்திருக்கும்படி செய்து முடிவில் அழிப்பவன் பரமசிவன். அவனே ஈசுவரன் '**यतो वा इमानि भूतानि जायन्ते**' இதுமுதலான சுருதிகள் இக்கருத்தைக் கூறுகின்றன படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழில்களையும் செய்யும் ஈசுவரன் ஜகத் காரணப்பொருள். இதுவே அவனுடைய லக்ஷணம். இவ்வளவு பெரியகாரியங்களைச் செய்தபோதிலும் அவன் கர்மாதிஹீனன், ஒரு காரியமும் அவன் செய்யவில்லை என்று கூறுகிறார். '**तस्य कर्तारमपि मां विद्ध्यकर्तारमव्ययम्** என்று கீதையில் கண்ணன் தன்னை அகர்த்தாவாகக் கூறுகிறார். ஈசுவர ஸந்நிதி பலத்தால் மாயை எல்லாக்காரியங்களையும் செய்கிறது. அவர் ஸாக்ஷியாக இருக்கிறார். இதில் ஒரு ஸம்பந்தமும் கிடையாது. ஆகையால் இவர் கர்மாதிஹீனர். இவர் ஸ்வயம் பிரகாசவஸ்து. ஸத் ஆனந்தம் என்பதையும் சேர்த்துக்கொண்டால் ஸச்சிதானந்தம் இவருடைய ஸ்வரூபம். எல்லோருடைய ஆத்மாவும் இவரே. ஆகையால் அந்த சிவனே நான். (37)

(அ) மறுபடியும் சிவமூர்த்தியின் அஸாதாரண லக்ஷணங்களைக் குறிப்பிடுகிருர்:—

**किरीटे निशेशो ललाटे हुताशो भुजे भोगिराजो गले कालिमा च ।**
**तनौ कामिनी यस्य तत्तुल्यदेवं न जाने न जाने न जाने न जाने ॥**

கிரீடே நிஶேஶோ லலாடே ஹுதாஶோ
புஜே போகிராஜோ களே காலிமா ச ।
தநௌ காமிநீ யஸ்ய தத்துல்யதேவம்
ந ஜாநே ந ஜாநே ந ஜாநே ந ஜாநே ॥

**यस्य**-எவருடைய **किरीटे**-மகுடத்தில் **निशेशः**-சந்திரனே **ललाटे**-நெற்றியில் **हुताशः**-அக்னியோ **भुजे**-கையில் **भोगिराजः**-பாம்புகளின் அதிபதியோ **गले**-கழுத்தில் **कालिमा च**-கருப்பு நிறமோ **तनौ**-உடலில் **कामिनी**-பிரியமான பர்ர்வதீதேவியோ **तत्तुल्यदेवं**-அவருக்கு நிகரான தேவனை **न जाने**-நான் அறிகிறேன் இல்லை **न जाने**-நான் அறிகிறேனில்லை **न जाने**-நான் அறிகிறேனில்லை **न जाने**-நான் அறிகிறேனில்லை.

பரமேச்வரனுடைய கிரீடத்தில் சந்திரன் மணிபோல் ஒளி வீசிக்கொண்டிருக்கிருன். நெற்றியில் அக்நிபகவான் ஜ்வலித்துக்கொண்டிருக்கிருன். அவனுடைய புஜங்களை ஸர்ப்பராஜன் அலங்கரிக்கின்ருன். கழுத்தில் விஷம் அருந்தி உலகைக் காத்ததின் அடையாளமாக நீல நிறம் காணப் படுகிறது. ஜகன்மாதாவான பார்வதீதேவி அவனுடைய பாதி சரீரமாகத் தோற்றமளிக்கின்ருள். இவ்வாருன பரமேச்வரனே பரம்பொருள். இவனைத்தவிர வேறுதெய்வம் ஒன்றுமில்லை என்று இதனுல் விளக்கப்படுகின்றது. (38)

(அ) கடைசி இரு சுலோகங்களால் இந்த ஸ்தோத்திரத்தின் பலன் கூறப்படுகிறது:—

**अनेन स्तवेनादरादम्बिकेशं परां भक्तिमासाद्य यं ये नमन्ति ।**
**मृतौ निर्भयास्ते जनास्तं भजन्ते हृदम्भोजमध्ये सदासीनमीशम् ॥**

அநேந ஸ்தவேநாதராதம்பிகேஶம்
பராம் பக்திமாஸாத்ய யம் யே நமந்தி ।
ம்ருதௌ நிர்பயாஸ்தே ஜநாஸ்தம் ப்ஜந்தே
ஹ்ருதம்போஜமத்யே ஸதாஸீநமீஶம் ॥

**ये**-எவர்கள் **परां भक्तिं**-சிறந்த பக்தியை **आसाद्य**-அடைந்து **अनेन स्तवेन**-இந்தத் துதியால் **आदरात्**-ஆதரவுடன் **यं**-எந்த **अम्बिकेशं**-அம்பிகையின் பதியான பரமேச்வரனை **नमन्ति**-வணங்குகிறார்களோ **ते जनाः**-அந்த மனிதர்கள் **मृतौ**-சாவில் **निर्भयाः**-பயமற்றவர்களாய் **हृदम्भोजमध्ये**-இருதய கமலத்தின் நடுவில் (தஹராகாசத்தில்) **सदा**-எப்பொழுதும் **आसीनं**-வீற்றிருக்கும் **तं ईशं**-அப்பரமேச்வரனை **भजन्ते**-அடைகிறார்கள்.

மிகுந்த பக்தி உணர்ச்சியுடன் பொருள் தெரிந்து இந்த ஸ்துதியைப்படித்து அம்பிகையுடன் கூடிய மஹேசுவரனை வணங்குபவர்களுக்கு மரணபயம் விலகும். தன் ஹிருதய கமலத்தில் ஜோதிவடிவமாக விளங்கும் அப்பரமசிவனை நேரில் கண்டு சிவஸாயுஜ்யம் அடைவார்கள். (39)

**भुजंगप्रियाकल्प शंभो मयैवं भुजंगप्रयातेन वृत्तेन क्लृप्तम् ।**
**नरः स्तोत्रमेतत्पठित्वोरुभक्त्या सुपुत्रायुरारोग्यमैश्वर्यमेति ॥ ४० ॥**

புஜங்கப்ரியாகல்ப ஶம்போ மயைவம்
புஜங்கப்ரயாதேன விருத்தேந க்லுப்தம் ।
நர: ஸ்தோத்ரமேதத் படித்வோரு பக்த்யா
ஸுபுத்ராயுராரோக்யமைஶ்வர்யமேதி ॥

**भुजङ्गप्रियाकल्प**-பாம்புகளைத் தன் மனதிற்கு உகந்த ஆபரணமாகக்கொண்ட **शम्भो**-சிவபெருமானே **मया**-என்னால் **एवं**-இவ்வாறு **भुजङ्गप्रयातेन वृत्तेन**-புஜங்கப்ரயாதமென்ற விருத்தத்தில் **क्लृप्तम्**-இயற்றப்பெற்ற **एतत् स्तोत्रं**-இந்த ஸ்தோத்திரத்தை **उरुभक्त्या**-மிகுந்த பக்தியுடன்

**पठित्वा**-படித்து **नरः**-மனிதன் **सुपुत्र**-நல்ல பிள்ளைகளையும் **आयुः**-நீண்ட ஆயுளையும் **आरोग्य**-நோயற்ற வாழ்வையும் **ऐश्वर्य**-செல்வத்தையும் **एति**-அடைகிருன்.

முன் சுலோகத்தில் எல்லாவற்றிலும் ஆசையைத் துறந்த நிஷ்காமர்களான பெரியோர்களுக்கு இந்த ஸ்தோத்திர பாடத்தால் சிவஸாயுஜ்யம் ஏற்படும் எனக் கூறப்பட்டது. அவ்விதம் ஆசையைத் துறக்கமுடியாத ஸகாமர்களும் இந்த ஸ்தோத்திரத்தால் பயன் பெறுவர் என்பது இங்கு கூறப்படுகிறது. மிகுந்த பக்தியுடன் இந்த ஸ்தோத்திரத்தைப் படிப்பவர்களுக்கு அவர்களுடைய அபீஷ்டங்கள் எல்லாம் நிறைவேறும். முக்கியமாக நீண்ட ஆயுள், நோயின்மை, செல்வம் நல்லதனயர்கள் இவைகளைப் பெறுவர். இங்கு ஈசுவரனைக்கூப்பிட்டு இந்த ஸ்தோத்திரம் படிக்கும் பக்தர்களுக்கு அபீஷ்டங்கள் நிறைவேறும்படி அருள வேண்டுமென பிரார்த்திக்கிருர். பரமேசுவரனுக்குப் பொன்னுலும் ரத்னங்களாலும் ஆன நகைகளைக்காட்டிலும் பாம்புகளையே மாலைகளாகவும், வளைகளாகவும் அணிந்து கொள்வதில்தான் பிரீதி அதிகம். பாம்பின்மேல் பிரியம் கொண்ட ஈசுவரனை ஸந்தோஷப்படுத்தவேதான் இந்த ஸ்தோத்திரம் ‘ பாம்பின் நடை ’ **भुजङ्गप्रयात** என்ற விருத்தத்தில் அமைக்கப்பட்டுள்ளது. தனக்கு பிரியமான இந்த ஸ்தோத்திரத்தைப் படிக்கும் பக்தர்களின் கோரிக்கைகள் யாவற்றையும் மஹேசுவரர் நிறைவேற்றுவார். (40)

**சிவபுஜங்க ஸ்தோத்திரம் முற்றும்.**



॥ श्रीः ॥

# ॥ शिवपञ्चाक्षरस्तोत्रम् ॥

# சிவ பஞ்சாக்ஷர ஸ்தோத்ரம்

[பஞ்சாக்ஷரமந்திரம் ஐந்து எழுத்துக்கள் கொண்டது. அதிலுள்ள வரிசைப்படி ஒவ்வொரு அக்ஷரமும் இந்த ஸ்தோத்திரத்திலுள்ள ஒவ்வொரு சுலோகத்தின் முதல் அக்ஷரமாக அமைந்துள்ளது. ஒவ்வொரு சுலோகத்தின் முடிவிலும் பஞ்சாக்ஷரம் முழுவதும் காணப்படுகிறது. ஆகவே இதற்கு சிவபஞ்சாக்ஷர ஸ்தோத்திரம் என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது. வித்யைகளில் சுருதியும், அதில் ஸ்ரீருத்ரமும் அதில் பஞ்சாக்ஷரமும் சிறந்தது என ஆகமங்கள் உரைக்கின்றன. இந்த பஞ்சாக்ஷரமந்திரம் யஜுர்வேத ஸம்ஹிதையின் நடுவில் மத்ய மணியாக அமைந்துள்ளது. எல்லாப் பாபங்களையும் போக்கி ஸகல நன்மைகளையும் தரும் ஜீவரத்னமான 'சிவ' என்ற இரண்டு எழுத்துக்களைத் தன்னுள் கொண்டது இது. नमः என்பதற்கு न मम என்னுடன் ஸம்பந்தமுள்ளது போல் தோன்றும் இப்பிரபஞ்சம் உண்மையில் இல்லை மாயாகல்பிதம் என்று ஸூதஸம்ஹிதையில் பொருள் கூறப்பட்டிருக்கிறது. மேலும் சிவம் என்பது ஸச்சிதானந்தம். அதற்கு நமஸ்காரம் ஈசுவரனைக்காட்டிலும் தான் வேறாகத்தோன்றுவதை மறந்து ஆத்மநிவேதனம் தன்னையே ஈசுவரனிடம் அர்ப்பணம் செய்வது அதாவது ஸச்சிதானந்த சிவத்தில் ஒன்று பட்டு விடுவது இதுதான், இங்கு நமஸ்காரம் என்பது. இவ்வித மஹிமை பொருந்திய பஞ்சாக்ஷர மஹாமந்திரத்தை ஜபம் செய்வதால் ஏற்படும் பலன் இந்த ஸ்தோத்திரத்தைப் படிப்பவர்களுக்கும் கிடைக்கும்.]

नागेन्द्रहाराय त्रिलोचनाय भस्माङ्गरागाय महेश्वराय ।
नित्याय शुद्धाय दिगम्बराय तस्मै नकाराय नमः शिवाय ॥ १ ॥

நாகேந்த்ர ஹாராய த்ரிலோசநாய
பஸ்மாங்க ராகாய மஹேஶ்வராய ।

நித்யாய ஶுத்தாய திகம்பராய
தஸ்மை நகாராய நமஶ்ஶிவாய ॥

**नागेन्द्रहाराय**-சிறந்த ஸர்ப்பராஜனை மாலையாகக்கொண்டவரும் **विलोचनाय**-நெற்றிக்கண்ணையுடையவரும் **भस्माङ्गरागाय**-விபூதியை அங்கங்களில் பூசிக்கொண்டிருப்பவரும் **महेश्वराय**-மஹேசுவரனும் **नित्याय**-என்றுமிருப்பவராயும் **शुद्धाय**-மாசற்றவராயும் **दिगम्बराय**-திசைகளையே ஆடையாக உடையவராயும் **नकाराय**-ந என்ற அக்ஷரஸ்வரூபியாக விளங்குகின்றவருமான **तस्मै**-அந்த **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம்.

"நம: ஶிவாய என்பது சிவ பஞ்சாக்ஷரம் இதன் முதல் எழுத்து ந என்பது. இந்தத் துதி ந என்ற முதல் எழுத்தில் துவக்கப்படுகின்றது. சிவபெருமான் ஸர்ப்பங்களை ஆபரணமாக உடையவன். மூன்று கண்களை உடையவன் விபூதி தான் அவனுக்கு உடலில் பூசிக்கொள்ளும் சிறந்த வாசனைப் பொடி. அவனே தேவர்களுள் சிறந்து விளங்குகின்றவன். என்றும் அழிவில்லாமல் இருப்பவன். கலங்கமற்றவன். திசைகளையே தனது ஆடையாகக் கொண்டவன். பிக்ஷாடன அவஸரத்தில் ஆடையில்லாத கோலம் கொண்டவன். ந என்ற அக்ஷர ரூபமாகத் தோன்றுபவன் ஐந்து எழுத்துக்கள் கொண்ட மந்திரம் சிவ தத்வத்தை விளக்குகிறது இதுமட்டும் அல்ல இதிலுள்ள ஒவ்வொரு எழுத்தும் சிவனைக் குறிக்கிறது. மேலும் மந்திரத்தை தேவதையின் சரீரமாகக் கூறியிருப்பதால் இம்மந்திரத்திலுள்ள ஒவ்வொரு அக்ஷரமும் சிவனுடைய ஸ்வரூபம்தான். ஆகவே ' ந ' என்ற முதல் அக்ஷர ஸ்வரூபமாயும் அதன் பொருளாயும் சிவன் விளங்குகிறார். இங்கு உள்ளதுபோல் லலிதாத்ரிசதியிலும் ' ககாரரூபா ' ' ஏகாரரூபா ' என்று இருப்பதைக் காணலாம். அவனை நாம் என்றும் வணங்குவோமாக.

இங்கு சிவபெருமானுடைய தோற்றம் நன்கு வர்ணிக்கப்பட்டுள்ளது. உலகில் அசுபமாக விளங்கும் சாம்பல் ஸர்ப்பம்

முதலியவற்றையெல்லாம் தானே எடுத்துக்கொண்டு அவர் உலகுக்கெல்லாம் நன்மையைத் தருகின்றார். உலகிலுள்ள சிறந்தபொருள் ஒன்றையும் அவர் எடுத்துக் கொள்ளாதது இவைகளில்லாமலேயே அவர் பூர்ண திருப்தியுடன் எப்பொழுதும் ஆனந்தமாக இருக்கிறார் என்பதை காட்டுகிறது மூன்று கண்களுடன் காணப்படும் அப்பெருமான் பார்ப்பவர்களின் உள்ளங்களில் பயத்தை உண்டுபண்ணினும் மங்கள விக்ரஹத்தை உடையவராகவே இருக்கின்றார். சாம்பலைப் பூசிக்கொண்டிருப்பினும் பரிசுத்தமானவர். உடுக்க ஆடை கூட இல்லாமலிருந்தும் அவர் மஹேசுவரர் எல்லா ஐசுவர்யங்களும் உள்ளவர். ந என்ற அக்ஷரம் உண்மையாகவே அவருடைய ஸ்வரூபத்தை எடுத்துக் காட்டுகின்றது. ந என்பதற்கு இல்லை என்று பொருள். சிவபெருமான் அகிஞ்சனர். அதாவது அவரிடம் ஒன்றுமே கிடையாது. இதை **दिगम्बराय** என்ற சொல் காட்டுகின்றது. மேலும் ஈசுவரனுடைய ஸ்வரூபத்தை விளக்க இயலாத வேதங்கள் அவரைப்பற்றி **नेति नेति** என்றே கூறுகின்றன. அவர் நித்யர். இவ்வாறாக ஒன்றுக்கொன்று முரண்பாடுள்ள குணங்கள் பரமேச்வரன் ஒருவனுக்கே பொருந்தும். (1)

**मन्दाकिनीसलिलचन्दनचर्चिताय नन्दीश्वरप्रमथनाथमहेश्वराय ।**
**मन्दारमुख्यबहुपुष्पसुपूजिताय तस्मै मकारमहिताय नमः शिवाय ॥**

மந்தாகிநீ ஸலில சந்தந சர்ச்சிதாய
நந்தீஶ்வர ப்ரமதநாத மஹேஶ்வராய ।
மந்தார முக்ய பஹுபுஷ்ப ஸுபூஜிதாய
தஸ்மை மகார மஹிதாய நம: ஶிவாய ॥

**मन्दाकिनी**–ஆகாய கங்கையினுடைய **सलिल**–தண்ணீராகிய **चन्दन**–சந்தனத்தினால் **चर्चिताय**–பூசப்பட்டவரும் **नन्दीश्वर**–நந்திகேச்வரர் முதலிய **प्रमथनाथ**-பிரமதகணங்களுடைய தலைவர்களுக்கு **महेश्वराय**-பெரிய தெய்வமாயும் **मन्दारमुख्य** மந்தார மலரை முக்கியமாகக்கொண்ட **बहुपुष्प**-

பல புஷ்பங்களால் **सुपूजिताय**-நன்கு பூஜிக்கப்பட்டவரும் **मकारमहिताय**-ம என்ற அக்ஷரத்தால் போற்றத்தகுந்த **तस्मै शिवाय**-அந்த சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம்.

பஞ்சாக்ஷரமந்திரத்தின் இரண்டாவது அக்ஷரம் ம என்பது. ஆதலால் இந்த இரண்டாவது சுலோகம் ம என்ற அக்ஷரத்தில் துடங்குகின்றது. சிவபெருமான் தன்னுடைய சடையில் கங்கையைத் தரித்துக்கொண்டிருக்கின்றார். அதனால் அவருக்கு கங்காதரன் என்ற பெயர் வழங்கலாயிற்று. இக்கங்கையின் நீர் சந்தனப்பூச்சுப்போல் அப்பெருமானுடைய உடலைக்குளிரச்செய்துகொண்டிருக்கின்றது. அவரைச்சுற்றிலும் நந்தி, பிருங்கி முதலிய கணநாதர்கள் குழுமி நிற்கின்றனர். அவர்கள் அனைவருக்கும் அவரே தலைவன். அவர்களனைவரும் மந்தாரம் பாரிஜாதம் முதலிய தேவதருக்களின் மலர்களால் அவரைப் பூஜிக்கின்றனர். இவ்வாறு மங்கள விக்ரஹத்துடன் விளங்கும் மகார ஸ்வரூபியான பரமேச்வரனுக்கு வணக்கம். (2)

**शिवाय गौरीवदनाब्जवृन्दसूर्याय दक्षाध्वरनाशकाय ।**
**श्रीनीलकण्ठाय वृषध्वजाय तस्मै शिकाराय नमः शिवाय ॥ ३ ॥**

ஶிவாய கௌரீ வதநாப்ஜ ப்ருந்த
ஸூர்யாய தக்ஷாத்வர நாஶகாய ।
ஸ்ரீ நீலகண்டாய வ்ருஷ த்வஜாய
தஸ்மை ஶிகாராய நம: ஶிவாய ॥

**शिवाय**-நன்மையைத் தரக்கூடியவனும் **गौरीवदन**-பார்வதியின் முகமாகிய **अब्जवृन्दसूर्याय**-தாமரைக் கூட்டத்திற்குக் கதிரவனும் **दक्षाध्वर**-தக்ஷனுடைய யாகத்தை **नाशकाय**-அழித்தவனும் **श्रीनीलकण्ठाय**-நீலநிறமான கழுத்தை உடையவனும் **वृषध्वजाय**-விருஷபக் கொடியை உடையவனும் **शिकाराय**-ஶி என்ற அக்ஷரஸ்வரூபியுமான **तस्मै शिवाय**-அந்த சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம்.

இந்த ஸ்லோகம் மூன்றுவது அக்ஷரமான ஸி என்பதில் ஆரம்பிக்கின்றது. சிவபெருமான் உலகங்களுக்கெல்லாம் நன்மை செய்கின்றவர். ஜ்யோதி ஸ்வரூபி. பார்வதீ தேவியின் வதனமாகிய தாமரையை மலரச்செய்கின்றவர். தக்ஷனுடைய கர்வத்தை ஒடுக்க அவனுடைய யாகத்தை அழித்தவர். தேவாசுரர்களைக் காப்பதற்காக ஹாலாஹலம் என்ற விஷத்தையருந்தியவர். விருஷபத்தைக் கொடியாகக் கொண்டவர். ஸிகாரஸ்வரூபியான அப்பெருமானுக்கு வணக்கம் செலுத்தவேண்டும்.

சூரியன் உதித்தவுடன் தாமரை மலர்ந்து அழகிய தோற்றத்துடன் விளங்குகின்றது. அதுபோல பார்வதீ தேவியின் முகமும் சிவனுடைய முகத்தைக்கண்டவுடன் மலர்ச்சியுற்றுப் பொலிவு பெறுகின்றது. ஆதலால் பார்வதீ தேவியின் முகத்தைத் தாமரையாகவும் சிவபெருமானை சூரியனுகவும் உருவகப்படுத்தி வர்ணித்திருக்கின்ருர். ஒரு சமயம் தக்ஷன் சிவபெருமானை அவமதித்ததால் அவர் அவனுடைய யாகத்தை அழித்து அவனுடைய கர்வத்தையும் ஒழித்தார். இதனுல் சிவனை இகழ்ந்தவர்கள் வாழ முடியாது என்பது தெளிவுபடுகின்றது. அவர் பக்த பராதீனர். தன் பக்தர்களுக்கேற்படும் இன்னல்களை நீக்கி அவர்களுக்கு அருள்புரிகின்ருர் என்பது நீலகண்டர் என்ற சொல்லால் காட்டப்படுகின்றது. அவர் வெற்றிவீரர். வெற்றிக்கொடியை நிலைநாட்டியவர் என்பது வ்ருஷத்வஜாய என்பதால் விளக்கப்படுகின்றது. ஸி என்ற அக்ஷரமும் அவரையே குறிக்கிறது. (3)

वसिष्ठकुम्भोद्भवगौतमार्यमुनीन्द्रदेवार्चितशेखराय ।
चन्द्रार्कवैश्वानरलोचनाय तस्मै वकाराय नमः शिवाय ॥ ४ ॥

வஸிஷ்ட கும்போத்பவ கௌதமார்ய
முநீந்த்ர தேவார்ச்சித ஸேகராய ।
சந்த்ரார்க்க வைஸ்வாநர லோசநாய
தஸ்மை வகாராய நம: ஸிவாய ॥

**वसिष्ठ**-வசிஷ்டர் **कुम्भोद्भव**-அகஸ்தியர் **गौतम**-கௌதமர் முதலிய **आर्यमुनीन्द्र**-வணங்கத்தக்க சிறந்த முனிவர்கள் **देव**-தேவர்கள் இவர்களால் **अर्चित**-பூஜிக்கப்பட்ட **शेखराय**-சிரஸையுடையவரும் **चन्द्र**-சந்திரன் **अर्क**-சூரியன் **वैश्वानर**-அக்நி இவர்களை **लोचनाय**-கண்களாகக்கொண்டவரும் **वकाराय**-வகாரஸ்வரூபியுமான **तस्मै शिवाय**-அந்த சிவ பெருமானுக்கு **नमः**-வணக்கம்.

இந்த சுலோகம் நான்காவது அக்ஷரமாகிய வ என்பதில் தொடங்குகிறது. சிவபெருமான் மிகுந்த மகிமை வாய்ந்தவர். வஸிஷ்டர், அகஸ்தியர், கௌதமர் முதலிய மாமுனிவர்களும் இந்திராதி தேவர்களும் அவரை வழிபடுகின்றனர். சந்திரன் ஸூர்யன், அக்நி இம்மூவரும் அவருடைய மூன்று கண்களாய் விளங்குகின்றனர். அவர் வகார ரூபி. அவரை நாம் போற்றவேண்டியது அவச்யம். (4)

**यक्षस्वरूपाय जटाधराय पिनाकहस्ताय सनातनाय ।**
**दिव्याय देवाय दिगम्बराय तस्मै यकाराय नमः शिवाय ॥ ५ ॥**

யக்ஷஸ்வரூபாய ஜடாதராய
பிநாகஹஸ்தாய ஸநாதநாய ।
திவ்யாய தேவாய திகம்பராய
தஸ்மை யகாராய நமః ஶிவாய ॥

**यक्षस्वरूपाय**-யக்ஷனுடைய உருவம் கொண்டவரும் **जटाधराय**-ஜடைதரித்தவரும் **पिनाकहस्ताय**-பிநாகம் என்று பெயர் கொண்ட வில்லைக் கையில் ஏந்தியவரும் **सनातनाय**-எப்பொழுதும் இருப்பவரும் **दिव्याय**-சிறந்தவரும் **देवाय**-தேவனுயும் **दिगम्बराय**-திக்குகளையே ஆடையாகக்கொண்ட வரும் **यकाराय**-ய என்ற அக்ஷரஸ்வரூபியுமான **तस्मै**-அந்த **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம்.

இந்த சுலோகம் ஐந்தாவது அக்ஷரமான ய என்பதில் ஆரம்பமாகின்றது. தேவாஸுர யுத்தத்தில் ஜயமடைந்த

தால் செருக்குற்று ஈசுவரனை மறந்த தேவர்களை அநுக்ர ஹிக்க அவர்கள் திகைத்து நடுங்கும்படி அவர்கள் முன்னிலை யில் பெரும் ஜோதியாக யக்ஷ உருவத்துடன் தோன்றியவர். அவருடைய சிரஸில் ஜடையும் கையில் பிநாகம் என்ற வில்லும் காணப்படுகின்றன. இவரே எப்பொழுதும் உள்ளவர். அழிவற்றவர். தேவாதி தேவனும் அவரே. அவரே திகம்பரனுகவும் தோன்றுகின்ருர். இவ்வாறு ஸர்வ வல்லமை பொருந்திய யகார ரூபியான அப்பெருமானை நாம் போற்றுவோமாக.

இந்த சிவ பஞ்சாக்ஷர ஸ்தோத்திரத்தை அனுதினமும் தம் மனதில் அனுஸந்தானம் செய்கின்றவர்கள் சிவ ஸாயுஜ்யமெய்துவார்களென்பது திண்ணம். (5)

**சிவ பஞ்சாக்ஷர ஸ்தோத்ரம் முற்றும்.**



॥ श्रीः ॥

# ॥ शिवनामावल्यष्टकम् ॥

## சிவ நாமாவள்யஷ்டகம்

[பகவானுடைய நாமாக்களை மனம் உருக வாய்விட்டுக் கூறி அழைப்பதுதான் அவன் அருளைப்பெறச் சிறந்தவழி. இதற்காக சிவனுடைய பல நாமாக்களைக் கொண்டே இந்த ஸ்தோத்திரம் முழுவதையும் அமைத்திருக்கிறார். எல்லாம் ஸம்போதனமாக அமைந்திருக்கின்றது சிவ நாமாக்களை வரிசையாக எடுத்துக்கூறும் எட்டு சுலோகங்கள் கொண்ட இதற்கு 'சிவ நாமாவள்யஷ்டகம்' என்றபெயர் பொருத்த மானது இதை வஸந்த திலக விருத்தத்தில் இயற்றியிருக் கிறார். வஸந்தகாலம் மலர்ச் சிறப்புள்ளது. நாமாக்களாகிய நறுமண மலர் தொடுத்த இத்துதிப் பூமாலையை பகவானுக்கு சாத்துகிறார். ஈசுவரனின் பல பெருமைகளை நன்கு விளக்கிக் காட்டும் நாமாக்களால் அவனை அழைத்து பிறவித் துன் பத்தை நீக்கவேண்டுகிறார் இந்தத் துதியைப் படிப்பதால் நாமஸங்கீர்த்தன பலனும் கிடைக்கும்.]

**हे चन्द्रचूड मदनान्तक शूलपाणे स्थाणो गिरीश गिरिजेश महेश शंभो।**
**भूतेश भीतभयसूदन मामनाथं संसारदुःखगहनाज्जगदीश रक्ष ॥ १ ॥**

ஹே சந்த்ரசூட மதநாந்தக ஶூலபாணே
ஸ்தாணோ கிரீஶ கிரிஜேஶ மஹேஶ ஶம்போ ।
பூதேஶ பீத பயஸூதந மாமநாதம்
ஸம்ஸார துக்க கஹநாத் ஜகதீஶ ரக்ஷ ॥

**हे चन्द्रचूड**-சந்திரனைத் தலையில் அணிந்திருப்பவனே **मदनान्तक**-மன்மதனை யழித்தவனே **शूलपाणे**-த்ரிசூலத்தைக் கையில் ஏந்தியவனே **स्थाणो**-அசைவற்றவனே **गिरीश**-கைலாஸமலைக்கு அதிபனே **गिरिजेश**-மலையரசனின் மகளான பார்வதீ தேவியின் நாயகனே **महेश**-மஹேச்வரனே **शम्भो**-சுகத்தைக் கொடுப்பவனே **भूतेश**-பூதகணங்களுக்கதிபனே

**भीतभयसूदन**-பயமுற்றவர்களின் அச்சத்தையழிப்பவனே **जगदीश**-உலகனைத்தையும் உய்விப்பவனே **अनाथं**-காப்பாளனற்ற **मां**-என்னை **संसारदुःखगहनात्**-வாழ்க்கையாகிய துன்பந்தரும் காட்டிலிருந்து **रक्ष**-காப்பாற்றுவாயாக.

சிவபெருமான் தன்னையண்டியவர்களின் தாபங்கள் அனைத்தையும் தீர்ப்பதற்காகத் தன்னுடைய தலையில் சந்திரனை தரித்துக்கொண்டிருக்கிறார். அவர் சிறந்த தீரன் தன்னுடைய மனதில் காமத்தை உண்டுபண்ண நினைத்த காமனைத் தன்னுடைய நெற்றிக்கண்ணிலிருந்து கிளம்பிய நெருப்பால் சாம்பலாக ஆக்கினார். அவர் பக்தர்களின் பகைவர்களைக் கொல்வதற்காகத் தன் கையில் த்ரிசூலத்தை தாங்கியவண்ணம் நிற்கிறார். அவர் தூண்போல் அசைவற்றவர். எந்த நிலையிலும் பயமின்றி இருப்பவர். மலையரசன் மகளான பார்வதீதேவியின் பதியாக அவரே விளங்குகிறார். எல்லோரையும் அடக்கியாள்பவர், அவரிடமிருந்து தான் ஸகல சுகங்களும் உண்டாகின்றன. அவரே பூதகணங்களுக்கெல்லாமதிபன். அச்சமுற்றவர்களின் பயத்தைப்போக்க வல்லவரும் அவரே. உலகனைத்தையும் காப்பவரும் அவரே. அப்படிப்பட்ட சிறந்த குணங்கள் படைத்த பரமேச்வரனுடைய திரு நாமங்களை உச்சரித்து நாம் பூஜிப்போமாகில் அவர் அநாதைகளான நம்மை ஸம்ஸாரமாகிய ஓர் பெருங்காட்டிலிருந்து காப்பாற்றுவார். இங்கு மண்ணுலக வாழ்வை காடாக உருவகப்படுத்திக் கூறப்பட்டிருக்கிறது. இந்த ஸம்ஸாரம் என்பது ஓர் அடர்ந்த காடு. காட்டில் அகப்பட்டுக் கொண்டவர்களுக்கு வழி தெரியாது. அவர்கள் அங்கிருந்து தப்பித்துக்கொண்டு நாட்டிற்கு செல்வது மிகவும் கடினம். அவர்களைத் துன்புறுத்தப் பல வித காட்டு மிருகங்கள் இருக்கும். மேலும் பல வழிப்பறிக் கொள்ளைக்காரர்கள் அவர்களுடைய சொத்துக்களை அபஹரிப்பதற்காக ஒளிந்துகொண்டிருப்பார்கள். ஆனால் அவர்களுக்கு அங்கு தீரனான ஓர் நல்ல வழிகாட்டி கிட்டினால் அவர்கள் தைர்யமாகச் சென்று தங்களுடைய ஊரை

அடையலாம். அதுபோலவே இந்த ஸம்ஸாரமென்ற வாழ்க்கையிலும் ஆசைகள் என்ற கொள்ளைக்காரர்கள் நம்முடைய மனதை அபஹரிக்கக் காத்துக்கொண்டிருக்கின்றனர். பலவிதமான துன்பங்கள் வன்விலங்குகள்போல் நம்மைப் பயமுறுத்துகின்றன. இதிலிருந்து தப்பி நல்ல வழியை அடைய வழிகாட்டி ஒருவனே. அவனே ஸர்வ வல்லமை வாய்ந்த பரமேச்வரன். அவனையே நாம் வழிபடவேண்டும். அவனுடைய திரு நாமங்களைக் கூறவேண்டும். இதனால் நாம் இக்காட்டிலிருந்து தப்பி நல்ல வழியை அதாவது மோக்ஷமார்க்கத்தையடையலாம். (1)

**हे पार्वतीहृदयवल्लभ चन्द्रमौले भूताधिप प्रमथनाथ गिरीशचाप ।**
**हे वामदेव भव रुद्र पिनाकपाणे संसारदुःखगहनाज्जगदीश रक्ष ॥**

ஹே பார்வதீ ஹ்ருதய வல்லப சந்த்ர மௌளே
பூதாதிப ப்ரமத நாத கிரீஶ சாப ।
ஹே வாமதேவ பவ ருத்ர பிநாகபாணே
ஸம்ஸார துக்க கஹநாத் ஜகதீஶ ரக்ஷ ॥

**हे पार्वतीहृदयवल्लभ**-மலைமகளின் மனதிற்குகந்த மணாளனே **चन्द्रमौले**-மதியைத் தலையிலணிந்தவனே **भूताधिप**-பூதகணங்களின் தலைவனே **प्रमथनाथ**-பிரமதகணங்களைக் காப்பவனே **गिरीशचाप**-மேரு மலையை வில்லாய் ஏந்தியவனே **वामदेव**-அழகிய தேவனே **भव**-உலகிற்குக் காரணமானவனே **रुद्र**-துன்பத்தின் காரணமான பாபத்தை விரட்டுகின்றவனே **पिनाकपाणे**-பிநாகம் என்ற வில்லை கையில்கொண்டவனே **जगदीश**-உலகைக்காப்பவனே **संसारदुःखगहनात्**-வாழ்வெனும் துன்பந்தரும் காட்டிலிருந்து **रक्ष**-காப்பாற்றுவாயாக.

மலையரசனின் மகளான பார்வதீ தேவியின் மனதைக் கவர்ந்தவன் ஸர்வசக்தி வாய்ந்த பரமேச்வரன். தவக் கோலத்துடன் அவன் இமயத்தில் வீற்றிருக்கும் சமயத்தில் பார்வதீ தேவி அவனுக்குப் பணிவிடை செய்தனள். அவ்வமயம் அவனுடைய சிரசில் விளங்கும் சந்திரன் தன்

கதிர்களால் அவனுடைய கிலேசமனைத்தையும் நீக்கினன். ஆதலால் அவள் அனவரதம் பரமேச்வரனுக்குப் பணி யாற்றினும் பொலிவுபெற்றே விளங்கினள். இவ்வாறுக் சந்திரனைத் தன் தலையில் தாங்குவதால் அவன் நம் தாபங் களைத் தீர்ப்பவன் என்று காட்டப்படுகின்றது. பூதகணங் களுக்கும் ப்ரமத கணங்களுக்கும் தலைவன். அவை பக்தர் களைத் துன்புறுத்தாதவண்ணம் அடக்கி ஆள்கிறான். த்ரிபுர ஸம்ஹாரத்தில் பரமேச்வரன் மேருமலையை வில்லாகக் கையில் கொண்டான். ஐந்து முகங்களில் ஒன்று வாம தேவம் என்ற பெயர் பெற்றது. அவனிடமிருந்தே உலக மனைத்தும் உண்டாகிறது. அவன் தன் பக்தர்களைக்காக்கப் பிநாகம் என்ற வில்லைக்கையில் ஏந்தியவண்ணம் நிற்கின்றான். அவன் துன்பங்களைப் போக்குவதால் ருத்ரன் என்ற பெயர் பெற்று விளங்குகிறான். இந்த திருநாமங்களை உச்சரித்து பரமேச்வரனைப் போற்றினால் நாம் இத்துன்ப மயமான பிறவியிலிருந்து விடுபடலாம். (2)

हे नीलकण्ठ वृषभध्वज पंचवक्त्र लोकेश शेषवलय प्रमथेश शर्व ।
हे धूर्जटे पशुपते गिरिजापते मां संसारदुःखगहनाज्जगदीश रक्ष ॥

ஹே நீலகண்ட வ்ருஷப த்வஜ பஞ்சவக்த்ர
லோகேஶ ஶேஷவலய ப்ரமதேச ஶர்வ ।
ஹே தூர்ஜடே பஶுபதே கிரிஜாபதே மாம்
ஸம்ஸார துக்க கஹநாத் ஜகதீஶ ரக்ஷ ॥

**हे नीलकण्ठ**-நீல நிறமுள்ள கழுத்தையுடையவனே **वृषभध्वज**-காளைமாட்டைக் கொடியாகக் கொண்டவனே **पञ्चवक्त्र**-ஐந்து முகங்கள் படைத்தவனே **लोकेश**-உலகங்களை யெல்லாம் காத்தருள்பவனே **शेषवलय**-பாம்புகளை வளையல் களாக உடையவனே **प्रमथेश**-ப்ரமதகணங்களின் தலைவனே **शर्व**-பாபங்களை நாசம்செய்கிறவனே **धूर्जटे**-ஜடாபாரம் கொண்டவனே **पशुपते**-ஸகல ஜீவராசிகளையும் காக்கின்ற வனே **गिरिजापते**-மலைமகளான பார்வதீ தேவியின் நாயகனே

ஜகதீச-உலகத்தைப் பரிபாலிப்பவனே மாம்-என்னை ஸம்ஸார-துக்ககஹனாத்-உலகவாழ்க்கையெனும் துன்பமிகுந்த காட்டிலிருந்து ரக்ஷ-காப்பாற்றுவாயாக.

ஒரு சமயம் அமுதத்தைப்பெற தேவர்களும் அஸுரர்களும் மந்தரகிரியை மத்தாகவும் வாஸுகியை கயிறுகவும் வைத்துக்கொண்டு பாற்கடலைக்கடைந்தனர். அப்பொழுது அதிலிருந்து கிளம்பிய விஷத்தைத் தாங்கமுடியாமல் எல்லோரும் பரிதபித்தனர். அவர்களைக் காப்பதற்காகச் சிவபெருமான் அவ்விஷத்தைப் பருகினுன். அதனுல் அவனுடைய கழுத்து நீலநிறமாகத்தோன்றியது. அதிலிருந்து அவருக்குத் திருநீலகண்டன் என்ற பெயர் உண்டாயிற்று. இதனுல் அப்பெருமான் பக்தர்களைப் பல ஆபத்துக்களிலிருந்தும் காக்கவல்லவர் என்பது விளங்குகின்றது. அவருடைய கொடியில் காளைமாட்டின் சின்னம் அமைக்கப்பட்டிருப்பதால் அவனுக்கு விருஷபத்வஜன் என்றபெயர் ஏற்பட்டது. அப்பெருமான் ஸத்யோஜாதம் முதலிய ஐந்து முகங்களையுடையவன். உலகங்கள் அனைத்தையும் காப்பவன். பாம்புகளை ஆபரணமாக உடையவன். எல்லாப்பாவங்களையும் போக்கும் ஆற்றல் பெற்றவன். பிரமதகணங்களின் தலைவன். சிரஸில் ஜடாபாரம் தரித்து அதில் கங்கையை தாங்குபவன். பசுக்களாகிய நம்மெல்லோரையும் காப்பவன். பார்வதியின் பதி. அவனுடைய திருநாமங்களைப் பஜிப்பதால் அவன் நமது பாவங்களைப்போக்கி ஸம்ஸார துக்கத்திலிருந்து விடுபடச்செய்கிருன். ஆதலால் நாமனைவரும் அவனுடைய நாமாவளியைப் பஜிக்கவேண்டும். (3)

हे विश्वनाथ शिव शंकर देवदेव गङ्गाधर प्रमथनायक नन्दिकेश ।
बाणेश्वरान्धकरिपो हर लोकनाथ संसारदुःखगहनाज्जगदीश रक्ष ॥

ஹே விஶ்வநாத ஶிவ ஶங்கர தேவதேவ
கங்காதர ப்ரமதநாயக நந்திகேஶ ।

பாணேஶ்வராந்தகரிபோ ஹர லோகநாத
ஸம்ஸார துக்க கஹநாத் ஜகதீஶ ரக்ஷ ॥

**हे विश्वनाथ**–உலகனைத்தும் காக்கின்றவனே **शिव**–மங்களமான ஸ்வரூபத்தை உடையவனே **शंकर**–ஸுகத்தைத் தருபவனே **देवदेव**–தேவாதிதேவனே **गङ्गाधर**–கங்கையைச் சடையில் தாங்கி நிற்பவனே **प्रमथनायक**–ப்ரமத கணங்களின் தலைவனே **नन्दिकेश**—நந்திகேசுவரரால் போற்றப்படுகின்றவனே **बाणेश्वर**–பாணனென்ற அஸுரனுக்கு ஈசுவரனே **अन्धकारिपो**–அந்தகன் என்ற அரக்கனை ஸம்ஹாரம் செய்தவனே **हर**—ப்ரளயகாலத்தில் உலகனைத்தையும் அழிப்பவனே **लोकनाथ**–உலகங்களைக் காப்பவனே **जगदीश**–உலகங்களின் தலைவனே **संसारदुःखगहनात्** உலகவாழ்வென்ற துன்பம்மிகுந்த காட்டிலிருந்து **रक्ष**–காப்பாற்றுவாயாக.

பரமேச்வரன் உலகங்களையெல்லாம் காக்கின்றவன். அவன்தான் மங்களகரமான ஸ்வரூபத்தை உடையவன். இந்த உலகத்தில் அனைவருக்கும் இன்பத்தையளிப்பவனும் அவனே. அவன்தான் தேவர்களுக்கெல்லாம் தலைவன். அவன் தன்னுடைய சடைமுடியில் தேவநதியான கங்கையைத் தாங்கிநிற்கிறுன். அதனுல் அவனுக்கு கங்காதரன் என்ற பெயர் வழங்கிவருகின்றது. நந்திகேசரும் பாணுஸுரனும் போற்றும் தெய்வம். உலகைக் காப்பதற்காக அந்தகன் என்ற அரக்கனை அழித்தவன். ஆதலால் அவனுடைய திருநாமங்களைப் பஜிப்பதால் நமக்குப் பரம சிரேயஸ் உண்டாகும். இதனுல் ஸம்ஸார பாதை நீங்கும்.

**वाराणसीपुरपते मणिकर्णिकेश वीरेश दक्षमखकाल विभो गणेश ।**
**सर्वज्ञ सर्वहृदयैकनिवास नाथ संसारदुःखगहनाज्जगदीश रक्ष ॥ ५ ॥**

வாராணஸீபுர பதே மணிகர்ணிகேஶ
வீரேஶ தக்ஷமக கால விபோ கணேஶ ।
ஸர்வக்ஞ ஸர்வ ஹ்ருதயைக நிவாஸ நாத
ஸம்ஸார துக்க கஹநாத் ஜகதீஶ ரக்ஷ ॥

**वाराणसीपुरपते**-காசிமாநகரின் பதியே **मणिकर्णिकेश**-மணி கர்ணிகையென்ற கட்டத்தில் விளங்கும் பரமேச்வரனே **वीरेश**—வீரர்களின் நாயகனே **दक्षमखकाल**—தக்ஷனுடைய யாகத்தை அழித்தவனே **विभो**-எங்கும் வியாபித்து நிற்பவனே **गणेश**-ப்ரமத கணங்களின் தலைவனே **सर्वज्ञ**-எல்லாமறிந்தவனே **सर्वहृदयैकनिवास**-எல்லாருடைய ஹ்ருதயத்திலும் வஸிக்கும் பரம்பொருளே **नाथ**—காப்பாளனே **जगदीश**-உலகத் தலைவனே **संसारदुःखगहनात्**-ஸம்ஸாரமென்னும் துன்பம் தரும் காட்டிலிருந்து **रक्ष**-காப்பாற்று.

பரமேச்வரன் காசீ என்ற புண்ய க்ஷேத்திரத்தின் பதியாக விளங்குகிறான். அங்கு புண்யமான கங்காநதி ஓடுகிறது. அதில் அநேக புனிதமான ஸ்நானகட்டங்கள் உள்ளன. அவற்றுள் மணிகர்ணிகா என்ற புனிதமான கட்டத்தில் பரமேச்வரன் பிரகாசித்துக்கொண்டிருக்கிறான். அவனே வீரர்களையெல்லாம் காப்பவன். தக்ஷனுடைய யாகத்தை அழித்தவனும் அவனே. அவனே எங்கும் வியாபித்து நிற்பவன். எல்லா கணங்களுக்கும் அவனே தலைவன். அவனே எல்லாமறிந்தவன். எல்லா ஜீவராசிகளுடைய ஹ்ருதயகமலத்திலும் அவனே குடியிருப்பவன். அவனே அனைவரையும் காப்பவன். அவனே தன்னுடைய திருநாமங்களை உச்சரிக்கும் பக்தர்களுடைய இஹலோக துக்கங்களைக் களைகின்றவன். ஆதலால் நாமனைவரும் அவனுடைய நாமாவளியைத் தினமும் உச்சரிக்கவேண்டும்.

श्रीमन्महेश्वर कृपामय हे दयालो
हे व्योमकेश शितिकण्ठ गणाधिनाथ ।
भस्माङ्गराग नृकपालकलापमाल
संसारदुःखगहनाज्जगदीश रक्ष ॥ ६ ॥

ஸ்ரீமந்மஹேஶ்வர க்ருபாமய ஹே தயாளோ
ஹே வ்யோமகேஶ ஶிதிகண்ட கணாதிநாத ।

பஸ்மாங்கராக ந்ருகபால கலாப மால
ஸம்ஸார துக்க கஹநாத் ஜகதீஶ ரக்ஷ ||

**श्रीमन्महेश्वर**-சிறந்த செல்வத்துடன் விளங்கும் பரமேச்வரனே **कृपामय**-கருணை நிறைந்தவனே **हे दयालो**-தயை காட்டுபவனே **व्योमकेश**-ஆகாசம்போல் விரிந்த கேசங்கள் உள்ளவனே, அல்லது விராட்ஸ்வரூபத்தில் ஆகாசத்தையே கேசமாகக்கொண்டவனே **शितिकण्ठ**-கருப்பான கழுத்தை யுடையவனே **गणाधिनाथ**-கணங்களின் தலைவனே **भस्माङ्गराग**-விபூதியை அங்கங்களில் பூசிக்கொண்டிருப்பவனே **नृकपालकलापमाल**-மனிதர்களின் மண்டையோடுகளின் வரிசைகளை மாலையாக அணிந்திருப்பவனே **जगदीश**-உலகத் தலைவனே **संसारदुःखगहनात्**-ஸம்ஸாரமாகிய துன்பந்தரும் காட்டிலிருந்து **रक्ष**-காப்பாற்று.

பரமேச்வரன் மிகுந்த கருணையுள்ளவன். தன்னை யண்டும் பக்தர்பால் தயவு கூர்ந்து அவர்களுடைய துன்பங்கள் அனைத்தையும் களைகின்றவன் அவனுடைய ஜடை ஆகாசம்போல விரிந்தது. அதில் கங்கையை அடக்கி விட்டான். விராட் ஸ்வரூபத்தில் ஆகாசமே கேசம். அவன் எல்லாக் கணங்களையும் காக்கின்றான். தனது உடல் முழுவதிலும் விபூதியை பூசிக்கொண்டு கழுத்தில் மனிதர்களின் மண்டையோடுகளால் ஆன மாலையை அவன் அணிந்திருக்கிறான். அவன் அமங்களமான பொருள் களை யெல்லாம் தனதாகச் செய்துகொண்டு உலகிற்கு நன்மையைச் செய்கின்றான். இவ்வாறான கருணை மூர்த்தியைத் தியானிப்பதால் நமக்கு ஸகலவிதமான பயங் களும் விலகும். (6)

**कैलासशैलविनिवास वृषाकपे हे मृत्युञ्जय त्रिनयन त्रिजगन्निवास ।**
**नारायणप्रिय मदापह शक्तिनाथ संसारदुःखगहनाज्जगदीश रक्ष ॥**

கைலாஸ ஶைல விநிவாஸ வ்ருஷாகபே ஹே
ம்ருத்யுஞ்ஜய த்ரிநயந த்ரிஜகந்நிவாஸ ।

நாராயணப்ரிய மதாபஹ சக்திநாத
ஸம்ஸார துக்க கஹநாத் ஜகதீச ரக்ஷ ॥

**कैलासशैलविनिवास**-கைலயங்கிரியில் வசிப்பவனே **हे वृषाकपे**-தர்மத்தை ரக்ஷிக்கின்றவனே **मृत्युंजय**-காலனை வென்றவனே **त्रिनयन**-சந்திரன், சூரியன், அக்னி என்ற மூன்று கண்களையுடையவனே **त्रिजगन्निवास**-மூன்று உலகங்களுக்கும் உறைவிடமே **नारायणप्रिय**-மஹாவிஷ்ணுவிற்குப் பிரியமானவனே **मदापह**-மதத்தைக்களைகிறவனே **शक्तिनाथ**-பராசக்தியின் பதியே **जगदीश**-உலகனைத்தையும் உய்விக்கின்றவனே **संसारदुःखगहनात्**-வாழ்க்கையாகிய துன்பமிகும் கானகத்திலிருந்து **रक्ष**-காப்பாற்றுவாயாக.

பரமேச்வரன் வெள்ளிமலை மீது வீற்றிருப்பவன். தர்மத்தைக்காப்பவன். காலனை வென்றவன். மூன்று கண்கள் படைத்தவன். மூவுலகிற்கும் அவனே உறைவிடம். மஹாவிஷ்ணுவின் பிரியத்திற்குப் பாத்திரமானவனும் அவனே. துஷ்டர்களின் கர்வத்தை ஒடுக்குகின்றவனும் அவனே. உலகனைத்தும் காக்கவல்ல பராசக்தியின் பதியும் அவனே. அவனை நாம் போற்றிடின் அவன் நம்மை நிச்சயமாகக் காப்பாற்றுவான்.

இங்கு பரமேச்வரனிடத்தில் உலகமனைத்தும் குடிகொண்டுள்ளது என்று கூறப்பட்டுள்ளது. இவ்வாறு இருக்க இவ்வுலகின் ஓர் மூலையில் அமைந்துள்ள கைலயங்கிரியின் கண் இவ்விராட்புருஷன் எவ்வாறு அமரக்கூடும்? இதனால் பரமேச்வரனுடைய அணிமாதி சக்திகள் விளக்கப்படுகின்றன. அவர் விராட் ஸ்வரூபத்தையுடையவராயிருப்பினும் சிறிய சரீரத்தையும் பெற்று தனக்குள் இயங்கும் உலகினுள்ளும் உறைந்திருப்பார் என்பது நன்கு காட்டப்பட்டுள்ளது. (7)

**त्र्यक्षेश त्रिभवभवनाशक विश्वरूप विश्वात्मक त्रिभुवनैकगुणाधिकेश ।**
**हे विश्वनाथ करुणामय दीनबन्धो संसारदुःखगहनाज्जगदीश रक्ष ॥**

விஸ்வேஸ விஸ்வபவநாஸக விஸ்வரூப
விச்வாத்மக த்ரிபுவனைககுணாதிகேஸ ।
ஹே விஸ்வநாத கருணாமய தீநபந்தோ
ஸம்ஸாரதுக்ககஹநாத் ஜகதீஸ ரக்ஷ ॥

**विश्वेश**—எல்லோரையும் ஆள்பவனே **विश्वभवनाशक**—எல்லோருடைய பிறவித் துன்பத்தை அழிப்பவனே **विश्वरूप**—பிரபஞ்ச உருவமாகத் தோன்றுபவனே **विश्वात्मक**-எல்லோருக்கும் ஆத்மாவாக விளங்குபவனே **त्रिभुवनैकगुणाधिकेश**—மூவுலகிலும் எல்லா குணங்களாலும் சிறந்து விளங்கும் ஒரே ஈசனாக இருப்பவனே **हे विश्वनाथ**—எல்லோரையும் காப்பவனே **करुणामय**—கருணாஸ்வரூபியே **दीनबन्धो**—ஏழைகளின் உறவினனே **जगदीश**—எல்லா உலகங்களுக்கும் அதிபதியே **संसारदुःखगहनात्**—உலகவாழ்வெனும் துன்பந்தரும் கானகத்திலிருந்து **रक्ष**- காப்பாற்றுவாயாக.

பரமேச்வரன் ஒருவனே மூவுலகிற்கும் அதிபன். அவன் ஒருவன்தான் உலகின்கண் உண்டாகும் பிறவித் துன்பங்கள் அனைத்தையும் அறுத்தெறிகிறான். அவனே பிரபஞ்சவடிவமாகத் தோன்றுகிறான். எல்லாப் பிராணிகளுக்கும் ஆத்மாவாக அவன் விளங்குகிறான். இதையே **एको देवः सर्वभूतेषु गूढः सर्वव्यापी सर्वभूतान्तरात्मा** என்ற ச்ருதியும் காட்டுகின்றது. மூவுலகிலும் ஸகல கல்யாண குணங்களுடன் சிறந்து விளங்குபவன் இவன் ஒருவனே. அவனே மிகுந்த மாட்சிமை வாய்ந்தவன். மிகப்பரிவுடன் ஏழைகளின் துன்பங்களைக் களைகின்றவனும் அவனே. ஆதலால் அவன்தான் அனைவருக்கும் சிறந்த உறவு. அவனைப் போற்றுவதால் ஸம்ஸார பாதைகள் விலகுவது திண்ணம்.

**गौरीविलासभवनाय महेश्वराय पञ्चाननाय शरणागतकल्पकाय ।**
**शर्वाय सर्वजगतामधिपाय तस्मै दारिद्र्यदुःखदहनाय नमः शिवाय ॥**

கௌரீவிலாஸபவநாய மஹேச்வராய
பஞ்சாநநாய ஶரணாகதகல்பகாய ।
ஶர்வாய ஸர்வஜகதாமதிபாய தஸ்மை
தாரித்ர்யதுக்கதஹநாய நம: ஶிவாய ॥

**गौरीविलासभवनाय**-பார்வதீ தேவியின் ஆனந்தபவன மாயும் **महेश्वराय**-பரமேச்வரனும் **पञ्चाननाय**-ஐந்து முகங்களை யுடையவனும் **शरणागतकल्पकाय**-தன்னையண்டியவர்களுக்கு கல்பதருவாக இருப்பவனும் **शर्वाय**-பாபங்களையழிக்கின்ற வனும் **सर्वजगतां**-எல்லா உலகங்களுக்கும் **अधिपाय**-சக்ர வர்த்தியாயும் **दारिद्र्यदुःखदहनाय**-ஏழ்மையால் ஏற்படும் துன்பத்தை எரிப்பவனுமுள்ள **तस्मै शिवाय**-அந்த சிவ பெருமானுக்கு **नमः**-வணக்கம்.

பரமேச்வரன் ஆனந்தரூபி. அவர் ஸந்நிதியில் பர தேவதையின் மனம் உல்லாஸம் அடைகிறது. ஸர்வசக்தி வாய்ந்தவன். ஐந்து முகங்களையுடையவன். தன்னை வந்து அண்டிய பக்தர்களின் கோரிக்கைகள் யாவற்றையும் நிறை வேற்றுபவன். பாபங்களை அழிக்கின்றவன். எல்லா உலகங்களையும் ஆளும் சக்ரவர்த்தி ஏழைகளின் துன்பங்களை யெல்லாம் எரிப்பவன். இவ்வாறு விளங்கும் சிவபெருமானுக்கு வணக்கம். (9)

இந்த ச்லோகத்தில் '**पञ्चानन**' என்ற சொல் மிகவும் அழகாக அமைந்துள்ளது. '**पञ्चानन**' என்பதற்கு ஐந்து முகங்களை உடையவன் என்றும் சிம்மம் என்றும் இரண்டு பொருள்கள் உண்டு. பகவான் சிம்மம் போல் பகைவர் களுக்கு பயங்கரமான தோற்றத்தையளிக்கின்றார் என்பது இதனால் விளங்குகின்றது. இதையே '**नम उग्राय च भीमाय च**' என்று ஸ்ரீருத்ரம் கூறுகின்றது. சிம்மம் தன்னிடம் வந்தவர் களைக் கொன்று தின்கின்றது. ஆனால் இந்த சிம்மமோ தன்னையண்டியவர்களிடம் பரிவுகாட்டிக் காக்கின்றது. இதை **शरणागतवत्सलाय** என்ற பதம் நன்கு எடுத்துக்காட்டு கின்றது.

இவ்வாருக நம: சிவாய என்ற ஜீவரத்னத்தை அழகிய பாக்களில் பதித்து ஆதிசங்கர பகவத்பாதர் அவர்கள் மானிடர்களை ஈச்வர பக்தியில் ஈடுபடுத்துவதற்காக பாடியுள்ளார்கள். இப்பாமாலையில் அடங்கியுள்ள பரமேச்வரனுடைய திருநாமங்களைப் பஜிப்பதால் பிறவித்துன்பம் நீங்கி அனைவரும் நிரந்தரமான ஆனந்தத்தையடையலாம். (9)

**சிவ நாமாவள்யஷ்டகம் முற்றிற்று**



॥ श्रीः ॥

# ॥ शिवपञ्चाक्षरनक्षत्रमालास्तोत्रम् ॥

## சிவ பஞ்சாக்ஷர நக்ஷத்ரமாலா ஸ்தோத்ரம்.

---

*[27 சுலோகங்கள் கொண்ட இந்த ஸ்தோத்திரம் 27 முத்துக்கள் கொண்ட நக்ஷத்திரமாலையாக அமைந்திருக்கிறது. ஒவ்வொரு சுலோகத்தின் ஒவ்வொரு பாதத்திலும் முடிவில் சிவபஞ்சாக்ஷரமுத்ரை காணப்படுவது ஓர் விசேஷம். இந்த நக்ஷத்திரமாலையை கழுத்தில் அணிந்து கொள்பவன் அதாவது மனப்பாடம் செய்து எப்பொழுதும் சொல்பவன் ஸாக்ஷாத் பரமசிவ ஸ்வரூபமாகவே ஆய்விடுகிறான் என்று பலச்ருதியில் காணப்படுகிறது. ஒவ்வொரு சுலோகத்திலும் நான்கு தடவை பஞ்சாக்ஷரமந்திரம் வருவதால் இந்த ஸ்தோத்திரம் முழுவதையும் ஒரு தடவை சொல்பவன் 108 தடவை பஞ்சாக்ஷரமந்திர ஜபம் செய்துவிடுகிறான். சிறந்த பிராஸங்களுடனும் அழகிய விருத்தத்துடனும் அமைந்திருப்பதால் இதைப் படிப்பதே மனதிற்கு உல்லாஸம் கொடுக்கும். நம: என்ற பதத்துடன் கூடியிருப்பதால் இந்த சுலோகங்களைச் சொல்லி நமஸ்காரம் செய்பவர்கள் சிறந்த பலனை அடைவார்கள். ஈசுவரனுடைய மூர்த்தியை நன்கு வர்ணிப்பதுடன் அவருடைய பல பெருமைகளையும் நன்கு எடுத்துக் காட்டுகிறது இந்த ஸ்தோத்திரம்]*

**श्रीमदात्मने गुणैकसिन्धवे नमः शिवाय**
**धामलेशधूतकोकबन्धवे नमः शिवाय ।**
**नामशोषितानमद्भवान्धवे नमः शिवाय**
**पामरेतरप्रधानबन्धवे नमः शिवाय ॥ १ ॥**

ஸ்ரீமதாத்மநே குணைக ஸிந்தவே நம: ஶிவாய
தாம லேஶ தூத கோக பந்தவே நம: ஶிவாய ।
நாம ஶோஷிதாநமத் பவாந்தவே நம: ஶிவாய
பாமரேதர ப்ரதாந பந்தவே நம: ஶிவாய ॥

**श्रीमदात्मने**-அணிமா முதலிய அஷ்டைச்வர்யங்களுடன் விளங்கும் ஸ்வரூபத்தையுடையவனாயும் **गुणैकसिन्धवे**-ஸகல குணங்களுக்கும் சிறந்த கடலாயும் விளங்கும் **शिवाय**-சிவ பெருமானுக்கு **नमः**-வணக்கம். **धामलेश**-தன்னுடைய சிறிதளவு ஒளியால் **धूत**-மங்கிப்போன **कोकबन्धवे**-சூரியனை யுடைய **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம். **नाम-शोषित**-பெயரால்மட்டும் எஞ்சும்படி செய்யப்பட்ட **आनमत**-தன்னை வணங்கும் பக்தர்களுடைய **भवान्धवे**-ஸம்ஸாரமாகிய பாழும் கிணற்றையுடைய **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம். **पामरेतर**-அறிவற்றவர்களைத்தவிர மற்றவர் களுக்கு (அறிவாளிகளுக்கு) **प्रधानबन्धवे**-முக்யமான உறவினன் **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம்.

சிவபெருமான் அஷ்டைச்வர்யங்களுடனும் விளங்கு கின்றான். அவனே எல்லா குணங்களுக்கும் உறைவிடம். அவனுடைய ஒப்பற்ற தேஜஸ்ஸால் சூரியனும் ஒளி குன்றியவனாக ஆகின்றான். அப்பரம்பொருளின் ஒளிபெற்றே சூர்யன், சந்திரன், அக்நி முதலிய அனைத்தும் பிரகாசிக் கின்றது என்று மறைகள் கூறுகின்றன. '**तस्य भासा सर्वमिदं विभाति**' அவன் தன்னைப்போற்றும் பக்தர்களின் பிறவிப் பிணியைத் தீர்க்கின்றான். இப்பிறவி என்பது ஓர் இருள் சூழ்ந்த பாழும் கிணறு. இதில் வீழ்ந்தவர்கள் கரையேறுவது அரிது. ஆனால் பகவத்பக்தி என்ற கயிற்றில் கட்டுண்டவர் கள் இதிலிருந்து மீட்கப்படுகின்றனர். அவர்களுக்கு இப் பிறவி என்பது இல்லாமல் போய்விடுகின்றது. பரமேச்வரன் ஞானிகளின் ஆப்த நண்பன். **ज्ञानी तु आत्मैव मे मतम्** என்று கீதையில் பகவான் கூறுகிறார். இவ்வாறு பக்தர்களுக்கும் ஞானிகளுக்கும் ஆப்தனாகிய சிறந்த குணங்கள் நிறைந்த பரமேச்வரனைப் போற்றுவதால் மோக்ஷ ஸாம்ராஜ்யத்தைப் பெறலாம். அவ்வாறு விளங்கும் பரமேச்வரனை நாம் வணங்குவோமாக. (1)

कालभीतविप्रबालपाल ते नमः शिवाय
शूलभिन्नदुष्टदक्षफाल ते नमः शिवाय ।
मूलकारणाय कालकाल ते नमः शिवाय
पालयाधुना दयालवाल ते नमः शिवाय ॥ २ ॥

காலபீத விப்ரபால பால தே நம: ஶிவாய
ஶூலபிந்ந துஷ்டதக்ஷ பால தே நம: ஶிவாய ।
மூலகாரணாய கால கால தே நம: ஶிவாய
பாலயாதுநா தயாலவால தே நம: ஶிவாய ॥

**कालभीत**-யமனைக்கண்டு பயந்த **विप्रबाल**-அந்தண குமாரனாகிய மார்க்கண்டேயனை **पाल**-காத்தருளியவனே **शिवाय**-சிவபெருமானாகிய **ते**-உனக்கு **नमः**-வணக்கம். **शूल**-த்ரிசூலம் என்ற ஆயுதத்தால் **भिन्न**-பிளக்கப்பட்ட **दुष्ट**-துஷ்டனான **दक्ष**-தக்ஷனுடைய **फाल**-நெற்றியையுடையவனே **शिवाय**-சிவபெருமானாகிய **ते**-உனக்கு **नमः**- வணக்கம். **कालकाल**-யமனை மாய்த்தவனே **मूलकारणाय**-எல்லாவற்றிற்கும் ஆதிகாரணமாய் விளங்குகின்ற **शिवाय**-சிவபெருமானாகிய **ते**-உனக்கு **नमः**-வணக்கம். **दयालवाल**-தயவின் இருப்பிடமே **अधुना**-இப்பொழுது **पालय**-காத்தருள். **शिवाय**-சிவபெருமானாகிய **ते**-உனக்கு **नमः**-வணக்கம்.

இங்கு பரமேச்வரன் தன்னுடைய பக்தர்களுக்கு எவ்விதம் அருள்புரிகின்றார் என்று விளக்கப்பட்டிருக்கின்றது. மார்க்கண்டேயன் என்ற முனிகுமாரன் பரமேச்வரன் பால் பக்தி கொண்டு பரமேச்வரனைப் பூஜித்து வந்தான். அவனது அந்தியகாலத்தில் யமன் அவனுடைய உயிரை அபஹரிக்க எண்ணித்தானே மார்க்கண்டேயனிடம் சென்று அவன்மீது தனது பாசத்தைப்போட்டான். அதைக்கண்டு பயந்த மார்க்கண்டேயன் சிவலிங்கத்தை இறுகத் தழுவிக் கொள்ள காலனும் கர்வங்கொண்டு சிவலிங்கத்தையும் சேர்த்துப் பாசத்தால் கட்டி இழுக்கப் பரமேச்வரன் சினம்

கொண்டு உக்ரரூபத்துடன் அதிலிருந்து தோன்றிக்காலனை மாய்த்துத் தனது பக்தனுகிய மார்க்கண்டேயனைக்காத்து அருளினுன். இதனுல் பரமேச்வரனிடம் மிகுந்த பக்தியுள்ள வர்களுக்கு யமபாதை ஏற்படாது என்பது தெளிவு. கர்வங் கொண்டவர்களின் கர்வத்தைப் பரமேச்வரன் ஒடுக்கு கின்றுன் என்பதற்குத் தக்ஷனுடைய கதை இங்கு கூறப் பட்டுள்ளது. தக்ஷன் கர்வத்தால் பரமேச்வரனை அழைக் காமல் ஓர் யாகத்தை ஆரம்பித்தான். அதற்கு பரமேச்வரன் செல்லவில்லை. ஆனுல் பரமேச்வரனுடைய பத்னியான தக்ஷனுடைய பெண் தன் தகப்பன் செய்யும் யாகத்தைக் காண ஆவல் கொண்டவளாய் அங்கு செல்ல தக்ஷனும் சிவனை இழிவாகப்பேசி அவமதித்தான். அதனுல் கோபங் கொண்ட அவள் தன் யோகபலத்தால் அக்நியை மூட்டித் தன்னுடைய உடலை எரித்து அழித்தாள். அதுகேட்ட சிவ பெருமான் மிகுந்த கோபங்கொண்டவனுய்த் தக்ஷனுடைய யாகத்தை அழித்து அவனையும் ஒழித்தான். அப்பரமேச் வரனே உலகங்களுக்கு எல்லாம் ஆதிகாரணம். அவனிட மிருந்தே சகல சராசரங்களும் உண்டாகியிருக்கின்றன. இதையே यतो वा इमानि भूतानि जायन्ते என்ற ச்ருதியும் காட்டு கின்றது. அப்பரமேச்வரனே தயவின் உறைவிடம். ஆதலால் அவன் பக்தர்களிடம் தயவுகூர்ந்து அவர்களைக் காக்கின்றுன். அவ்வாறு விளங்கும் பரமேச்வரனை நாம் வணங்குவோமாக. (2)

**इष्टवस्तुमुख्यदानहेतवे नमः शिवाय**
**दुष्टदैत्यवंशधूमकेतवे नमः शिवाय ।**
**सृष्टिरक्षणाय धर्मसेतवे नमः शिवाय**
**अष्टमूर्तये वृषेन्द्रकेतवे नमः शिवाय ॥ ३ ॥**

**இஷ்டவஸ்து முக்யதான ஹேதவே நம: ஶிவாய**
**துஷ்டதைத்ய வம்ஶ தூமகேதவே நம: ஶிவாய ।**

ஸ்ருஷ்டி ரக்ஷணய தர்ம ஸேதவே நமః ஶிவாய
அஷ்ட மூர்த்தயே வ்ருஷேந்த்ர கேதவே
நமః ஶிவாய ॥

**इष्टवस्तु**-நமக்குகந்த பொருளையே **मुख्यदान**-சிறந்த தானமாகக் கொடுப்பதற்கு **हेतवे**-காரணபூதமான **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம். **दुष्ट**-கொடிய **दैत्य**-அரக்கர்களுடைய **वंश**-குலத்திற்கு **धूमकेतवे**-வால் நக்ஷத்திரமாகத் தோன்றும் **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம். **सृष्टिरक्षणाय**-படைத்த ஜீவராசிகளைக் காக்கின்றவனும் **धर्मसेतवे**-அறத்தின் அணையாயும் விளங்கும் **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம். **अष्टमूर्तये**-எட்டு சரீரங்களை உடையவனும் **वृषेन्द्रकेतवे**-சிறந்த காளையைக் கொடியாகக்கொண்டவனுமான **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம்.

சிவபெருமான் நமக்கு வேண்டிய வரங்களையே தந்தருள்கிறான். அவன் கர்வங்கொண்ட அரக்கர்களனைவரையும் அழித்து ஜீவராசிகளனைத்தையும் காத்தருள்கிறான். அணையானது நீரைத்தேக்கி அதன் மூலம் நாட்டைச் செழிப்படையச்செய்வதுபோல சிவனும் தர்மத்தை நிலைநிறுத்தி உலகைக் காக்கிறான். அவனே **भूरम्भांस्यनलोऽनिलोऽम्बरमहर्नाथो हिमांशुः पुमान्** பிருதிவி, ஜலம், தேஜஸ், வாயு, ஆகாசம், ஸூர்யன், சந்திரன், புருஷன் என எட்டு ரூபங்களையுடையவனாகத் திகழ்கிறான். அதாவது உலகமெல்லாம் அவன் சரீரமே. அவனுடைய கொடி சிறந்த விருஷபத்தை அடையாளமாகக் கொண்டுள்ளது. அவ்வாறு விளங்கும் சிவபெருமானுக்கு வணக்கம்.

இங்கு **दुष्टदैत्यवंशधूमकेतवे** என்ற சொல் மிகவும் அழகாக அமைந்திருக்கிறது. வம்ச பதத்திற்கு இரு பொருள்கள். குலம் என்பது ஒன்று. மூங்கில் என்பது மற்றொன்று. அது போலவே **धूमकेतु** என்பது வால் நக்ஷத்திரத்தையும் புகை

யைக் கொடியாகக் கொண்ட அக்நியையும் குறிப்பிடுகிறது. ஆகையால் இங்கு மூங்கில் காட்டை அழிக்கும் அக்நிபோல் காண்பவனென்ற த்வனிப் பொருள் அடங்கியிருக்கிறது. இப்பொருள் சொல்லின் சக்தியையண்டிவருவதால் இதற்கு **शब्दशक्तिमूलध्वनि** என்று பெயர். இதனால் உவமையணியும் வ்யங்க்ய ரூபமாக வெளிப்படுகிறது. எவ்வாறு ஸர்வ சக்தி வாய்ந்த காட்டுத்தீ மூங்கில் கூட்டத்தை எரித்துச் சாம்ப லாக ஆக்கிவிடுகிறதோ அதுபோலவே சிறந்த வன்மை வாய்ந்த பரமேச்வரன் கொடிய அரக்கர்களின் வம்சத்தை அழிக்கிறனென்பது இங்கு நன்கு காட்டப்படுகிறது. (3)

**आपदद्रिभेदटङ्कहस्त ते नमः शिवाय**
**पापहारिदिव्यसिन्धुमस्त ते नमः शिवाय ।**
**पापदारिणे लसन्नमस्तते नमः शिवाय**
**शापदोषखण्डनप्रशस्त ते नमः शिवाय ॥ ४ ॥**

ஆபத்த்ரி பேத டங்க ஹஸ்த தே நம: ஶிவாய
பாபஹாரி திவ்ய ஸிந்து மஸ்த தே நம: ஶிவாய ।
பாபதாரிணே லஸந்நமஸ்ததே நம: ஶிவாய
ஶாபதோஷ கண்டன ப்ரஶஸ்த தே நம: ஶிவாய॥

**आपदद्रि** - விபத்துக்களாகிய மலைகளை **भेद**-பிளக்கின்ற **टङ्क**-உளியை **हस्त**-கையில் உடையவனே **शिवाय**-சிவ பெருமானாகிய **ते** உனக்கு **नमः**-வணக்கம். **पापहारि**-பாபங் களைப்போக்குகின்ற **दिव्यसिन्धु**-கங்கையை **मस्त**-தலையில் உடையவனே **शिवाय**-சிவபெருமானாகிய **ते**-உனக்கு **नमः**-வணக்கம். **लसन्नमस्तते**-மிளிர்கின்ற வணக்கங்களின் கூட்டத்தையுடையவனே **पापदारिणे**-பாபங்களைப் பிளக்கின்ற **शिवाय**-சிவபெருமானான உனக்கு **नमः**-வணக்கம். **शापदोष-खण्डन**-சாபங்களின் தோஷங்களைக் களைவதில் **प्रशस्त**-புகழ் பெற்றவனே **शिवाय**-சிவபெருமானான **ते**-உமக்கு **नमः**-வணக்கம்.

நமக்கு நேரிடும் ஆபத்துக்கள் அனைத்தும் பெரிய மலைகளைப்போன்றவைகள். அவைகளனைத்தையும் சிவ பெருமான் தனது கூரிய த்ரிசூலத்தால் பிளந்து நம்மனை வரையும் காக்கின்முன். பாவங்களையெல்லாம் தீர்த்து நம்மைப் புனிதமாக்கும் கங்காதேவியை அவன் தன்னுடைய சடையில் தாங்கி நிற்கின்முன். அவனே நமது பாவங்களைத் தீர்த்து நம்மை புனிதர்களாகச் செய்கின்முன். அவனது திருவடிகளை பக்தர்கள் பணிவதால் அவன் மகிழ்ச்சியுடன் காட்சியளிக்கின்முன். தக்ஷப்ரஜாபதியின் ஆணையைமீறி அவன் பெண்களான நக்ஷத்திரக் கன்னிகைகளிடம் ஸம மான அன்பு வைக்காமல் ரோகிணியிடம் அதிகப் பிரியம் காட்டின சந்திரனுக்கு கலைகள் குறைந்துபோகும்படி சாபம் கொடுத்தான். இந்த சாபதோஷத்தை நீக்கி இந்த சந்திரனைத் தன் சிரஸில் வைத்துக்கொண்டதுடன் கலைகள் வளரும்படியும் அருள்செய்தான். நாமும் அவர் அருள் பெற்முல் எல்லா சாபதோஷங்களும் நீங்கும். இவ்வாறு விளங்கும் சிவபெருமானுடைய திருவடிகளை நாம் வணங்குவோமாக. (4)

व्योमकेश दिव्यभव्यरूप ते नमः शिवाय
हेममेदिनीधरेन्द्रचाप ते नमः शिवाय ।
नाममात्रदग्धसर्वपाप ते नमः शिवाय
कामनैकतानहृद्दुराप ते नमः शिवाय ॥ ५ ॥

வ்யோமகேஶ திவ்ய பவ்யரூப தே நம: சிவாய
ஹேமமேதிநீ தரேந்த்ர சாப தே நம: சிவாய ।
நாமமாத்ர தக்த ஸர்வ பாப தே நம: சிவாய
காமனைகதாந ஹ்ருத்துராப தே நம: சிவாய ॥

व्योमकेश–ஆகாசத்தைப்போல் விரிந்த கேசங்களை யுடையவனே दिव्यभव्यरूप–திவ்யமாயும் மங்களமாயும் உள்ள உருவத்தையுடையவனே शिवाय–சிவபெருமானுன ஸ்-

உனக்கு **नमः**–வணக்கம். **हेममेदिनीधरेन्द्र**-தங்க மலையான மேருவை **चाप**–வில்லாகக்கொண்டவனே **शिवाय**–சிவபெருமானை **ते**-உனக்கு **नमः**–வணக்கம். **नाममात्र**–திருநாமத்தினலேயே **दग्ध**-எரிக்கப்பட்ட **सर्वपाप**-எல்லாப்பாவங்களையுமுடையவனே **शिवाय**–சிவபெருமானை **ते**–உனக்கு **नमः**–வணக்கம். **कामनैकतानहृत्** –காமங்களிலேயே எப்பொழுதும் ஈடுபட்ட மனமுள்ளவர்களால் **दुराप**-அடைய முடியாதவனே **शिवाय**–சிவபெருமானை **ते**–உமக்கு **नमः**–வணக்கம்.

கங்கையைத் தன்னுடைய சடையில் தாங்குவதற்காக சிவபெருமான் தன் சடையை விரிக்க அதுவும் ஆகாயம் முழுவதையும் அளாவி நின்றது. ஆகாசம் முழுவதும் வ்யாபித்து நிற்கும் சடையை தரித்துக்கொண்டிருப்பதால் அப்பெருமானுக்கு வ்யோமகேசர் என்ற பெயர் வழங்கலாயிற்று. மேலும் சிவபெருமான் தன்னுடைய விராட்ரூபத்தை எடுக்கும்பொழுது ஆகாசமே அவருடைய கேசங்களாக ஆயிற்று. ஆதலால் அவனுக்கு வ்யோமகேசன் என்ற பெயர் உண்டாயிற்று என்றும் கூறலாம். அவன் திவ்ய மங்கள விக்ரஹத்தையுடையவன். அவனது தோற்றம் பக்தர்களுக்கு மிகுந்த ஆனந்தத்தை தருகின்றது. அவன் ஸர்வ சக்தி வாய்ந்தவன் அசுரர்களை அழிப்பதற்கு மேரு மலையை வில்லாக ஏந்தியவன். அவனுடைய திருநாமங்களை உச்சரித்தமாத்திரத்திலேயே எல்லாப் பாபங்களும் சாம்பலாக ஆகிவிடுகின்றன. ஆனல் பரிசுத்தமான மனது உடையவர்களே அவனை ஸாக்ஷாத்கரிக்க முடியும். ஏனென்னில் மனதில் பலவிதமான ஆசைகளையுடையவர்களுக்கு முன் அவன் தோன்றமாட்டான். இவ்வாறு விளங்கும் சிவபெருமானுடைய திருவடிகளை நாம் வணங்குவோமாக.

(5)

**ब्रह्ममस्तकावलीनिबद्ध ते नमः शिवाय**

**जिह्मगेन्द्रकुण्डलप्रसिद्ध ते नमः शिवाय ।**

ब्रह्मणे प्रणीतवेदपद्धते नमः शिवाय
जिह्मकालदेहदत्तपद्धते नमः शिवाय ॥ ६ ॥

ப்ரஹ்ம மஸ்தகாவளீ நிபத்த தே நம: ஶிவாய
ஜிஹ்மகேந்த்ர குண்டல ப்ரஸித்த தே நம: ஶிவாய ।
ப்ரஹ்மணே ப்ரணீத வேத பத்ததே நம: ஶிவாய
ஜிஹ்ம கால தேஹ தத்த பத்ததே நம: ஶிவாய ॥

**ब्रह्म**—பிரம்மாக்களின் **मस्तकावली**—தலைகளின் வரிசைகளால் **निबद्ध**—கட்டப்பட்டவனே **शिवाय**—சிவபெருமானை **ते**—உனக்கு **नमः**—வணக்கம். **जिह्मगेन्द्र**—வளைந்து செல்கின்ற பாம்புகளை **कुण्डलप्रसिद्ध**—குண்டலமாக அணிவதால் புகழ் பெற்றவனே **शिवाय**—சிவபெருமானை **ते**—உனக்கு **नमः**—வணக்கம். **ब्रह्मणे**—ப்ரம்மாவிற்கு **प्रणीतवेदपद्धते**—வேத மார்க்கங்களை அருளியவனே **शिवाय**—சிவபெருமானை உனக்கு **नमः**—வணக்கம். **जिह्मकाल**—குடிலமான யமனுடைய **देह**—உடலில் **दत्त**—கொடுக்கப்பட்ட **पद्धते**—பாதப்ரஹாரத்தையுடையவனே **शिवाय**—சிவபெருமானை உனக்கு **नमः**—வணக்கம்.

சிருஷ்டிகர்த்தாவாக வந்து தன் ஆயுள் முடிந்து மறைந்துபோன எத்தனையோ ப்ரஹ்மாக்களின் மண்டை ஓடுகளை மாலையாக அணிந்துகொண்டிருக்கிறார். வளைந்து செல்லும் பாம்புகள் அவனுடைய காதணியாய் விளங்குகின்றன. அவர் ப்ரஹ்மாவை உண்டுபண்ணி அந்த பிரஹ்மா சிருஷ்டியை நடத்த வேதமார்க்கத்தை அவருக்கு அருளினார். **'यो ब्रह्माणं विदधाति पूर्वं यो वै वेदांश्च प्रहिणोति तस्मै ।'** கொடிய தன்மை வாய்ந்த காலனைக் காலால் உதைத்தவன். அவ்வாறு விளங்கும் சிவபெருமானுடைய திருவடிகளை வணங்குவோமாக.

இந்த சுலோகத்தில் **पद्धते** என்ற சொல் இரு தடவை உபயோகிக்கப்பட்டுள்ளது. அதனால் இங்கு **पुनरुक्त** அல்லது சொன்னதையே திரும்பச்சொல்லல் என்ற தோஷம்

ஏற்படுமோ என்ற ஐயம் உண்டாகலாம். ஆனால் இது வெவ்வேறு அர்த்தத்தில் உபயோகிக்கப்பட்டுள்ளது. **प्रणीतवद्दपद्धते** என்பதில் **पद्धति** என்பதற்கு வழி என்றும் **कालदेहदत्तपद्धते** என்பதில் **पद्धति** என்பதற்குக் காலால் உதைத்தல் என்றும் பொருள். ஆகையால் இங்கு **पुनरुक्ति** என்ற தோஷம் இல்லை. ஆனால் **पुनरुक्तवदाभास**மென்ற அணி அமைந்துள்ளது. (6)

**कामनाशनाय शुद्धकर्मणे नमः शिवाय**
**सामगानजायमानशर्मणे नमः शिवाय ।**
**हेमकान्तिचाकचक्यवर्मणे नमः शिवाय**
**सामजासुराङ्गलब्धचर्मणे नमः शिवाय ॥ ७ ॥**

காம நாஶநாய ஶுத்த கர்மணே நம: ஶிவாய
ஸாமகாந ஜாயமாந ஶர்மணே நம: ஶிவாய ।
ஹேமகாந்தி சாகசக்ய வர்மணே நம: ஶிவாய
ஸாமஜாஸுராங்க லப்த சர்மணே நம: ஶிவாய ॥

**कामनाशनाय**–மன்மதனை அழித்தவனும் **शुद्धकर्मणे**–தூய்மைவாய்ந்த செயல்களையுடையவனுமான **शिवाय**–சிவபெருமானுக்கு **नमः** - வணக்கம். **सामगान** – ஸாமவேதத்தை கானம் செய்வதால் **जायमान**-உண்டாகின்ற **शर्मणे**-இன்பத்தை யுடைய **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**–வணக்கம். **हेमकान्ति**-பொன்னின் ஒளியால் **चाकचक्य**–மின்னுகின்ற **वर्मणे**–கவசத்தையுடைய **शिवाय**–சிவபெருமானுக்கு **नमः**–வணக்கம் **सामजासुर**–கஜாஸுரனுடைய **अङ्ग**–அங்கத்திலிருந்து **लब्ध**–அடையப்பட்ட **चर्मणे**-தோலையுடைய **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம்.

சிவபெருமான் மன்மதனை எரித்தவர். அவ்வாறு இருப்பினும் உலகனைத்தையும் காப்பதான தூய்மை வாய்ந்த செயலிலேயே அவர் ஈடுபட்டுள்ளார். அவர் ஸாம கானத்தினால் மிகுந்த மகிழ்ச்சியையடைகிறார். அவர்

அணிந்திருக்கும் கவசம் பொன்மயமானது. அது ஒளியுடன் மின்னிக்கொண்டிருக்கின்றது. ஒருசமயம் அவர் கஜன் என்ற ஓர் அஸுரனைக்கொன்று அவனுடைய தோலையே தனக்கு ஆடையாகக் கொண்டார். அவ்வாறு விளங்கும் பரமேச்வரனுடைய திருவடிகளை நாம் வணங்குவோமாக.

जन्ममृत्युघोरदुःखहारिणे नमः शिवाय
चिन्मयैकरूपदेहधारिणे नमः शिवाय ।
मन्मनोरथावपूर्तिकारिणे नमः शिवाय
सन्मनोगताय कामवैरिणे नमः शिवाय ॥ ८ ॥

ஜந்ம ம்ருத்யு கோர துக்க ஹாரிணே நம: ஶிவாய
சிந்மயைகரூப தேஹ தாரிணே நம: ஶிவாய ।
மந்மநோரதாவபூர்த்தி காரிணே நம: ஶிவாய
ஸந்மநோகதாய காமவைரிணே நம: ஶிவாய ॥

जन्ममृत्युघोरदुःख- பிறப்பு இறப்பு இவைகளால் உண்டாகும் பயங்கரமான துன்பங்களை हारिणे-போக்குகின்ற शिवाय-சிவபெருமானுக்கு नमः-வணக்கம். चिन्मयैकरूप-சைதன்யம் ஒன்றையே ஸ்வரூபமாகக்கொண்ட देहधारिणे-சரீரத்தை தரிக்கும் शिवाय-சிவபெருமானுக்கு नमः-வணக்கம். मन्मनोरथावपूर्तिकारिणे-என்னுடைய அபீஷ்டங்களை நிறைவேற்றுகின்ற शिवाय-சிவபெருமானுக்கு नमः-வணக்கம். सन्मनोगताय-ஸாதுக்களின் மனதை அடைந்துள்ள कामवैरिणे-காமனின் பகைவனை शिवाय - சிவபெருமானுக்கு नमः - வணக்கம்.

சிவபெருமானைப் போற்றுகின்றவர்கள் மோக்ஷ ஸாம்ராஜ்யத்தையடைகிறார்கள். அதனால் அவர்களுக்கு மறுபடியும் பிறப்பு இறப்பு முதலான துன்பம் ஏற்படுவதில்லை. அவர் ஞான ஸ்வரூபி. அவரை யடைகின்றவர்கள் ஆத்ம ஞானத்தைப் பெறுகிறார்கள் ज्ञानादेव तु कैवल्यं என்பதால் அவர்களுக்கு ஞானமுண்டான உடனேயே ஸம்ஸாரபாதை நீங்கிவிடுகின்றது. ஞான ஒளியாய்த் தோன்றும் சிவபெரு

மான் மோக்ஷத்தைக் கொடுத்தபோதிலும் பக்தர்களின் மனோபீஷ்டங்களையும் நிறைவேற்றிவைக்கிறார். ஏனெனில் அவர் பக்தர்களின் மனதிலேயே வாஸம் செய்கின்றார் அவர் பக்தர்களின் மனதில் எழும் பல்வித ஆசைகளை அக்றறி அவர்களனைவருக்கும் அருள்புரிகிறார். அவ்வாறு விளங்கும் பரமசிவனை நாம் வணங்குவோமாக. (8)

यक्षराजबन्धवे दयालवे नमः शिवाय
दक्षपाणिशोभिकाञ्चनालवे नमः शिवाय ।
पक्षिराजवाहहृच्छयालवे नमः शिवाय
अक्षिफाल वेदपूततालवे नमः शिवाय ॥ ९ ॥

யக்ஷராஜ பந்தவே தயாலவே நம: ஶிவாய
தக்ஷபாணி ஶோபி காஞ்சனாலவே நம: ஶிவாய ।
பக்ஷிராஜ வாஹ ஹ்ருச்சயாலவே நம: ஶிவாய
அக்ஷிபால வேதபூத தாலவே நம: ஶிவாய ॥

**यक्षराज**–யக்ஷர்களுக்கரசனாகிய குபேரனுடைய **बन्धवे**-நண்பனும் **दयालवे**–கருணையுள்ளவனுமான **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம். **दक्षपाणि**-வலது கையில் **शोभि**-விளங்குகின்ற **काञ्चनालवे**-தங்கமயமான பாத்திரத்தை யுடைய **शिवाय**–சிவபெருமானுக்கு **नमः**வணக்கம். **पक्षिराज**-பக்ஷிகளுக்கு அரசனாகிய கருடனை **वाह**-வாஹனமாக உடைய மகாவிஷ்ணுவின் **हृच्छयालवे**-இருதயத்தில் பள்ளிகொண்டிருக்கும் **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம். **अक्षिफाल**-நெற்றியில் கண்ணையுடையவரே **वेदपूततालवे**-நான்மறைகளால் புனிதமான தாலுவையுடையவரான **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம்.

சிவபெருமான் யக்ஷராஜனான குபேரனுடைய நண்பர். ஆதலால் அவர் குபேரனுடைய பட்டினத்திற்கருகில் உள்ள கைலயங்கிரியில் வஸித்துவருகின்றார். கருணை உள்ளம் கொண்டவர். அவர் தன்னுடைய வலது கையில் தங்க

மயமான பாத்திரத்தை வைத்துக்கொண்டு இருக்கிறார். அவர் கருடவாஹனனான மஹாவிஷ்ணுவின் ஹ்ருதயகமலத்தில் வீற்றிருக்கின்றார். துஷ்டர்களை அழிப்பதற்காக அவர் நெற்றியில் கண் உள்ளவர். நான்மறைகளும் அவருடைய முகத்திலேயே எப்பொழுதும் இருப்பதால் அவர் மிகவும் பரிசுத்தமான முகத்தையுடையவர். அவ்வாறு பிரகாசிக்கும் சிவபெருமானை நாம் வணங்குவோமாக. (9)

**दक्षहस्तनिष्ठजातवेदसे नमः शिवाय**
**अक्षरात्मने नमद्बिडौजसे नमः शिवाय ।**
**दीक्षितप्रकाशितात्मतेजसे नमः शिवाय**
**उक्षराजवाह ते सतां गते नमः शिवाय ॥ १० ॥**

தக்ஷ ஹஸ்த நிஷ்ட ஜாதவேதஸே நம: ஶிவாய
அக்ஷராத்மநே நமத்பிடௌஜஸே நம: ஶிவாய ।
தீக்ஷித ப்ரகாஶிதாத்மதேஜஸே நம: ஶிவாய
உக்ஷராஜ வாஹ தே ஸதாம் கதே நம: ஶிவாய ॥

**दक्षहस्तनिष्ठ**-வலது கையிலுள்ள **जातवेदसे**-அக்னியையுடைய **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம். **अक्षरात्मने**-அகாரம் முதல் க்ஷகாரம் வரையிலுள்ள மாத்ருகாவர்ண ஸ்வரூபியாயும், அழிவற்ற ஸ்வரூபமுள்ளவராயும் **नमद्बिडौजसे**-வணங்குகின்ற இந்திரனை உடையவராயும் இருக்கின்ற **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம். **दीक्षितप्रकाशित**-தீக்ஷைபெற்றவர்களுக்கு வெளிப்படுத்தப்பட்ட **आत्मतेजसे**-தன்னுடைய ஜ்யோதிஸ்வரூபத்தையுடைய **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம். **उक्षराजवाह**-சிறந்த காளைமாட்டை வாஹனமாக உடையவரே **सतां**-நல்லவர்களுக்கு **गते**-புகலிடமாயிருப்பவரே! **शिवाय**-சிவபெருமானாகிய **ते**-உமக்கு **नमः**-வணக்கம்.

சிவபிரானுக்குத் தீங்கு செய்யக் கருதி தாருகாவன முனிவர்கள் ஆபிசார வேள்வியின் மூலம் அனுப்பிய

அக்னியைக் கையில் தாங்கி இருக்கிறார். தன் ஸ்வரூபத்திற்கு யாரும் தீங்கு செய்ய முடியாது என்பதை உலகிற்குக் காட்டுகிறார். அகாரம் முதல் க்ஷகாரம் வரையிலுள்ள எல்லா அக்ஷரங்களும் அவருடைய ஸ்வரூபங்கள். அவர் அழிவற்றவர். இந்திரன் முதலிய எல்லாத் தேவர்களாலும் வணங்கப்பட்டவர். சிவதீக்ஷை பெற்றவர்களுக்கு அவர் தன்னுடைய ரஹஸ்யமான ஜ்யோதி ஸ்வரூபத்தைக் காட்டுகின்றார். அவர் விருஷப வாஹனத்தின்மீது அமர்ந்து கொண்டிருக்கின்றார். நல்லவர்களால் அடையத்தக்கவர் அவர்தான். அவ்வாறு விளங்கும் சிவபெருமானுடைய திருவடிகளை நாம் அனைவரும் வணங்குவோமாக. (10)

**राजताचलेन्द्रसानुवासिने नमः शिवाय**
**राजमाननित्यमन्दहासिने नमः शिवाय ।**
**राजकोरकावतंसभासिने नमः शिवाय**
**राजराजमित्रताप्रकाशिने नमः शिवाय ॥ ११ ॥**

ராஜதாசலேந்த்ர ஸானு வாஸிநே நம: ஶிவாய
ராஜமாந நித்ய மந்தஹாஸிநே நம: ஶிவாய ।
ராஜகோரகாவதம்ஸ வாஸிநே நம: ஶிவாய
ராஜராஜ மித்ரதா ப்ரகாஶிநே நம: ஶிவாய ॥

**राजताचलेन्द्र**-வெள்ளிமலையினுடைய **सानु**-தாழ்வரையில் **वासिने**-வஸிக்கின்ற **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம். **राजमान**-விளங்குகின்ற **नित्यमन्दहासिने**-எப்பொழுதும் புன்சிரிப்பையுடைய **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம். **राजकोरकावतंसभासिने**-பிறைச் சந்திரனை சிரோபூஷணமாகக் கொண்டு விளங்கும் **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம். **राजराज**-குபேரனிடம் **मित्रता**-நட்பை **प्रकाशिने**-வெளிப்படுத்துகின்ற **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம்.

சிவபெருமான் வெள்ளி மலையான கைலயங்கிரியைத் தனது இருப்பிடமாகக் கொண்டுள்ளார். அவர் ஆனந்த

வஸ்துவாதலால் எப்பொழுதும் மலர்ந்த முகத்துடன் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றார். அவருடைய முகத்தில் புன்முறுவல் தவழுவதால் அது பக்தர்களைப் பரவசப் படுத்தக் கூடியதாகத் திகழ்கின்றது. சந்திரனை சிரஸில் பூஷணமாக அணிந்திருக்கின்றார். அவர் குபேரனுடைய நண்பன். ஆதலால் அவர் தன்னுடைய நட்பைக் காட்டு வதற்காக மற்ற இடங்களையெல்லாம் விடுத்துக் குபேர னுடைய இருப்பிடமாகிய கைலயங்கிரியையே அடைந்து அங்கு எப்பொழுதும் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றார். அவ்வாறு பக்தர்களுக்கு அநுக்ரஹம் செய்யத்தகுந்த கருணை மூர்த்தியான சிவபெருமானுடைய பாதபத்மங்களை நாம் என்றும் போற்றுவோமாக. (11)

दीनमानवालिकामधेनवे नमः शिवाय
सूनबाणदाहकृत्कृशानवे नमः शिवाय ।
स्वानुरागभक्तरत्नसानवे नमः शिवाय
दानवान्धकारचण्डभानवे नमः शिवाय ॥ १२ ॥

தீன மாநவாளி காமதேநவே நம: ஶிவாய
ஸூநபாண தாஹக்ருத் க்ருஶாநவே நம: ஶிவாய ।
ஸ்வாநுராக பக்த ரத்நஸாநவே நம: ஶிவாய
தானவாந்தகார சண்ட பாநவே நம: ஶிவாய ॥

**दीनमानवालि**–ஏழைகளான மனிதவர்கத்திற்கு **कामधेनवे**–மனோபீஷ்டங்களை நிறைவேற்றும் காமதேனுபோல் விளங் கும் **शिवाय**–சிவபெருமானுக்கு **नमः**–வணக்கம். **सूनबाण**–மலர்களை அம்புகளாக உடைய மன்மதனை **दाहकृत्**–எரிக் கின்ற **कृशानवे**–அக்நியான **शिवाय**–சிவபெருமானுக்கு **नमः**–வணக்கம். **स्वानुराग**–தன்னிடத்தில் அன்புகொண்ட **भक्त**–பக்தர்களுக்கு **रत्नसानवे** - மேருமலையாக இருக்கும் **शिवाय**–சிவபெருமானுக்கு **नमः**–வணக்கம். **दानवान्धकार**–தானவர் களாகிய இருட்டிற்கு **चण्डभानवे**–பிரசண்டமான சூரியனாக இருக்கும் **शिवाय**–சிவபெருமானுக்கு **नमः**–வணக்கம்.

பரமேச்வரன் காமதேனுவைப்போல் ஏழைகளின் மனோபீஷ்டங்கள் அனைத்தையும் நிறைவேற்றி அவர்களைக் காத்தருள்கிறான். அவன் புஷ்பங்களை அம்புகளாக உடைய மன்மதனை எரித்துச் சாம்பலாக்கினான். இதனால் அவனை அண்டும் பக்தர்கள் அனைவரும் ஆசாபாசங்களிலிருந்து விடுபட்டுத் தங்களுக்கு வேண்டிய நன்மைகளை அடைந்து கடைசியாக சிவஸாயுஜ்யத்தைப் பெறுகிறார்கள். பக்தர்கள் பக்தியுடன் பூஜிக்கும் நோக்கத்துடன் ஈசுவரன்பேரில் புஷ்பங்களைப் போடுகின்றனர். அவர்களுக்கு அவன் அருள் செய்கிறான். அதே புஷ்பங்களைக் கெட்ட எண்ணத்துடன் சிவன்மேல் விடுத்த காமனை நெற்றிக் கண்ணால் எரித்தான். இதிலிருந்து வெளிச் செயலைக் காட்டிலும் உள் எண்ணத்தைதான் அவன் கவனிப்பான் என்று தெரிகிறது. மேரு மலை போல் அவன் பக்தர்களுக்குச் செல்வத்தைக் கொடுக்கிறான். அவன் தானவர்கள் என்ற கார் இருளை நீக்கவல்ல மிகுந்த பிரகாசம் வாய்ந்த ஸூர்யபகவான். அதாவது ஸூர்யன் இருளை நீக்கி ஒளியைத் தந்து உலகைக் காப்பதுபோல் பரமேச்வரனும் துஷ்டர்களை அழித்து அனைவரையும் ரக்ஷிக்கின்றான். இவ்வாறு விளங்கும் பரமேச்வரனுடைய பாத கமலங்களில் நாம் பணிவோமாக. (12)

सर्वमङ्गलाकुचाग्रशायिने नमः शिवाय
सर्वदेवतागणातिशायिने नमः शिवाय ।
पूर्वदेवनाशसंविधायिने नमः शिवाय
सर्वमन्मनोजभङ्गदायिने नमः शिवाय ॥ १३ ॥

ஸர்வமங்களா குசாக்ர ஶாயிநே நம: ஶிவாய
ஸர்வ தேவதா கணாதி ஶாயிநே நம: ஶிவாய ।
பூர்வதேவ நாஶ ஸம்விதாயிநே நம: ஶிவாய
ஸர்வ மந்மநோஜ பங்க தாயிநே நம: ஶிவாய ॥

**सर्वमङ्गला**—பார்வதீ தேவியினுடைய **कुचाग्र**—ஸ்தனங்களின் மேல் **शायिने**—பள்ளிகொண்டிருப்பவரான **शिवाय**—சிவ

பெருமானுக்கு **नमः**—வணக்கம். **सर्वदेवतागण**—எல்லாத் தேவதைகளின் கூட்டங்களைக் காட்டிலும் **अतिशायिने**—சிறந்து விளங்கும் **शिवाय**—சிவபெருமானுக்கு **नमः**—வணக்கம். **पूर्वदेव**—அஸுரர்களுடைய **नाश**—அழிவை **संविधायिने**—நன்கு செய்தவரான **शिवाय**—சிவபெருமானுக்கு **नमः**—வணக்கம். **सर्व-मन्मनोज**—என் மனதில் எழும் எல்லாக் காமங்களுக்கும் **भङ्ग-दायिने**—முறிவைச் செய்கின்ற **शिवाय**—சிவபெருமானுக்கு **नमः**—வணக்கம்.

பரமேச்வரன் தன் பார்யையான பார்வதீ தேவியுடன் இணை பிரியாது இருப்பவர். அவரே எல்லாத் தேவதைகளைக் காட்டிலும் சிறந்து விளங்குகின்றவர். இன்னல்களை விளைவிக்கும் அஸுரக் கூட்டங்களை யெல்லாம் அழித்து உலகங்களைக் காக்கின்றவர். என் மனதில் எழும் எல்லாத் துராசைகளையும் அழித்து பரிசுத்தமாக்குபவர். அவ்வாறு சிறந்து விளங்கும் அம்பிகாபதியான பரமேச்வரனுடைய பாத கமலங்களை நாம் வணங்குவோமாக. (13)

**स्तोकभक्तितोऽपि भक्तपोषिणे नमः शिवाय**
**माकरन्दसारवर्षिभाषिणे नमः शिवाय ।**
**एकबिल्वदानतोऽपि तोषिणे नमः शिवाय**
**नैकजन्मपापजालशोषिणे नमः शिवाय ॥ १४ ॥**

ஸ்தோக பக்திதோऽபி பக்த போஷிணே நம: ஶிவாய
மாகரந்த ஸார வர்ஷி பாஷிணே நம: ஶிவாய ।
ஏக பில்வ தானதோऽபி தோஷிணே நம: ஶிவாய
நைகஜந்ம பாபஜால ஶோஷிணே நம: ஶிவாய ॥

**स्तोकभक्तितोऽपि**—சிறிது பக்தியால்கூட **भक्तपोषिणे**=பக்தர்களைக் காப்பாற்றி வளர்க்கின்ற **शिवाय**—சிவபெருமானுக்கு **नमः**—வணக்கம். **माकरन्दसारवर्षि**—தேனின் இனிமையைப் போன்ற இனிமையைப் பொழியும்படியாக **भाषिणे**—பேசுகின்ற **शिवाय**—சிவபெருமானுக்கு **नमः**—வணக்கம். **एकबिल्व-दानतः अपि**—ஒரு பில்வதளத்தை அர்பணம் செய்வதால்கூட

**तोषिणे**-மகிழ்ச்சியடைகின்ற **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம். **नैकजन्मपापजाल**-பல பிறவிகளில் சேமித்து வைக்கப்பட்ட பாபக்கூட்டங்களை **शोषिणे**-நாசம் செய்கின்ற **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம்.

சிவபெருமான் பக்தர்களிடம் மிகவும் பிரியமுள்ளவர். பக்தியின் ஆரம்பதசையில் இருப்பவர்களையும் தன் அருளால் மேலும் பக்தியை வளரச்செய்து காப்பாற்றுபவர். பாலுக்காக உபமன்யு என்னும் சிறுவன் காட்டிய பக்திக்குக் கட்டுப்பட்டு பாற்கடலை அருளியவர். அவர் பக்தர்களுக்கு அருள்புரிவதற்காக அவர்கள் முன் தோன்றித் தனது இனிய மொழிகளால் அவர்களை மகிழ்விக்கின்றார். பக்தர்களுக்கு அடிமையான பரமேச்வரனுடைய அருளைப் பெறுவது மிகவும் சுலபம். அவரிடம் உண்மையான பக்தி வைத்து ஓர் பில்வதளத்தை அவருக்கு அர்ப்பணம் செய்தால்கூட உடனே அவர் அளவற்ற மகிழ்ச்சியுடன் அதை ஏற்றுக் கொள்வார். ஈசுவரனுக்கு **आशुतोषी** என்று ஒரு பெயர் உண்டு. வெகு விரைவில் ஸந்தோஷம் அடைபவர் என்பது இதன் பொருள். பக்தியுடன் ஓர் பில்வதளத்தை அர்ப்பணம்செய்த ஒரு பக்தன் நேரில் காக்ஷிகொடுத்த பகவானிடம் கைலாஸ லோகத்தை அடையவேண்டும் என்று வரம் கேட்டு அதை அடைந்து, ஒரு பில்வதளத்தால் கைலாஸத்தை விலைக்கு வாங்கி ஈசுவரனை ஏமாற்றிவிட்டதாக நினைக்கின்றான். மஹேச்வரரோ இந்தப் பக்தனுக்கு என் ஸாரூப்ய முக்தியைக் கொடுக்கவிருந்தும் இவன் இதை கேட்கத் தெரியாமல் ஏமாந்துவிட்டதாக நினைக்கிறார். பரமேச்வரன் அவர்கள் பற்பல பிறவிகளில் சேர்த்துவைத்த பாபங்கள் அனைத்தையும் எரித்துச் சாம்பலாக்கி அவர்களைப் புனிதர்களாகச் செய்கின்றார். இவ்வாறு சிறந்து விளங்கும் பரமேச்வரனை வணங்குவோமாக. (14)

**सर्वजीवरक्षणैकशीलिने नमः शिवाय**
**पार्वतीप्रियाय भक्तपालिने नमः शिवाय ।**

दुर्विदग्धदैत्यसैन्यदारिणे नमः शिवाय
शर्वरीशधारिणे कपालिने नमः शिवाय ॥ १५ ॥

ஸர்வ ஜீவ ரக்ஷணைக ஶீலிநே நம: ஶிவாய
பார்வதீ ப்ரியாய பக்த பாலிநே நம: ஶிவாய ।
துர்விதக்த தைத்ய ஸைந்ய தாரிணே நம: ஶிவாய
ஶர்வரீஶ தாரிணே கபாலிநே நம: ஶிவாய ॥

**सर्वजीव**—எல்லா ஜீவர்களையும் **रक्षण**—காப்பாற்றுவதான **एकशीलिने**-ஓர் சிறந்த ஸ்வபாவத்தையுடைய **शिवाय**—சிவ பெருமானுக்கு **नमः**—வணக்கம். **पार्वतीप्रियाय**—மலையரசனின் பெண்ணான பார்வதீ தேவியிடம் பிரியமுள்ளவனும் **भक्त-पालिने**—பக்தர்களைக் காப்பாற்றுகின்றவனுமான **शिवाय**—சிவ பெருமானுக்கு **नमः**—வணக்கம். **दुर्विदग्ध**—கர்வங்கொண்ட **दैत्यसैन्य**-அரக்கர்களின் படையை **दारिणे**—பிளக்கின்ற **शिवाय**—சிவபெருமானுக்கு **नमः**—வணக்கம். **शर्वरीश**—சந்திரனை **धारिणे**—தன் ஜடையில் அணிந்திருக்கின்றவனும் **कपालिने**—மண்டையோட்டையுடையவனுமான **शिवाय**—சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம்.

சிவபெருமான் உலகிலுள்ள ஜீவராசிகளையெல்லாம் காப்பாற்றும் தன்மை வாய்ந்தவர். மலையரசனின் மகளான பார்வதீ தேவியிடம் மிகுந்த பிரியத்தை வைத்திருப்பவர். அவர் பக்தர்கள் அனைவரையும் ரக்ஷிக்கின்றார். அவர் கர்வமுள்ள அரக்கர்களின் ஸைன்யங்களை அழித்துவிடுகின்றார். இவ்வாறு துஷ்டர்களை நிக்ரஹம் செய்து சிஷ்டர்களைக் காக்கும் பரமேச்வரனை நாம் வணங்குவோமாக. (15)

पाहि मामुमामनोज्ञदेह ते नमः शिवाय
देहि मे वरं सिताद्रिगेह ते नमः शिवाय ।
मोहितर्षिकामिनीसमूह ते नमः शिवाय
स्वेहितप्रसन्न कामदोह ते नमः शिवाय ॥ १६ ॥

பாஹி மாமுமாமநோக்ஞதேஹ தே நம: ஶிவாய
தேஹி மே வரம் ஸிதாத்ரிகேஹ தே நம: ஶிவாய
மோஹிதர்ஷிகாமிநீஸமூஹ தே நம: ஶிவாய
ஸ்வேஹிதப்ரஸந்ந காமதோஹ தே நம: ஶிவாய ॥

**उमामनोज्ञदेह**–பார்வதீ தேவியின் மனதை வசீகரிக்கின்ற சரீரத்தையுடையவனே **मां**–என்னை **पाहि**-காப்பாற்று. **शिवाय**–சிவபெருமானுகிய **ते**–உனக்கு **नमः**–வணக்கம். **सिताद्रिगेह**–வெண்ணிறமுள்ள வெள்ளிமலையை வீடாக உடையவனே **मे**–எனக்கு **वरं**–வரனை **देहि**–கொடு. **शिवाय**–சிவபெருமானுகிய **ते**–உனக்கு **नमः**-வணக்கம். **मोहित**–மோஹமடையும்படி செய்யப்பட்ட **ऋषिकामिनीसमूह**–ரிஷி பத்னிகளின் கூட்டத்தையுடையவனே **शिवाय**–சிவபெருமானுகிய **ते**–உனக்கு **नमः**-வணக்கம். **स्वहितप्रसन्न**–தனக்குப் பிரியமானவர்களிடம் மகிழ்ச்சியடைகின்றவனே **कामदोह**–மனோபீஷ்டங்களை நிறைவேற்றுகின்றவனே **शिवाय**–சிவ பெருமானுகிய **ते**–உனக்கு **नमः**–வணக்கம்.

சிவபெருமான் சிறந்த அழகுவாய்ந்தவன். அவனுடைய அழகினுல் மயங்கிய மலைமகள் தன் தாயால் "குழந்தாய் வேண்டாம் **उ मा**" என்று தபஸ் செய்வதிலிருந்து தடுக்கப்பட்டும் அப்பரமேச்வரனையே தனது பதியாகப் பெறக் கருதிக் கடுந்தவம் செய்தனள். அவன் வெள்ளி மலையில் வஸித்துவருகின்றுன். கடவுளை மறந்து கர்மபாசத்தில் சிக்கி செருக்குற்ற தாருகாவன முனிவர்களை சிக்ஷிக்க ஒருசமயம் அப்பெருமான் திகம்பரனுகத் தன் கையில் மண்டையோட்டை ஏந்தி பிக்ஷாடனத்திற்காக அம்முனிவர்கள் வஸித்துவரும் கானகத்தையடைந்தான். அவ்வமயம் அவரது திருமேனியின் அழகைக் கண்டு ரிஷி பத்னிகள் அனைவரும் மோஹமடைந்தனர். ஈசுவரனுடைய அருள் இல்லாவிடில் காமத்தை வெல்லமுடியாது. சிவபெருமான் தன் பக்தர்கள் முன் பிரஸன்னமாகி அவர்களுக்கு வேண்டிய வரங்களைத் தந்து அவர்களைக்

காக்கின்றார். இவ்வாறு விளங்கும் பரமேச்வரனை நாம் வணங்குவோமாக. (16)

मङ्गलप्रदाय गोतुरंग ते नमः शिवाय
गङ्गया तरङ्गितोत्तमाङ्ग ते नमः शिवाय ।
सङ्गरप्रवृत्तवैरिभङ्ग ते नमः शिवाय
अङ्गजारये करेकुरङ्ग ते नमः शिवाय ॥ १७ ॥

மங்கள ப்ரதாய கோதுரங்க தே நம: ஶிவாய
கங்கயா தரங்கிதோத்தமாங்க தே நம: ஶிவாய ।
ஸங்கர ப்ரவ்ருத்த வைரி பங்க தே நம: ஶிவாய
அங்கஜாரயே கரேகுரங்க தே நம: ஶிவாய ॥

**गोतुरङ्ग**-காளைமாட்டை வாஹனமாக உடையவனே **मङ्गलप्रदाय**-மங்களங்களையளிக்கின்ற **शिवाय**-சிவபெருமானாகிய **ते**-உனக்கு **नमः**-வணக்கம். **गङ्गया**-கங்கையினால் **तरङ्गित**-அலைகளுடன் கூடிய **उत्तमाङ्ग**-தலையையுடையவனே **शिवाय**-சிவபெருமானான **ते**-உனக்கு **नमः**-வணக்கம். **सङ्गरप्रवृत्त**-சண்டை செய்வதில் ஈடுபட்ட **वैरिभङ्ग**-பகைவர்களை முறியடிப்பவனே **शिवाय**-சிவபெருமானான **ते**-உனக்கு **नमः**-வணக்கம். **करेकुरङ्ग**-கையில் மானை வைத்துக்கொண்டிருப்பவனே **अङ्गजारये**-மன்மதனுடைய பகைவனான **शिवाय**-சிவபெருமானாகிய **ते**-உனக்கு **नमः**-வணக்கம்.

சிவபெருமான் தன்னுடைய வாஹனமான காளைமீது ஏறிக்கொண்டு பக்தர்களுக்கு எல்லா மங்களங்களையும் கொடுக்கின்றான். அவன் தன்னுடைய விரிந்த செஞ்சடையால் கங்கையைத் தாங்கிக்கொண்டிருக்கிறான். கங்கையின் அலைகள் அவனுடைய தலையில் எழுவதால் அவன் பார்ப்பதற்கு மிகவும் மனோகரமாகத் தோன்றுகின்றான். அவன் தன்னுடன் போர் புரிவதில் ஈடுபட்ட பகைவர்களையெல்லாம் முறியடித்துவிடுகின்றான். தன்னுடைய ஸமாதி நிலையைக் கலைக்கவந்த காமனைத்

தனது நெற்றிக்கண்ணிலிருந்து எழும்பிய தீக்கனல்களால் அவன் சுட்டுச் சாம்பலாக்கின்றான். தாருகாவனத்து முனிவர்கள் ஆபிசார ஹோமம் செய்து அக்னியிலிருந்து கிளம்பிய மானை சிவனிடம் அனுப்ப உலகினருக்குத் தம் வலிமையைக் காட்ட அம்மானையே பிடித்துக் கையில் வைத்திருக்கின்றார். இவ்வாறு விளங்கும் பரமேச்வரனை நாம் வணங்குவோமாக. (17)

**ईहितक्षणप्रदानहेतवे नमः शिवाय**
**आहिताग्निपालकोक्षकेतवे नमः शिवाय ।**
**देहकान्तिधूतरौप्यधातवे नमः शिवाय**
**गेहदुःखपुञ्जधूमकेतवे नमः शिवाय ॥ १८ ॥**

ஈஹித க்ஷண ப்ரதான ஹேதவே நம: ஶிவாய
ஆஹிதாக்நி பாலகோக்ஷகேதவே நம: ஶிவாய
தேஹகாந்தி தூத ரௌப்ய தாதவே நம: ஶிவாய
கேஹ துக்க புஞ்ஜ தூமகேதவே நம: ஶிவாய ॥

**ईहितक्षण**-விரும்பியகணத்திலேயே **प्रदान**-கொடுப்பதற்கு **हेतवे**-காரணமான **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம். **आहिताग्निपालक**-அக்நிஹோத்ரம் செய்கின்றவர்களைக் காப்பவனே! **उक्षकेतवे**-விருஷபக்கொடியோனாகிய **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம். **देहकान्ति**-தன்னுடைய உடலின் ஒளியால் **धूत**-நிராகரிக்கப்பட்ட **रौप्यधातवे**-வெள்ளியெனும் மூலப்பொருளையுடைய **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம். **गेह**-வீட்டின் **दुःखपुञ्ज**-துன்பக் களஞ்சியத்திற்கு **धूमकेतवे**-வால் நக்ஷத்திரமான **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம்.

சிவபெருமான் நாம் வேண்டும் பொருளை உடனேயே தந்து நம்மை மகிழ்விக்கின்றார். அவர் வேதத்தில் கூறப்பட்டபடி அக்னிஹோத்ரம், யஜ்ஞம் முதலிய கர்மாக்களை செய்பவருக்கு அருள்புரிகின்றார். அவர் விருஷபத்தைத்

தன்னுடைய கொடியின் சின்னமாக வைத்துக்கொண்டிருக்கின்றார். வெண்மையான அவருடைய உடலின் ஒளியில் வெள்ளியின் ஒளி குன்றிவிடுகின்றது. அப்பெருமான் இல்லற வாழ்க்கையில் நமக்கு ஏற்படும் இன்னல்கள் எல்லாவற்றையும் நீக்கி நமக்கு வேண்டிய உதவிகளைச் செய்து நம்மை ரக்ஷிக்கின்றார். அவ்வாறு நமக்குப் பற்பல நன்மைகளைச் செய்கின்ற பரமேச்வரனை நாம் வணங்குவோமாக. (18)

त्र्यक्ष दीनसत्कृपाकटाक्ष ते नमः शिवाय
दक्षसप्ततन्तुनाशदक्ष ते नमः शिवाय ।
ऋक्षराजभानुपावकाक्ष ते नमः शिवाय
रक्ष मां प्रपन्नमात्ररक्ष ते नमः शिवाय ॥ १९ ॥

த்ர்யக்ஷ தீந ஸத்க்ருபா கடாக்ஷ தே நம: ஶிவாய
தக்ஷ ஸப்ததந்து நாசதக்ஷ தே நம: ஶிவாய ।
ருக்ஷ ராஜ பாநு பாவகாக்ஷ தே நம: ஶிவாய
ரக்ஷ மாம் ப்ரபந்நமாத்ர ரக்ஷ தே நம: ஶிவாய ॥

**त्र्यक्ष**-மூன்று கண்களையுடையவரே **दीनसत्कृपाकटाक्ष**-ஏழைகளிடத்தில் நல்ல கருணையுடன் கூடிய கடைக்கண் பார்வையை உடையவரே **शिवाय**-மங்கள உருவமுள்ள **ते**-உமக்கு **नमः**-வணக்கம். **दक्ष**-தக்ஷனுடைய **सप्ततन्तु**-யாகத்தை **नाश**-அழிப்பதில் **दक्ष**-திறமை வாய்ந்தவரே **शिवाय**-சிவபெருமானாகிய **ते**-உமக்கு **नमः**-வணக்கம். **ऋक्षराज**-சந்திரன் **भानु**-ஸூர்யன் **पावक**-அக்னி இவர்களை **अक्ष**-கண்களாக உடையவரே **शिवाय**-சிவபெருமானாகிய **ते**-உமக்கு **नमः**-வணக்கம். **प्रपन्नमात्र**-சரணமடைந்தவர் யாவரையும் **रक्ष**-காக்கின்றவரே **मां**-என்னை **रक्ष**-காப்பாற்றும். **शिवाय**-சிவபெருமானாகிய **ते**-உமக்கு **नमः**-வணக்கம்.

சிவபெருமான் மூன்று கண்களையுடையவர். சந்திரன் சூர்யன், அக்னி இம்மூன்றும் அவருடைய மூன்று கண்களாக விளங்குகின்றன. அவர் தீனதயாளு. அவர் ஏழைகளைத்

தன்னுடைய கடைக்கண்களால் பார்த்து அவர்களுக்கு அனுக்ரஹம் செய்கின்றார். அவர் துஷ்டர்களை நிக்ரஹம் செய்கிறார். தக்ஷன் சிவபெருமானை அவமதித்ததால் அவர், அவனுடைய யாகத்தையழித்து அவனுடைய கர்வத்தையும் ஒழித்தார். அவர் தன்னை அண்டுகின்றவர்களெல்லோரையும் காக்கின்றார். அவ்வாறு விளங்கும் பரமேச்வரனை நாம் வணங்குவோமாக. அவர் நம்மெல்லோரையும் காத்தருளட்டும். (19)

न्यङ्कुपाणये शिवंकराय ते नमः शिवाय
संकटाब्धितीर्णकिंकराय ते नमः शिवाय ।
कङ्कभीषिताभयंकराय ते नमः शिवाय
पङ्कजाननाय शंकराय ते नमः शिवाय ॥ २० ॥

ந்யங்கு பாணயே ஶிவங்கராய தே நம: ஶிவாய
ஸங்கடாப்தி தீர்ண கிங்கராய தே நம: ஶிவாய ।
கங்கபீஷிதாபயங்கராய தே நம: ஶிவாய
பங்கஜாநநாய ஶங்கராய தே நம: ஶிவாய ॥

**न्यङ्कुपाणये**–மானைக் கையில் வைத்துக்கொண்டிருப்பவரும் **शिवंकराय**–நன்மையைச் செய்கின்றவருமான **शिवाय**–சிவபெருமானாகிய **ते**–உமக்கு **नमः**–வணக்கம். **संकटाब्धि**–ஆபத்தெனும் கடலை **तीर्ण**–கடந்த **किंकराय**–ஸேவகர்களையுடைய **शिवाय**–சிவபெருமானாகிய **ते**–உமக்கு **नमः**-வணக்கம். **कङ्कभीषित**–யமனால் பயமுறுத்தப்பட்டவனுக்கு **अभयंकराय**–அபயமளித்துக்காக்கின்ற **शिवाय**–சிவபெருமானாகிய **ते**உமக்கு **नमः**-வணக்கம். **पंकजाननाय**–தாமரைபோன்ற முகத்தை உடையவரும் **शंकराय**-சுபத்தைச் செய்கின்றவருமான **शिवाय**-சிவபெருமானாகிய **ते**–உமக்கு **नमः**–வணக்கம்.

சிவபெருமான் தன் கையில் மான் ஒன்றை வைத்துக் கொண்டிருக்கின்றார். அவர் எல்லா லோகங்களுக்கும் நன்மை செய்கின்றார். தனக்குப் பணி செய்வதில் ஈடு

பட்டுள்ள பக்தர்களின் இன்னல்களனைத்தையும் தீர்த்து அவர்களைக் காப்பாற்றுகின்றார். யம பயத்தைப் போக்கு கின்றார். அவருடைய முகம் தாமரைபோல் அழகுவாய்ந்தது. இவ்வாறு விளங்கும் சிவபெருமானை நாம் வணங்குவோமாக.

कर्मपाशनाश नीलकण्ठ ते नमः शिवाय
शर्मदाय वर्यभस्मकण्ठ ते नमः शिवाय ।
निर्ममर्षिसेवितोपकण्ठ ते नमः शिवाय
कुर्महे नतीर्नमद्विकुण्ठ ते नमः शिवाय ॥ २१ ॥

கர்மபாஶ நாஶ நீலகண்ட தே நம: ஶிவாய
ஶர்மதாய வர்யபஸ்மகண்ட தே நம: ஶிவாய ।
நிர்மமர்ஷிஸேவிதோபகண்ட தே நம: ஶிவாய
குர்மஹே நதீர் நமத்விகுண்ட தே நம: ஶிவாய ॥

**कर्मपाशनाश**–வினைகளின் பாசத்தையறுக்கின்றவனே **नीलकण्ठ**–நீலமான கழுத்தையுடையவனே **शिवाय**–சிவ பெருமானாகிய **ते**–உமக்கு **नमः**–வணக்கம். **वर्यभस्मकण्ठ**–சிறந்த திருநீறைக் கழுத்தில் பூசிக்கொண்டவரே **शर्मदाय**–ஸுகத்தைத் தருகின்ற **शिवाय**–சிவபெருமானுன **ते**–உனக்கு **नमः**–வணக்கம். **निर्ममर्षि**–மமதையற்ற முனிவர்களால் **सेवितोपकण्ठ**–அருகில் ஸேவிக்கப்பட்டவரே **शिवाय**–சிவ பெருமானுன **ते**–உமக்கு **नमः**–வணக்கம். **नमद्विकुण्ठ**–விஷ்ணுவால் வணங்கப்பெற்றவரே **ते**–உமக்கு **नतीः**–நமஸ்காரங்களை **कुर्महे**–செய்கிறோம். **शिवाय**–சிவபெருமானுக்கு **नमः**–வணக்கம்.

சிவபெருமான் நம்முடைய வினைகளின் பாசத்தை யறுத்து நம்மைக் காக்கின்றார். காலகூடவிஷத்தைப் பருகியதால் அவருடைய கழுத்து நீலமாகத் தோன்று கின்றது. மேலும் திருநீர் அணிந்திருப்பதால் அது வெளுப் பாகவும் காணப்படுகின்றது. தன் அடிபணிந்தவர்களுக்கு க்ஷேமத்தைத் தருகிறார். மமதையைவிட்டு ஒன்றிலும்

பற்றில்லாத முனிவர்கள் அவர் அருகில் இருந்து ஸேவிக்கின்றனர். விஷ்ணுவும் சிவனை வணங்கி அவர் அருள் பெறுகிறார். இந்த பரமசிவனைப் பலதடவை வணங்குகிறோம்

विष्टपाधिपाय नम्रविष्णवे नमः शिवाय
शिष्टविप्रहृद्गुहाचरिष्णवे नमः शिवाय ।
इष्टवस्तुनित्यतुष्टजिष्णवे नमः शिवाय
कष्टनाशनाय लोकजिष्णवे नमः शिवाय ॥ २२ ॥

விஷ்டபாதிபாய நம்ரவிஷ்ணவே நமঃ ஶிவாய
சிஷ்ட விப்ர ஹ்ருத்குஹா சரிஷ்ணவே நமঃ ஶிவாய ।
இஷ்டவஸ்து நித்ய துஷ்ட ஜிஷ்ணவே நமঃ ஶிவாய
கஷ்ட நாஶநாய லோக ஜிஷ்ணவே நமঃ ஶிவாய॥

**विष्टपाधिपाय**–உலகங்களுக்குத் தலைவனையும் **नम्रविष्णवे**–வணங்குகின்ற விஷ்ணுவையுடையவனையும் இருக்கின்ற **शिवाय**–சிவபெருமானுக்கு **नमः**–வணக்கம். **शिष्ट**–ஸதாசார ஸம்பன்னர்களான **विप्र**–அந்தணர்களுடைய **हृत्**–ஹ்ருதயமாகிய **गुहाचारिष्णवे**–குஹையில் ஸஞ்சரிக்கின்ற **शिवाय**–சிவபெருமானுக்கு **नमः**–வணக்கம். **इष्टवस्तु**–விரும்பிய பொருள் கிடைப்பதால் **नित्यतुष्ट**–எப்பொழுதும் மகிழ்ச்சியடைந்த **जिष्णवे**–இந்திரனை உடைய **शिवाय**–சிவபெருமானுக்கு **नमः**–வணக்கம். **कष्टनाशनाय**–இன்னல்களை அழிக்கின்றவனையும் **लोकजिष्णवे**–எல்லா உலகங்களையும் ஜயிக்கின்றவனுமான **शिवाय**–சிவபெருமானுக்கு **नमः**–வணக்கம்.

சிவபெருமான் ஒருவனே மூன்று உலகங்களுக்கும் அதிபதி. எல்லாவற்றையும் ஜயித்தவன். மகாவிஷ்ணுவும் கூட அவனுக்குப் பணிகின்றார். அவன் நல்ல ஆசாரத்தை அனுஷ்டிக்கின்ற அந்தண சிரேஷ்டர்களின் இதயத்தில் எப்பொழுதும் வஸிக்கிறான். சிவன் அருளால் தான் விரும்பிய பொருள்கள் எல்லாவற்றையும் அடைந்து தேவேந்திரன்

எப்பொழுதும் இன்பம் அடைகிறான். அடியார்களின் துன்பங்களைப் போக்குகிறான். இந்த சிவபெருமானுக்கு வணக்கம். (22)

अप्रमेयदिव्यसुप्रभाव ते नमः शिवाय
सत्प्रपन्नरक्षणस्वभाव ते नमः शिवाय ।
स्वप्रकाश निस्तुलानुभाव ते नमः शिवाय
विप्रडिम्भदर्शितार्द्रभाव ते नमः शिवाय ॥ २३ ॥

அப்ரமேய திவ்ய ஸுப்ரபாவ தே நம: ஶிவாய
ஸத்ப்ரபந்ந ரக்ஷணஸ்வபாவ தே நம: ஶிவாய ।
ஸ்வப்ரகாஶ நிஸ்துலாநுபாவ தே நம: ஶிவாய
விப்ரடிம்ப தர்ஶிதார்த்ர பாவ தே நம: ஶிவாய ॥

**अप्रमेय**-அளவிடமுடியாத **दिव्यसुप्रभाव**-திவ்யமான சிறந்த பராக்ரமத்தையுடையவனே **शिवाय**-சிவபெருமானாகிய **ते**-உனக்கு **नमः**-வணக்கம். **सत्प्रपन्नरक्षणस्वभाव**-தன்னை யண்டிய நல்ல மனிதர்களைக் காப்பாற்றும் தன்மை வாய்ந்தவனே **शिवाय**-சிவபெருமானாகிய **ते**-உனக்கு **नमः**-வணக்கம். **स्वप्रकाश**-தன்னைத்தானே பிரகாசப்படுத்திக் கொள்பவனே **निस्तुलानुभाव**-இணையற்ற மஹிமைபெற்றவனே **शिवाय**-சிவபெருமானாகிய **ते**-உனக்கு **नमः**-வணக்கம். **विप्रडिम्ब**-பிராமணனுடைய குழந்தையிடம் **दर्शित**-காட்டப்பட்ட **आर्द्रभाव**-கருணையையுடையவனே **शिवाय**-சிவபெருமானாகிய **ते**-உனக்கு **नमः**-வணக்கம்.

சிவபெருமான் மிகுந்த பலம் வாய்ந்தவர். அவர் தன்னை யண்டிய அனைவரையும் புனிதர்களாகச் செய்து அவர்களைக் காத்தருள்கிறார். அவர் ஸ்வயம் ஜ்யோதிஸ்வரூபர். உலகில் உள்ள எல்லாப் பொருள்களையும் அவரே தனது ஒளியால் விளங்கவைக்கிறார். மேலும் அவருடைய தேஜஸாலேயே அவர் விளங்குகின்றார். அவருடைய மஹிமைக்கு ஒப்பானது ஒன்றுமே இல்லை. அவர் அந்தணகுமாரனாகிய மார்க்கண்

டேயனுக்கு இரக்கம் காட்டி அவனைக் காலனிடமிருந்து காப் பாற்றினார். இவ்வாறு மஹிமையுடன் விளங்கும் சிவ பெருமானை நாம் வணங்குவோமாக. (23)

सेवकाय मे मृड प्रसीद ते नमः शिवाय
भावलभ्य तावकप्रसाद ते नमः शिवाय ।
पावकाक्ष देवपूज्यपाद ते नमः शिवाय
तावकाङ्घ्रिभक्तदत्तमोद ते नमः शिवाय ॥ २४ ॥

*ஸேவகாய மே ம்ருட ப்ரஸீத தே நம: ஶிவாய*
*பாவலப்ய தாவக ப்ரஸாத தே நம: ஶிவாய ।*
*பாவகாக்ஷ தேவபூஜ்ய பாத தே நம: ஶிவாய*
*தாவகாங்க்ரி பக்த தத்த மோத தே நம: ஶிவாய॥*

**मृड**–இன்பத்தைத்தரும் பரமேச்வரனே **सेवकाय**–உனக் குப் பணிசெய்கின்றவனான **मे**–எனக்கு **प्रसीद**–அனுக்ரஹம் செய் **शिवाय**–சிவபெருமானான **ते**–உனக்கு **नमः**–வணக்கம். **भावलभ्य**-தூயமனம் உள்ளவர்களால் அடையத்தகுந்த **तावक-प्रसाद**–உங்களுடைய அநுக்ரஹத்தை உடையவரே **शिवाय**– சிவபெருமானாகிய **ते**–உனக்கு **नमः**–வணக்கம். **पावकाक्ष**– அக்னியைக் கண்ணாகக்கொண்டவரே **देवपूज्यपाद**-தேவர் களால் பூஜிக்கத்தக்க பாதங்களையுடையவரே **शिवाय**–சிவ பெருமானாகிய **ते**–உனக்கு **नमः**–வணக்கம். **तावकाङ्घ्रिभक्त**– உன்னுடைய பாதகமலங்களில் பக்தி செலுத்துகின்றவர் களுக்கு **दत्त**–கொடுக்கப்பட்ட **मोद**–ஆனந்தத்தையுடைய வனே **शिवाय**–சிவபெருமானான **ते**–உனக்கு **नमः**–வணக்கம்.

சிவபெருமான் தனக்குப் பணியாற்றும் ஸேவகர்களுக்கு அநுக்ரஹம் செய்கின்றார். அதிலும் தூய மனத்துடன் உங்களைப் போற்றுபவருக்குத்தான் உங்கள் அருள் கிடைக்கும். "**आभ्यन्तरवृत्तिमात्ररसिकः बाह्यानपेक्षः**" என்கின்றார் ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர். '**भावग्राह्यं**' என்று சுவேதாச்வதர உபநிஷத் கூறுகிறது. அவர் அக்னியைக்

கண்ணுக உடையவர். அவருடைய அநுக்ரஹத்தைப் பெறுவதற்காகத் தேவர்களும் அவருடைய பாதங்களைப் போற்றுகின்றனர். தன்னுடைய திருவடிகளில் பக்தி செலுத்துகின்றவர்களிடம் இரக்கம் காட்டி பரமேச்வரன் அவர்களுக்கு மிகுந்த இன்பத்தைத் தந்தருள்கிருர். இவ்வாறு விளங்கும் பரமேச்வரனை நாம் வணங்குவோமாக.(24)

भुक्तिमुक्तिदिव्यभोगदायिने नमः शिवाय
शक्तिकल्पितप्रपञ्चभागिने नमः शिवाय ।
भक्तसंकटापहारयोगिने नमः शिवाय
युक्तसन्मनःसरोजयोगिने नमः शिवाय ॥ २५॥

புக்தி முக்தி திவ்ய போக தாயிநே நம: ஶிவாய
சக்தி கல்பித ப்ரபஞ்ச பாகிநே நம: ஶிவாய ।
பக்த ஸங்கடாபஹார யோகிநே நம: ஶிவாய
யுக்த ஸந்மந: ஸரோஜ யோகிநே நம: ஶிவாய ॥

**भुक्तिमुक्ति**-இவ்வுலகிலுள்ள ஸுகம், மோக்ஷம் **दिव्यभोग**-தேவபோகம் இவைகளை **दायिने**-கொடுத்தருளும் **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம். **शक्तिकल्पित**-தன்னுடைய மாயையால் தோற்றுவிக்கப்பட்ட **प्रपञ्च**-பிரபஞ்சத்தில் **भागिने**-பாகமுடைய **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம். **भक्त**-பக்தர்களுடைய **संकट**-கஷ்டங்களை **अपहार**-போக்குவதில் **योगिने**-ஈடுபட்டுள்ள **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம். **युक्त**-தன்னிடத்தில் பக்தி வைத்துள்ள **सन्मनः**-**सरोज**-நல்ல மனிதர்களின் மனமாகிற தாமரையில் **योगिने**-சேர்ந்திருக்கின்ற **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம்.

சிவபெருமான் தன்னுடைய பக்தர்களுக்கு அவரவர் வேண்டுகின்றபடி இவ்வுலகில் ஸுகத்தையும் தேவலோக ஸுகத்தையும் மோக்ஷத்தையும் தந்தருள்கின்ருர். அவரே பரம்பொருள். விகாரமற்றவர். அவ்வாறு மாறுதலற்றவராக இருப்பினும் அவர் தன்னுடைய மாயா சக்தியால்

தன்னிடத்திலேயே பற்பல மாறுபாடுகள் வாய்ந்த இவ்வுலகனைத்தையும் தோன்றும்படி செய்கின்றார். இதைக் கொண்டு அறியாதவர் சிவன் உலகைப் படைத்ததாகக் கூறுகின்றனர். மாயையால் தோன்றும் பிரபஞ்சம் பொய். அதை ஈசுவரன் படைத்தார் என்பதும் வாஸ்தவம் அல்ல. அவர் தன்னுடைய பக்தர்களுக்கு ஏற்படும் இன்னல்களை யெல்லாம் களைந்து அவர்களுக்கு அருள்புரிவதிலேயே ஈடுபட்டவர். மேலும் அவர் தன்னைத் தியானம் செய்யும் மஹான்களுடைய ஹ்ருதயகமலத்தில் என்றும் வாஸம் செய்துகொண்டிருக்கின்றார். இவ்வாறு தோன்றும் பரமேச்வரனை நாம் என்றும் பணிவோமாக. (25)

अन्तकान्तकाय पापहारिणे नमः शिवाय
शन्तमाय दन्तिचर्मधारिणे नमः शिवाय ।
संतताश्रितव्यथाविदारिणे नमः शिवाय
जन्तुजातनित्यसौख्यकारिणे नमः शिवाय ॥ २६ ॥

அந்தகாந்தகாய பாப ஹாரிணே நம: ஶிவாய
ஶந்தமாய தந்திசர்ம தாரிணே நம: ஶிவாய ।
ஸந்ததாஶ்ரித வ்யதா விதாரிணே நம: ஶிவாய
ஜந்து ஜாத நித்யஸௌக்ய காரிணே
நம: ஶிவாய ॥

**अन्तकान्तकाय**-யமனுக்கும் யமனும் **पापहारिणे**-பாபத்தைப் போக்குகின்றவருமான **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம். **शन्तमाय**-பரமானந்த ரூபியாயும் **दन्ति**-யானையின் **चर्म**-தோலை **धारिणे** அணிந்துகொண்டிருப்பவருமான **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம். **सन्तताश्रित**-தன்னை எப்பொழுதும் அண்டியவர்களின் **व्यथा**-துன்பத்தை **विदारिणे**-பிளக்கின்றவரான **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம். **जन्तुजात**-எல்லாப் பிராணிவர்க்கங்களுக்கும் **नित्य**-அழிவற்ற **सौख्य**-இன்பத்தை **कारिणे**-செய்கின்றவரான **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம்.

சிவபெருமான் யமனையும் கொன்றவர். ஸகல பாபங்களையும் அழிக்கின்றவர். ஆனந்தஸ்வரூபி. யானையின் தோலையணிந்திருப்பவர். தன்னையே என்றும் சரணமடைந்து நிற்கும் பக்தர்களின் துன்பங்கள் அனைத்தையும் தீர்க்கும் தன்மை வாய்ந்தவர். உலகத்திலுள்ள ஸகலவிதமான ஜீவஜந்துக்களுக்கும் அழிவற்ற ஸுகத்தையளிப்பவர். இவ்வாறு விளங்கும் சிவபெருமானை நாம் என்றும் வணங்குவோமாக. (26)

**शूलिने नमो नमः कपालिने नमः शिवाय**
**पालिने विरिञ्चिमुण्डमालिने नमः शिवाय ।**
**लीलिने विशेषरुण्डमालिने नमः शिवाय**
**शीलिने नमः प्रपुण्यशालिने नमः शिवाय ॥ २७ ॥**

*ஶூலிநே நமோ நம: கபாலிநே நம: ஶிவாய*
*பாலிநே விரிஞ்சிமுண்டமாலிநே நம: ஶிவாய ।*
*லீலிநே விசேஷருண்டமாலிநே நம: ஶிவாய*
*ஶீலிநே நம: ப்ரபுண்யஶாலிநே நம: ஶிவாய ॥*

**शूलिने**-சூலமென்ற ஆயுதத்தையுடைய சிவபெருமானுக்கு **नमो नमः**-பன்முறை வணக்கம். **कपालिने**-மண்டையோட்டை வைத்திருக்கும் **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம். **पालिने**-உலகங்களை ரக்ஷிக்கும் தன்மைவாய்ந்தவனும் **विरिञ्चिमुण्डमालिने**-பிரம்மதேவரின் தலைகளை மாலையாகத் தரித்துக்கொண்டிருப்பவனுமான **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம். **लीलिने**-லீலையுடன்கூடியவரும் **विशेषरुण्डमालिने**-விசேஷமான தலையில்லா உடல்களின் வரிசையை உடையவனுமான **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம். **शीलिने**-நல்ல ஸ்வபாவத்தையுடையவனான சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம். **प्रपुण्यशालिने**-மிகுந்த புண்யத்தால் விளங்கும் **शिवाय**-சிவபெருமானுக்கு **नमः**-வணக்கம்.

சிவபெருமான் தன்னுடைய கைகளில் சூலத்தையும் மண்டையோட்டையும் வைத்துக்கொண்டிருக்கிறுர். அவர் தன்னுடைய பக்தர்களைக் காக்கின்றுர். பிரம்மதேவரின் தலையைக் கொய்து அதையே தமக்கு அணிகலமாக அமைத்துக்கொண்டிருக்கிறுர். தலையில்லா உடல்களையும் தனியாக வைத்துக்கொண்டிருக்கிறுர். இத்தனை பயங்கர வேஷமிருந்தும் இது எல்லாம் அவருக்கு விளையாட்டுத்தான். இவை இருந்தும் அவர் பரிசுத்தர். நல்ல ஸ்வபாவம் உள்ளவர். எல்லோரையும் காப்பாற்றுபவர். இவ்வாறு விளங்கும் சிவபெருமானை நாம் வணங்குவோமாக. (27)

**शिवपञ्चाक्षरमुद्राचतुष्पदोल्लासपद्यमणिघटिताम् ।**
**नक्षत्रमालिकामिह दधदुपकण्ठं नरो भवेत्सोमः ॥ २८ ॥**

சிவபஞ்சாக்ஷர முத்ரா சதுஷ்பதோல்லாஸ பத்யமணி கடிதாம் ।
நக்ஷத்ரமாலிகாமிஹ ததுபகண்டம் நரோ பவேத் ஸோம: ॥

**शिवपञ्चाक्षरमुद्रा**-சிவபஞ்சாக்ஷரம் என்ற முத்திரை உள்ள **चतुष्पद्**-நான்கு அடிகளுடன் **उल्लास**-சிறந்து விளங்குகின்ற **पद्यमणि**-பாக்களாகிய ரத்னங்களால் **घटितां**-செய்யப்பட்டதான **नक्षत्रमालिकां**-அழகிய நக்ஷத்ர மாலையை (இருபத்தேழு ஸ்தோத்ரங்கள் உள்ள இந்த சிவபஞ்சாக்ஷர நக்ஷத்ர மாலையை) **इह**-இங்கு **उपकण्ठं**-கழுத்தில் **दधत्**-அணிந்துகொண்டு **नरः**-மனிதன் **सोमः**-உமையுடன்கூடிய பரமசிவனுக **भवेत्**-ஆவான்.

இந்த சுலோகத்தில் பலச்ருதி கூறப்படுகின்றது சிவ பஞ்சாக்ஷர நக்ஷத்ரமாலா ஸ்தோத்ரம் என்று இந்த ஸ்துதிக்குப் பெயர் வைக்கப்பட்டுள்ளது. நக்ஷத்திரமாலையென்பதற்கு இரண்டு பொருள். ஒன்று நக்ஷத்திரங்களின் வரிசை, இரண்டு இருபத்தேழு ரத்னங்களால் செய்யப்பட்ட மாலை. **सैव नक्षत्रमाला स्यात्सप्तविंशतिमौक्तिकैः** என்பது இதன்

லக்ஷணம். இந்த ஸ்தோத்ரத்தில் இருபத்தேழு சுலோகங்கள் அமைந்துள்ளன. ஒவ்வொரு சுலோகமும் ஓர் ரத்னம். இவ்வாறு இருபத்தேழு ரத்னங்கள் இதில் இருப்பதால் இந்த ஸ்தோத்திரத்தின் பெயர் மிகப் பொருத்தமாக அமைந்திருக்கின்றது. இந்த ஸ்தோத்திரத்தில் சிவ பஞ்சாக்ஷரம் என்ற முத்திரை வைக்கப்பட்டிருக்கின்றது. நான்கு அடிகள் கொண்ட ஒவ்வொரு சுலோகத்திலும் ஒவ்வொரு அடியின் கடைசியிலும் இந்த பஞ்சாக்ஷரம் இருப்பதைக் காணலாம். இந்த பஞ்சாக்ஷர ரத்னமாலை மிகச்சிறப்பு வாய்ந்தது. இம் மாலையிலுள்ள ஒவ்வொரு ரத்னத்திலும் நான்கு பக்கங்களிலும் மிகச்சிறந்த மந்த்ரராஜமான பஞ்சாக்ஷர முத்திரை பொறிக்கப்பட்டிருப்பது விசேஷமல்லவா!

தனது மனைவியர்களான இருபத்தேழு நக்ஷத்திரப் பெண்களின் வரிசையை அருகில் வைத்துக்கொண்டு பிரகாசிப்பவன் ஸோமன் (சந்திரன்). சிறந்த ரத்னங்களால் அமைக்கப்பெற்ற நக்ஷத்திர மாலையைக் கழுத்தில் அணிந்துகொள்பவனும் ஸோமனை (சந்திரனை)ப்போல் பார்ப்பவர் மனதையும் கண்களையும் கவரும்படியாக மிக்க அழகுடன் விளங்குவான். ஆனால் ஒவ்வொரு அடியிலும் பஞ்சாக்ஷர முத்திரை பதிப்பிக்கப்பெற்ற இருபத்தேழு சுலோக ரத்னங்கள் கொண்ட இந்த 'சிவபஞ்சாக்ஷர நக்ஷத்ரமாலா' ஸ்தோத்திரத்தைக் கழுத்தில் அணிபவன் அதாவது மனப்பாடம் செய்து எப்பொழுதும் வாயால் சொல்கிறவன் ஸோமனாக, உமையுடன் கூடிய பரமேசுவரனாக ஆகிவிடுவான். பக்தியுடன் பாராயணம் செய்கின்றவனுக்கு சிவஸாரூப்யம் கிடைக்கும். (28)

**சிவபஞ்சாக்ஷர நக்ஷத்ரமாலா ஸ்தோத்ரம் முற்றிற்று.**



॥ श्रीः ॥

# ॥ अर्धनारीश्वरस्तोत्रम् ॥

## அர்த்தநாரீச்வர ஸ்தோத்திரம்

[பரமசிவனுடைய மூர்த்திகளில் அர்தநாரீசுவரர் என்பது ஒன்று. ஒரே சரீரத்தில் பாதி பாகம் (இடது பாகம்) பெண் உருவமாகவும் அதாவது சக்தி ரூபமாகவும் மற்றோர் பாதி (வலது பாகம்) புருஷ ரூபமாகவும் அதாவது சிவ ரூபமாகவும் அமைந்துள்ளது. சிவனும் சக்தியும் ஓர் உடலிலேயே இணைந்திருக்கின்றனர். ஆகையால் ஒரு பாதியில் சிவனுடைய லக்ஷணங்களும் மற்றோர் பாதியில் தேவியின் லக்ஷணங்களும் காணப்படுகின்றன. இவ்வித அர்த்தநாரீசுவர மூர்த்தியைத் துதிக்கும் இந்த ஸ்தோத்திரம் 8 சுலோகங்கள் கொண்டது. 9வது சுலோகம் பலனைக் கூறுவது. ஒவ்வொரு அம்சத்திலும் தேவியின் லக்ஷணத்தையும் சிவனின் லக்ஷணத்தையும் சேர்த்தே கூறுகிறார். இந்த ஸ்தோத்திரத்தைப் படிப்பதால் ஈசுவரன், தேவீ இருவர்களுடைய அருளையும் பெறலாம்.]

चाम्पेयगौरार्धशरीरकायै कर्पूरगौरार्धशरीरकाय ।
धम्मिल्लकायै च जटाधराय नमः शिवायै च नमः शिवाय ॥ १ ॥

சாம்பேய கௌரார்த ஶரீரகாயை
கர்பூர கௌரார்த ஶரீரகாய ।
தம்மில்லகாயை ச ஜடாதராய
நம: ஶிவாயை ச நம: ஶிவாய ॥

**चाम्पेयगौर**—சண்பகமலர்போல் மஞ்சள் நிறமான **अर्ध**—பாதி **शरीरकायै**—தேகத்தையுடையவளும் **धम्मिल्लकायै**—அழகிய கூந்தலையுடையவளுமான **शिवायै**—பார்வதீ தேவிக்கு **नमः**—வணக்கம். **कर्पूरगौर**—கர்பூரம்போல் வெளுப்பான **अर्ध**-**शरीरकाय**—பாதி தேகத்தையுடையவரும் **जटाधराय**—சடையை தரித்துக்கொண்டிருப்பவருமான **शिवाय**—சிவபெருமானுக்கு **नमः**—வணக்கம்.

இந்த சுலோகத்தில் அர்த்தநாரீச்வரனைப் பற்றிக்கூறப் பட்டுள்ளது. சிவபெருமான் பர்வதராஜனின் மகளாகிய உமையின் த வ த் தா ல் வசீகரிக்கப்பட்டவராகத் தன்னுடைய பாதிசரீரத்தைப் பார்வதீ தேவிக்கு கொடுத்து அவளையும் தன்னுடைய உடலுடன் ஒன்றுபட்டவளாகச் செய்துகொண்டு விட்டார். ஆதலால் அவரது பாதி உடல் ஸ்திரீயின் வடிவு பெற்றதாயும் மற்றொரு பாதி புருஷ ரூபத்துடனும் காணப்படுகின்றது. இவ்வாறு விளங்கும் பகவானுடைய ஸ்வரூபத்தை வர்ணிக்கும் பொழுது முதல் பகுதி பார்வதீதேவியையும் இரண்டாம்பகுதி பரமேச்வரனையும் முறையே குறிப்பதாக அமைந்துள்ளது. ஆதலால் இங்கு **यथासंख्यं** என்ற அணி விளங்குகிறது. இந்த ஸ்துதி முழுவதும் **इन्द्रवज्रा** என்ற சந்தஸில் எழுதப்பட்டிருக்கிறது.

பார்வதீ தேவி சண்பக மலர்போல் பொன் நிறம் உள்ளதும் மென்மை வாய்ந்ததும் மிகுந்த அழகுடன் கூடினதுமான தேஹத்தை உடையவளாக விளங்குகின்றாள். பரமேசுவரனோ கர்பூரம்போல் வெளுப்பான சரீரத்தை உடையவனாகக் காணப்படுகின்றான். இருவரும் இணைந்திருப்பதால் இவர்களுடைய திருமேனி மிகவும் பொலிவு பெற்றுப் பிரகாசிக்கின்றது. பார்வதீ தேவி அ ழ கி ய கூந்தலையுடையவள். ப ர மே ச் வ ர னோ வெ னில் ஜடா மண்டலதாரி. கேசபாசத்தின் ஓர் பகுதி அழகிய கூந்தல் உடையதாயும் மற்றோர்பகுதி சடையுடையதாயும் தோன்றுவதால் பார்ப்பவர்களுடைய மனதைக் கவர்கின்றது. இவ்வாறு சிவனும் சக்தியும் கலந்த அ ர் த் த நா ரீ ச் வ ர ஸ்வரூபத்திற்கு நமஸ்காரம். (1)

**कस्तूरिकाकुङ्कुमचर्चितायै चितारजःपुञ्जविचर्चिताय ।**
**कृतस्मरायै विकृतस्मराय नमः शिवायै च नमः शिवाय ॥ २ ॥**

கஸ்தூரிகா குங்கும சர்ச்சிதாயை
சிதாரஜ:புஞ்ஜ விசர்ச்சிதாய |

க்ருதஸ்மராயை விக்ருதஸ்மராய
நம: ஶிவாயை ச நம: ஶிவாய ॥

**कस्तूरिका**-கஸ்தூரி **कुङ्कुम**-குங்குமம் இவைகளால் **चर्चितायै**-பூசப்பட்டவளாயும் **कृतस्मरायै**-காமஸஞ்ஜீவினியாயும் உள்ள **शिवायै**-பரமேச்வரிக்கு **नमः**-வணக்கம். **चितारजः-पुञ्ज**-சுடுகாட்டுச் சாம்பல் கூட்டத்தால் **विचर्चिताय**-பூசப்பட்டவராயும் **विकृतस्मराय**-மன்மதனையழித்தவருமான **शिवाय**-பரமேச்வரனுக்கு **नमः**-வணக்கம்.

பார்வதீதேவி கஸ்தூரி குங்குமம் முதலியவற்றை அணிந்துகொண்டு தேஜோமயமாய் பிரகாசிக்கின்றாள். அவளே காமஸஞ்ஜீவிநியாக இருந்துகொண்டு லோக சிருஷ்டியின் நிமித்தம் எல்லோருடைய மனதிலும் காமத்தை யுண்டுபண்ணுகின்றாள். பரமேச்வரனோ எனில் சுடுகாட்டுச் சாம்பலைத் தன் உடல் முழுவதும் பூசிக்கொண்டிருக்கின்றார். அவர் மன்மதனை எரித்துச் சாம்பலாகச் செய்தார். இவ்வாறு அர்த்தநாரீச்வரனுடைய ஓர் பாதி சரீரம் அழகுவாய்ந்த ஸ்த்ரீரூபமாயும் மற்றொரு பாதி தேஜோமயமான புருஷரூபமாயும் விளங்குகின்றது. இவ்வாறு விளங்கும் பரமேச்வரிக்கும் பரமேச்வரனுக்கும் வணக்கம். இந்த அர்த்தநாரீஶ்வர ரூபத்தைத் தியானம் செய்து போற்றுவோமாகில் நமது துரிதங்கள் அனைத்தும் நீங்கி நமக்கு ஸகல க்ஷேமங்களும் ஏற்படும். ஏனெனில் பரமேச்வரன் அமங்களமான பொருள்கள் எல்லாவற்றையும் தானே எடுத்துக்கொண்டு பக்தர்களுக்கு அனுக்ரஹம் செய்கின்றார். மேலும் அவர் பக்தர்களுடைய மனதில் எழும் துரபிலாஷைகளையெல்லாம் கொளுத்திச் சாம்பலாக்கிவிடுகின்றார். பரமேச்வரி மிகுந்த மங்களகரமான ரூபத்தை உடையவள். அவள் பக்தர்களுடைய மனதில் சிறந்த காமங்களை உண்டுபண்ணி உலகைக் காத்தருள்கிறாள். ஆகையால் நாமனைவரும் இந்த அர்த்தநாரீச்வரனை வணங்குவோமாக. (2)

**झणत्क्वणत्कङ्कणनूपुरायै पादाब्जराजत्फणिनूपुराय ।**
**हेमाङ्गदायै भुजगाङ्गदाय नमः शिवायै च नमः शिवाय ॥ ३ ॥**

ஜணத்க்வணத் கங்கண நூபுராயை
பாதாப்ஜ ராஜத் பணிநூபுராய ।
ஹேமாங்கதாயை புஜகாங்கதாய
நம: ஶிவாயை ச நம: ஶிவாய ॥

**झणत्कणत्**–இனிய ஒலிகளை எழுப்புகின்ற **कङ्कण**-கைவளையல்களையும் **नूपुरायै**-கால் தண்டைகளையும் உடையவளாயும் **हेमाङ्गदायै**-தங்கமயமான தோள்வளைகளையுடையவளாயுமிருக்கிற **शिवायै**-பரமேச்வரிக்கு **नमः**–வணக்கம். **पादाब्ज**–தாமரை போல் அழகுவாய்ந்த பாதங்களில் **राजत्**–பிரகாசிக்கின்ற **फणि**–பாம்புகளாகிய **नूपुराय**–தண்டைகளையுடையவராயும் **भुजगाङ्गदाय** – பாம்புகளாகிய தோள்வளையுடையவருமான **शिवाय**–பரமேச்வரனுக்கு **नमः**-வணக்கம்.

பார்வதீ தேவி தன்னுடைய கையில் ரத்னங்கள் பதித்த கங்கணங்களையும் காலில் சலங்கைகளுடன் கூடிய தண்டைகளையும் அணிந்திருக்கிருள். அவைகள் இனிமையான ஒலிகளை எழுப்புகின்றன. பரமேச்வரன் தன்னுடைய கையில் பாம்பை வளையலாகவும் காலில் பாம்பையே தண்டையாகவும் அணிந்துகொண்டிருக்கிருன். பார்வதீ தேவியின் புஜத்தில் தங்கத்தோள்வளை பிரகாசிக்கின்றது. பரமேச்வரனுடைய புஜத்திலோவெனில் பாம்பே தோள் வளையாக விளங்குகின்றது. இவ்வாறு பாதி சரீரத்தில் அழகிய ஆபரணங்களையும் மற்ருெரு பாதியில் பாம்புகளையே ஆபரணமாகக் கொண்டவருமான அர்த்தநாரீச்வரனை நாம் வணங்குவோமாக. (3)

**विशालनीलोत्पललोचनायै विकासिपङ्केरुहलोचनाय ।**
**समेक्षणायै विषमेक्षणाय नमः शिवायै च नमः शिवाय ॥ ४ ॥**

விஶால நீலோத்பல லோசனாயை
விகாஸிபங்கேருஹலோசனாய ।
ஸமேக்ஷணாயை விஷமேக்ஷணாய
நம: ஶிவாயை ச நம: ஶிவாய ॥

**विशाल**–அகன்ற **नीलोत्पल**–கருநெய்தல் புஷ்பம்போன்ற **लोचनायै**–கண்களையுடையவளும் **समेक्षणायै**–இரட்டைப்படையான கண்களையுடையவளுமான **शिवायै**–பரமேச்வரிக்கு **नमः**–வணக்கம். **विकासि**–மலர்கின்ற **पङ्केरुह**–தாமரைபோன்ற **लोचनाय**–கண்களையுடையவனும் **विषमेक्षणाय**–மூன்று கண்களையுடையவனுமான **शिवाय**–பரமேச்வரனுக்கு **नमः**–வணக்கம்.

பரமேச்வரி நீலோத்பல மலர்கள்போன்ற இரு கண்கள் படைத்தவள் பரமேச்வரனே எனில் மலர்கின்ற செந்தாமரைப் பூக்கள்போன்ற மூன்று கண்களுடையவன். இவ்வாறு விளங்கும் அர்த்தநாரீச்வரனை நாம் வணங்குவோமாக. (4)

**मन्दारमालाकलितालकायै कपालमालाङ्कितकन्धराय ।**
**दिव्याम्बरायै च दिगम्बराय नमः शिवायै च नमः शिवाय ॥ ५ ॥**

மந்தார மாலா கலிதாலகாயை
கபால மாலாங்கித கந்தராய ।
திவ்யாம்பராயை ச திகம்பராய
நம: ஶிவாயை ச நம: ஶிவாய ॥

**मन्दारमाला**–மந்தாரமலர்களால் தொடுக்கப்பட்ட மாலையால் **कलित**–அழகாக விளங்கும் **अलकायै**–கூந்தலையுடையவளும் **दिव्याम्बरायै**–திவ்யமான பட்டாடை தரித்தவளுமான **शिवायै**–பரமேச்வரிக்கு **नमः**–வணக்கம். **कपालमाला**–மண்டையோடுகளால்செய்யப்பட்ட மாலையால் **आङ्कितकन्धराय**–அடையாளம் செய்யப்பட்ட கழுத்தையுடையவரும் **दिगम्बराय**–திசைகளையே ஆடையாக உடையவருமான **शिवाय**–சிவபெருமானுக்கு **नमः**–வணக்கம்.

பரமேச்வரி மணங்கமழும் மந்தார மலர்களால் ஆன மாலையை அணிந்துகொண்டும் திவ்யமான பட்டாடைகளைத் தரித்துக்கொண்டும் விளங்குகிறாள். பரமேச்வரனோவெனில் தன் கழுத்தில் மண்டையோடுகளின் மாலையை அணிந்து

கொண்டிருக்கிறார். அவருக்குத் திசைகளே ஆடையாக அமைகின்றது. ஆடையில்லாதவராக இருக்கிறார். இவ்வாறு விளங்கும் அர்த்தநாரீச்வரனை நாம் வணங்குவோமாக. (5)

**अम्भोधरश्यामलकुन्तलायै तटित्प्रभाताम्रजटाधराय ।**
**निरीश्वरायै निखिलेश्वराय नमः शिवायै च नमः शिवाय ॥ ६ ॥**

அம்போதர ச்யாமள குந்தலாயை
தடித்ப்ரபா தாம்ர ஜடாதராய ।
நிரீச்வராயை நிகிலேச்வராய
நம: ஶிவாயை ச நம: ஶிவாய ॥

**अम्भोधर**–நீருண்டமேகம்போல் **श्यामल**–கருத்த **कुन्तलायै**–கூந்தலையுடையவளாயும் **निरीश्वरायै**–தனக்கு மேல்பட்ட ஈச்வரன் இல்லாதவளுமான **शिवायै**–பரமேச்வரிக்கு **नमः**–வணக்கம். **तटित्प्रभा**–மின்னல் ஒளிபோல் காந்தியுள்ள **ताम्रजटाधराय**–செஞ்சடை தரித்தவனாயும் **निखिलेश्वराय**–எல்லாவற்றையும் ஆள்பவனாயுமுள்ள **शिवाय**–சிவபெருமானுக்கு **नमः**–வணக்கம்.

பார்வதீதேவி நீருண்ட மேகம்போல் கருப்பான கூந்தலையுடையவள். பரமேச்வரன் மின்னல்கொடிபோல் பிரகாசிக்கும் சிவந்த சடை தரித்தவர். பார்வதீதேவி சக்திஸ்வரூபிணீ. பரமேச்வரன் சிவஸ்வரூபன். சிவனும் சக்தியும் ஒன்றே. இவருக்கு மேல்பட்ட தத்வம் ஒன்றும் இல்லை. உலகை எல்லாம் அடக்கியாள்பவர் இவரே. இவர் ஒருவருக்கும் உட்பட்டவரில்லை. சிவபெருமானும் சக்தியுடன் சேர்ந்தவனாய் எல்லா உலகங்களுக்கும் அதிபனாக விளங்குகின்றார். இவ்வாறு தோன்றும் அர்த்தநாரீச்வரனை நாம் வணங்குவோமாக. (6)

**प्रपञ्चसृष्ट्युन्मुखलास्यकायै समस्तसंहारकताण्डवाय ।**
**जगज्जनन्यै जगदेकपित्रे नमः शिवायै च नमः शिवाय ॥ ७ ॥**

ப்ரபஞ்ச ஸ்ருஷ்ட்யுன்முக லாஸ்யகாயை
ஸமஸ்த ஸம்ஹாரக தாண்டவாய ।
ஜகஜ்ஜநந்யை ஜகதேகபித்ரே
நம: ஶிவாயை ச நம: ஶிவாய ॥

**प्रपञ्च**-உலகை **सृष्ट्युन्मुख**-படைப்பதில் ஈடுபட்ட **लास्य-कायै**-லாஸ்யமென்ற நடனத்தையுடையவளும் **जगज्जनन्यै**-உலகத்திலுள்ள ஸகல ஜீவராசிகளுக்கும் தாயுமான **शिवायै**-பரமேச்வரிக்கு **नमः**-வணக்கம். **समस्त**-எல்லாவற்றையும் **संहारक**-நாசம்செய்கின்ற **ताण्डवाय**-தாண்டவத்தையுடையவரும் **जगदेकपित्रे**-உலகனைத்திற்கும் ஒரே தந்தையுமான **शिवाय**-பரமேச்வரனுக்கு **नमः**-வணக்கம்.

பார்வதீ தேவி எல்லா உலகத்திற்கும் தாய். அவள் உலகனைத்தையும் படைப்பதற்காக லாஸ்யமென்ற நடனத்தில் ஈடுபட்டவளாக இருக்கிறுள். பரமேச்வரன் உலகமெல்லாம் காத்தருளும் தந்தை. அவன் பிரளயகாலத்தில் எல்லாவற்றையும் நாசம் செய்வதற்காக தாண்டவத்தில் ஈடுபடுகிறுன். சக்தியும் சிவனும் உலகத்தின் தாய்தந்தையர்கள். உலகத்திற்கு நடனக் கலையை அளித்தவர்கள். இவர்கள் நடனத்தை லாஸ்யமென்றும் தாண்டவமென்றும் இரண்டாக வகுத்தவர்கள். இவற்றில் லாஸ்யமென்பது ஸ்த்ரீ ந்ருத்யம். இது ஹாவபாவங்கள் நிறைந்தது. இந்த பாவம் நிறைந்த நடனத்தால் பார்வதீ தேவி உலகமனைத்தையும் காமவசப்படுத்தி ஸகல ஜீவராசிகளையும் படைக்கும்படி செய்கின்றுள். தாண்டவமென்பது ஆடவர்களின் நடனம். இது மிகவும் உத்தண்டமானது. பிரளயகாலத்தில் மஹேச்வரன் தன்னுடைய கால்களைத் தூக்கி ஊர்த்வ தாண்டவம் செய்து ஸகல ஜீவராசிகளையும் தனக்குள் அந்தர்கதமாகச் செய்துகொள்கின்றுர். மற்ற காலங்களில் அவர் உலகமனைத்தையும் காத்தருள்கின்றுர். இவ்வாறுக ஸர்வ லோகங்களுக்கும் மாதாபிதாக்களான பார்வதீ பரமேச்வரர்களை நாம் வணங்குவோமாக. (7)

प्रदीप्तरत्नोज्ज्वलकुण्डलायै स्फुरन्महापन्नगभूषणाय ।
शिवान्वितायै च शिवान्विताय नमः शिवायै च नमः शिवाय ॥

ப்ரதீப்த ரத்னோஜ்வல குண்டலாயை
ஸ்புரந் மஹாபந்நக பூஷணாய ।
ஶிவாந்விதாயை ச ஶிவாந்விதாய
நம: ஶிவாயை ச நம: ஶிவாய ॥

**प्रदीप्त**–மிகுந்த பிரகாசத்துடன் கூடிய **रत्नोज्ज्वल**–ரத்னங்களால் ஜ்வலிக்கின்ற **कुण्डलायै**–குண்டலங்களையுடையவளும் **शिवान्वितायै** – சிவனுடன் கூடியவளுமான (மங்களத்துடன் கூடியவளுமான) **शिवायै**–பரமேச்வரிக்கு **नमः** - வணக்கம். **स्फुरन्महापन्नग**–விளங்குகின்ற பெரிய பாம்புகளை **भूषणाय**–ஆபரணங்களாக உடையவனும் **शिवान्विताय**-பரமேச்வரியுடன் கூடியவனுமான (மங்களத்தையுடையவனுமான) **शिवाय**-சிவ பெருமானுக்கு **नमः**-வணக்கம்.

பார்வதீ தேவி ஜ்வலிக்கின்ற ரத்னங்கள் பதித்த குண்டலங்களை அணிந்துகொண்டிருக்கிறுள். அதனுல் அவள் தேஜோமயமாய் விளங்குகின்றுள். அவள் மங்கள ஸ்வரூபிணீ. எப்பொழுதும் சிவபெருமானுடன் இணைந்திருப்பவள். பரமேச்வரன் பிரகாசிக்கின்ற ரத்னங்களையுடைய ஸர்ப்பங்களையே அணிகலங்களாகப் பெற்றவன். என்றும் மங்களத்தையே தருபவன். பரமேச்வரியுடன் என்றும் இணைபிரியாது இருப்பவன். இவ்வாறு ஒருவரை ஒருவர் இணைந்திருப்பவர்களாயும் ஸர்வலோக மாதா, பிதாக்களாயும் உள்ள பார்வதீ பரமேச்வரர்களை நாம் வணங்குவோமாக. (8)

एतत्पठेदष्टकमिष्टदं यो भक्त्या स मान्यो भुवि दीर्घजीवी ।
प्राप्नोति सौभाग्यमनन्तकालं भूयात्सदा तस्य समस्तसिद्धिः ॥ ९ ॥

ஏதத் படேதஷ்டகமிஷ்டதம் யோ
பக்த்யா ஸ மாந்யோ புவி தீர்க்கஜீவீ ।

ப்ராப்நோதி ஸௌபாக்யமநந்தகாலம்
பூயாத் ஸதா தஸ்ய ஸமஸ்தஸித்தி: ॥

यः-எவன் ஒருவன் इष्टद्-அபீஷ்டங்களைத் தருகின்ற एतत् अष्टकं-இந்த எட்டு சுலோகங்களையும் भक्त्या-பக்தியுடன் पठेत्-படிப்பானோ सः-அவன் भुवि-பூலோகத்தில் मान्यः-பூஜிக்கத்தக்கவனாகவும் दीर्घजीवी-நீண்ட நாள் வாழ்கின்றவனாகவும் இருந்துகொண்டு अनन्तकालं-வெகுகாலம் வரையில் सौभाग्यं-நல்லபாக்யத்தை प्राप्नोति-அடைகிறான். तस्य-அவனுக்கு सदा-எப்பொழுதும் समस्तसिद्धिः-எல்லா ஸித்தியும் भूयात्-உண்டாகட்டும்.

இந்த சுலோகத்தில் பலச்ருதி கூறப்படுகின்றது. எவன் ஒருவன் இந்த எட்டு சுலோகங்களையும் பக்தியுடன் படிக்கின்றானோ அவன் உலகத்தில் எல்லோராலும் போற்றப் படுகின்றான். அவன் பல்லாண்டு வாழ்ந்து மிகுந்த பாக்யத்தையும் பெறுகின்றான். அவனுக்கு எல்லாக் காரியங்களிலும் வெற்றி கிடைக்கும். அபீஷ்டங்கள் எல்லாம் நிறைவேறும். (9)

**அர்த்தநாரீச்வர ஸ்தோத்திரம் முற்றிற்று.**



॥ श्रीः ॥

# ॥ श्लोकानुक्रमणिका ॥

